# முன்னுரை

**ப**யபக்தியான நாவல்!

'பேய் உண்டா இல்லையா?' என்ற கேள்வியை ஒருத்தரிடம் பகலில் கேட்டால் 'அதெல்லாம் ஒண்ணுமில்லை, மனப்பிரமை' என்பார். சாயந்தரம் இருட்டுகிற போது கேட்டால், 'நல்ல விஷயமா ஏதாவது பேசுவோமே' என்பார். நடு ராத்திரியில் கேட்டால், 'ப்ளீஸ். எதுவும் பேசாதே, எனக்குப் பயமாக இருக்கு' என்பார்.

இருட்டு - வெளிச்சம், சீதம் - உஷ்ணம், சுகம் - துக்கம், லாபம் - நஷ்டம், வெற்றி - தோல்வி, பிறப்பு - இறப்பு என்ற இயற்கையின் அருமைகளை யாரும் மறுக்க முடியாது. கோஸ்ட்கள், பிசாசுகள், ஆவிகள் மீடியம்கள், ஸ்பிரிட் ஆகிய விஷயங்களும் அப்படித்தான் என்கிறார்கள். இறப்புக்கு முன் என்னும் நிலை இருந்தால் இறப்புக்குப் பின் என்ற ஒரு நிலையும் இருக்கத்தான் இருக்கும்.

விஞ்ஞானக் கண்ணை அதிகம் பயன்படுத்தும் மேற்கத்திய பார்வையிலும் ஸ்பிரிட், கோஸ்ட் ஆராய்ச்சிகள் நீண்ட காலமாக நடந்து கொண்டிருக்கின்றன. அவ்வப்பொழுது அதிசயமான ரிப்போர்ட்டுகள் வெளிவந்து ஆச்சரியப்படுத்துகின்றன.

எத்தனையோ பேர் கோஸ்ட்களை, ஸ்பிரிட்டுகளைப் புகைப்படம் பிடித்திருக்கின்றனர். அவை தெளிவாக இல்லையென்றாலும் பதிவாகியுள்ளன. காமெரா ட்ரிக் என்று அந்தப் புகைப்படக் கலைஞர்களை அவமதிக்க முடியாது. ஏனெனில் அவர்கள் மலிவான தந்திரம் செய்கிற சாதாரணவர்கள் அல்ல. விஞ்ஞானிகள். ஒவ்வொரு அசைவுக்கும், காரண காரிய ஆதாரத்தோடே கருத்தை வெளியிடுகிற ஆராய்ச்சியாளர்கள்.

After death what? *என்ற கேள்வி காலம் காலமாக இருந்து* வருகிறது.

*ஆனால் எத்தனையோ காலத்துக்கு முன் இயற்றப்பட்ட பகவத் கீதையிலும் இதர சமய நூல்களிலும் மரணத்துக்குப் பிந்தைய நிலை என்ன என்பது விளக்கமாகவே கூறப்பட்டுள்ளன. ஒப்புக் கொள்வதும், ஒப்புக் கொள்ளாததும் அந்தந்த மனிதரைப் பொறுத்தது. (அந்தந்தப் பேயைப் பொறுத்தது என்றும் சொல்லலாம்!)*

அந்தகாலேபி ப்ருஹ்ம நிர்வாணம் ருச்சதி - *(மரண காலத்திலாவது - ஆன்ம சிந்தனையோடு இருப்பவன் உத்தம கதியை அடைகிறான்)*

*உயிர் துடிக்கும் கடைசிக் கட்டத்தில் மனிதன் எதை நினைத்துக் கொண்டு இருக்கிறானோ, அவன் அந்த ஆசையைப் பூர்த்தியாக்கிக் கொள்ள மறுபடி பிறக்கிறான்.*

*'என்னை நினைத்துக் கொண்டு இறக்கிறவன் என்னையே அடைகிறான்!' என்கிறார் ஸ்ரீகிருஷ்ணர்.*

*'பணம், காசு, பாசம், பற்று, குரோதம், பழி வாங்குதல், பேராசை ஆகிய மனநிலையில் இறக்கிறவன் அந்த எச்ச சொச்சங்களை அனுபவிக்கும் பிறவியாக உரிய தருணத்தில் உரிய விதத்தில் பிறக்கிறான்' என்கின்றனர் சமய அறிஞர்கள். பிறவி கிடைக்கும் வரை அவனது நிலை ஸ்பிரிட்தான்.*

*தமது இந்த நாவலில் (பித்ருலோகம் போல ஸ்பிரிட்டு லோகம்), 'மீடியம்', ('ஆவித் தொடர்பு') பற்றி திரு. ரா.கி.ர. அவர்கள் ஓர் இடத்தில் அருமையான, ஆணித்தரமான விளக்கம் அளித்துள்ளார்.*

*''மின்விசிறி வேகமாகச் சுழலும் போது அதனுடைய இறக்கைகள் நமக்குத் தனித்தனியே புலப்படுவதில்லை. ஒரே மொத்தையாகத்தான் தெரிகிறது. காரணம், நம் கண்ணின்*

சக்தியும் விசிறியின் வேகமும் ஒன்றாக இல்லை. அதாவது இரண்டும் ஒரே வேவ் லெங்க்த்தில் இல்லை. ஆகவே தனித்தனியே தெரியவில்லை.

பெரும்பாலோருக்கு அப்படித்தான். ஆனால் வேறு சிலருக்கு, கண்ணின் சக்தி, மனோ சக்தி ஆகியவற்றால் விசிறி யின் எத்தனை வேகத்தையும் சமாளித்து தனித்தனியே சிறகுகளைக் காண முடியும்.

சூட்சுமமான பல சக்திகள் இப்படித்தான். சராசரி மனிதராகிய நமக்குப் புலப்படாத சில தோற்றங்கள் வேறு சிலருக்குப் புலப்படும்.''

கோஸ்ட் உண்டா இல்லையா என்பதை ஆராயும் நூலாக திரு. ரா.கி.ர. இந்த நாவலை எழுதவில்லை. ஆவிகளின் வழக்கறிஞராக அவர் வாதாடித் தம் நேரத்தையும் வாசகர் நேரத்தையும் வீணாக்கவில்லை. நிலவி வரும் ஆவியுலக நம்பிக்கையை இந்தத் தொகுப்பிலுள்ள கதைகளுக்குப் பின் புலமாக அமைத்து வெகு அற்புதமாகப் புனைந்துள்ளார்.

குமுதத்தில் புதுமையான தொடர் கதையாக அவர் இதை எழுதிக் கொண்டிருந்த போது அவரோடு அடுத்த நாற்காலி யில் உட்கார்ந்து நான் எட்டி எட்டிப் பார்த்து அவர் எழுத எழுதப் படிப்பேன். *(சில சமயம் தொந்தரவு பொறுக்கா மல் வீட்டிலேயே எழுதி எடுத்து வந்து விடுவார்.)*

நான் ஒரு ஒண்ணாம் நம்பர் பயந்தாங்கொள்ளி. நைட் ஷிஃப்ட் வேலைக்குச் செல்லும் போது இரவு பதினொரு மணிக்கு கருகும் இருட்டில் எடிட்டோரியல் அறையைத் திறந்து ஸ்விட்ச் போடுவதற்குள் என் உயிரே போய் விடும். எனக்கு முன்னதாக ஸ்விட்ச்சில் ஏதோ பிசாசு கை வைத்துக் கொண்டிருப்பது போல் உடம்பு நடுங்கும்.

எத்தனையோ வருடங்களுக்குப் பிறகு என்னை மறு படியும் பயந்தாங் கொள்ளியாக்குவதென்று நண்பரும் என்

இலக்கிய குருமார்களின் முக்கியமானவருமான திரு. ரா.கி.ர. தீர்மானித்து கோஸ்ட் நாவலுக்கு முன்னுரை எழுதும்படி ஆணை இட்டு விட்டார்.

முப்பது வருடத்துக்கு முன் குமுதம் இதழில் தொடர் கதையாக வந்த போது படித்ததை மறுபடி படிக்கிறேன். எனது மடிந்த முடிகள் குத்திட்டுச் சிலிர்த்து நிற்கின்றன.

வெறுமே காமாசோமா மிரட்டல் அல்ல. ரா.கி.ர.வின் பண்பட்ட எழுத்து பய உணர்ச்சியை நமது நரம்புகளில் இஞ்செக்ட் செய்யும் விதத்தில் கலை அழகுடன் கொப்பு ளிக்கிறது.

ஆவி செய்யும் ஆபரேஷன் பற்றிய கதைகளைப் படிக் கும் போது ரா.கி.ர. அவர்கள் எழுத்தாளரா, எம்.எஸ். பட்டம் பெற்ற சர்ஜனா என்ற பிரமை ஒவ்வொரு வாசகருக் கும் ஏற்படும்.

ஒரு ஆபரேஷன் எப்படி நடைபெறுகிறது, அங்கே கூடி யுள்ள டாக்டர்கள் என்ன பேசிக் கொள்வார்கள், செயல் பாடுகள் என்ன, எந்த அறுவைக்கு என்ன கருவி, அதைப் பயன்படுத்துவது எப்படி - இந்த விவரங்களெல்லாம் மண்டையோட்டு வித்தை காட்டும் பேய்க் கதை ஆசிரியர் களுக்கு வேண்டுமானால் அவசியமில்லாதிருக்கலாம்.

ஆனால் எ.க.எ. *(எப்படித்தான் கதை எழுதுகிறார் களோ)*யின் இலக்கணம் வகுத்த ரா.கி.ர. அவர்கள் தம் கை வண்ணத்துக்கு இந்த விவரமெல்லாம் தேவை என்று கருது பவர்.

'மெனக்கெடுதல்' என்று ஒரு வார்த்தை உண்டு. எடுத்துக் கொண்ட விஷயத்தை முழு முனைப்புடன் வெளிப்படுத்து தலைத் தன் வெற்றி ரகசியமாகக் கொண்டுள்ள ரா.கி.ர.வின் 'கோஸ்ட்' தமிழ் நாட்டில் மிகப் பரபரப்பும் சுவாரசியமும் ஏற்படுத்திய நாவல்.

தமது கற்பனையில் உதித்த சம்பவங்களுக்கு ஆதாரம் தேடி அவர் அலைந்த லைப்ரரிகள் ஏராளம். அனுபவஸ்தர் களிடம் துருவித் துருவி விசாரித்ததற்கு அளவில்லை. பயம் கிளப்பும் அந்த கோஸ்ட் கதைகளின் அடி நாதத்தில் அந்தப் பயத்தைக் களையும் வழிகளையும் மிகத் தெளிவாகக் கூறி யுள்ளார்.

மந்த்ராலய மகானின் சக்தி மனித குலத்துக்கு எப்படிக் கேடயமாக விளங்குகிறது, கந்த சஷ்டிக் கவசம் எவ்வாறு துணை செய்கிறது, ஆஞ்சநேயர் எவ்வாறு பாதுகாக்கிறார் என்பதெல்லாம் பிரசாரமாக தரப்படாமல் பிரசாதமாகத் தரப்பட்டுள்ளன.

மனிதன் பயந்து வாழ வேண்டிய அவசியமில்லை. தெய்வ நம்பிக்கையால், மகான்களின் அருள் சக்தியால் பய மற்று நல்வாழ்வு வாழலாம். தீய சக்திகளிலிருந்து நம்மை விடுவித்துக் கொள்ளலாம். நம்மைச் சார்ந்தவர்களையும் விடுவிக்கலாம் என்பதையெல்லாம் இந்தக் கதைகள் அழகாக உள்ளத்தில் படிய வைக்கின்றன. ராத்திரியிலும் படிக்கலாம்.

ரா.கி.ர. அவர்கள் இலக்கியத்தில் பன்முகக் கலைஞர். 'நவரசங்களும் அவருக்கு அடிமை' என்பார்கள். பயப்படு வதைக் கூடக் கலையழகுடன், கதை அம்சத்துடன் மிகச் சிரத்தையுடன் தீவிரமாக ஈடுபட்டுச் செய்திருக்கிறார். அவரது ஈடுபாடும் தீவிரமும் எந்த அளவு என்பதற்கு ஒரு சின்ன உதாரணம்:

இந்த கோஸ்ட் கதைக்கு வாரா வாரம் சித்திரக்காரர் யாராவது படம் வரைவதைக் காட்டிலும் போட்டோவாகப் போடலாமென்று நாங்கள் கருதினோம்.

கண்ணுக்குப் புலப்படாத 'கோஸ்ட்' புகைப்படத்தில் எப்படி இடம் பெறும்? ஆகவே புகைப்படம் எடுக்கும்

பொறுப்பு இளைஞரான புகைப்படக் கலைஞர் திரு. ஏ.வி. பாஸ்கரிடம் ஒப்படைக்கப்பட்டது.

மகாராஜாவின் சிம்மாசனம் கதைக்கு முதலில் படம் எடுத்தார். ஒரு மாடலை அலங்கார நாற்காலியில் உட்கார வைத்துப் படம் கிளிக்கினார்.

பிரிண்ட் போடும் போது உருவத்தை ஆவி மாதிரி தோற்றம் தரும்படி தெளிவில்லாமல் செய்து விடலாம் என்பது புகைப்படக் கலைஞர் திட்டம்.

அவ்வாறே போட்டோ ட்ரிக் செய்து புகைப்படம் அபாரமாக வந்து விட்டது - சிம்மாசனத்தில் ஓர் ஆவி உட்கார்ந்திருப்பது போல.

நாங்கள் மகிழ்ந்த நாலாம் நாள் ஒரு திடுக்கிடும் செய்தி. கோஸ்ட் புகைப்படத்துக்கு போஸ் கொடுத்த மனிதர் திடுமென்று இறந்து விட்டார். நிஜமாகவே ஆவியாகி விட்டார்!

இனிப் புகைப்படம் வேண்டாம் என்று அந்தத் திட்டத்தைக் கைவிட்டு விட்டோம். நடிகர் நடிகையரின் குளோசப் புகைப்படங்களையே blurred ஆக மாற்றிப் பிரசுரித்தோம்.

நாவலைப் படிப்பவர்களுக்கு பயம் ஏற்படுவதுடன் பக்தியும் ஏற்படும் என்பதுதான் இந்த நாவலின் தனிச் சிறப்பு. பயந்தாங்கொள்ளிகளைப் பக்தர்களாக்கிப் பயம் போக்கும் நிவாரணி!

47, ஹாரிங்டன் சாலை,
சேத்துப்பட்டு
சென்னை - 31

**ஜ.ரா. சுந்தரேசன்**
*(ரா.கி.ர.வின் சீடர்களில் இவரும் ஒருவர்)*

# கோஸ்ட்



சென்னையில், நம்ம வீடு, நம்ம ஆபீஸ், நம்ம மனிதர்கள் என்று பாதுகாப்பாக இருக்கும் போது, பந்த், கடையடைப்பு என்றால், வாசலில் பஸ் ஓடா விட்டால், ஷாப்புகள் மூடிக் கிடந்தால், சிரித்துக் கொண்டு வேடிக்கை பார்க்கத் தோன்றுகிறது.

ஆனால் முன்பின் தெரியாத வெளியூரில், கட்டை வண்டிகூட அவிழ்த்துப் போடப்பட்டிருக்கிற குக்கிரா மத்தில், பஸ் இல்லாமல் தனியே நிற்கும் போதல்லவா பந்தின் பயங்கரம் புரிகிறது?

மந்திராலயம் ரோடு ஸ்டேஷனுக்கு வெளியே நின் றிருந்த எனக்கு அப்படித்தான் இருந்தது.

'ஸ்டேஷனுக்கு வெளியே போய் நின்றால் போதும். மந்திராலயத்துக்குப் பஸ் வரும்' என்று ஊரில் நண்பர் சொல்லியிருந்தார். கைப் பையைத் தோள் மீது தள்ளி விட்டுக் கொண்டு டிக்கெட்டைக் கொடுத்து விட்டு வெளியே வந்தேன். காலை வேளை.

அது சுமாரான சிற்றூராக இருக்கும் என்று நினைத் திருந்தது தப்பு. சராசரி கிராமத்துக்கும் கீழாக இருந்தது. பழைய டீக் கடைகள். இடிந்த வீடுகள். புழுதியான சாலை. ஒடிந்து போயோ, அவிழ்த்துப் போடப்பட்டோ கிடக் கும் கட்டை வண்டி.

'சட்! என்ன ஊர் இது?' என்று நினைத்தவன், தப்பு தப்பு என்று கன்னத்தில் போட்டுக் கொண்டேன். ஐயப்ப னானாலும் சரி, உப்பிலியப்பனானாலும் சரி, சுவாமி தரிசனத்துக்கு என்று புறப்பட்டு வந்த பிறகு அந்தக் குறை இந்தக் குறை என்று சொல்வது அந்தப் புண்ணியத்தைக் கெடுத்து விடும் என்று என் பெரியப்பா அடிக்கடி சொன் னதை ஞாபகப்படுத்திக் கொண்டேன்.

இருபது முப்பது பேர் மூட்டை முடிச்சுக்களுடன் நின்றிருந்ததால் அதுதான் பஸ் வரும் இடம் என்று ஊகித்து நானும் நின்று கொண்டேன்.

ஆங்கிலம் தெரிந்த மாதிரி தோன்றிய ஒருவரை நெருங்கி, ''இங்கே தானே பஸ் வரும்?'' என்று கேட்டேன்.

என் கேள்விக்கு அவர் நேரிடையாகப் பதில் சொல்ல வில்லை. ''நாங்களெல்லாம் நேற்று ராத்திரியிலிருந்து நின்று கொண்டிருக்கிறோம்'' என்றார்.

''ஓகோ, பஸ் சர்வீஸ் ரொம்பப் புவர்?'' என்றேன்.

''புவர் இல்லை. நஹி'' என்றார்.

நான் விழித்தேன்.

''ஆந்திரா பந்தோ, கர்னாடகா பந்தோவாம். பஸ்ஸே கிடையாது. இங்கிருந்து சுமார் பதினைந்து மைல் இருக்

கிறது மந்திராலயம். குழந்தை குட்டிகளுடன் மூட்டை முடிச்சுடன் நடக்கவா முடியும்?''

''ரெய்ச்சூருக்குப் போனால் அங்கிருந்து பஸ் கிடைக்குமாம்'' என்றார் இன்னொருவர்.

மனசில் அளவு கடந்த வேதனையுடன் பிரார்த்தனைக் காக நான் வந்ததென்ன, இங்கே வழி தோன்றாமல் நிற்ப தென்ன?

பஸ் வருகிறவரை உட்கார்ந்திருப்பதா, ஊருக்குத் திரும்புவதா, நடந்து பார்ப்பதா?

''நீ ராஜா இல்லே?''

தோளுக்குப் பின்னாலிருந்து குரலும், ஒரு வினாடி யில் குரலுக்குடையவரும் தென்பட...

நான் விழித்தேன். என் வயசுதான் இருக்கும் அவ னுக்கும். சின்னக் கண். அடர்ந்த புருவம். வளைந்த மூக்கு. கொஞ்சமாகத் தலைமயிர். வெள்ளை முழுக்கை ஷர்ட் - தொள தொளவென்று. அதன் மீது ஏற்றப்பட்ட காக்கி பாண்ட். அதுவும் தொள தொளவென்று. மாநிறம். உயரம். கொஞ்சம் தாட்டி. எல்லாப் பைகளிலும் துருத்திக் கொண்டிருக்கும் காகிதங்கள், பென்ஸில், பேனாக்கள். ஏகப்பட்ட ஜிப்களும், வார்களும் கொண்ட கர்னாடக மான தோல் பை.

''நான் நரீஷ். தெரியலை?'' என்றான்.

நரீஷ்! அட, ஆமாம், மனத்திலும் உடம்பிலும் குப் பென்று பலம் வந்தது. ஒரு துணை கிடைத்து விட்டதே!

நரீஷ்! அவனைப் பார்த்துப் பதினைந்து வருடம் இருக் கும்.

இப்போது ஷஹாபாத்திலோ ஷோலாப்பூரிலோ ரெயில்வே வேலையில் இருக்கிறான் என்று மட்டும் எனக்குத் தெரியும். ஆனால் நடையுடை பாவனைகளில் இவ்வளவு மாறியிருப்பான் என்று நான் எதிர்பார்க்க வில்லை.

''ஸ்டேஷன் மாஸ்டரின் அறையில் உட்கார்ந்திருந் தேன். உன்னைப் போல இருந்தது. அதுதான் வந்தேன்'' என்றான் புன்னகையுடன்.

''நீயும் மந்திராலயத்துக்குத்தான் வருகிறாயா?'' என் றேன்.

''நான் கிளெய்ம்ஸ் இன்ஸ்பெக்டராக இருக்கிறேன். பம்பாய் முதல் திருவனந்தபுரம் வரை எல்லா ஊரும் என் ஊர்'' என்றான். ''வருஷத்துக்கு இரண்டு தடவையாவது நான் மந்திராலயம் போகிறவன்தான். போன மாசம் கூடப் போயிருந்தேன். இப்போது உனக்காக வேண்டுமானால் உன்னுடன் வருகிறேன்.''

''ரொம்பத் தாங்க்ஸ்'' என்று நிஜமான மகிழ்ச்சியுடன் அவன் கையைப் பிடித்துக் குலுக்கினேன். யானைப் பலம் வந்தது. ''பஸ் கிடையாது என்கிறார்களே?''

''ஆமாம். ஆனால் கவலைப்படாதே. ஏதாவது லாரி கீரி வரும். அழைத்துப் போய், மந்திராலயத்தில் உனக்கு தரிசனம் பண்ணி வைத்து ஊருக்கு அனுப்புவது இனி மேல் என் பொறுப்பு'' என்றான் அவன்.

அவன் கைகளை மறுபடியும் பிடித்துக் கொண்டேன். ''மந்திராலயத்துக்குப் போக முடியாமல் நான் ஊருக்குத் திரும்பும்படி ஆகியிருந்தால் என் மனசே இருண்டு

விடும். ஏனென்றால் அவ்வளவு அவசியமான பிரார்த்தனை யோடு இங்கே வந்திருக்கிறேன். என்ன பிரார்த்தனை தெரியுமா?''

''அதை மட்டும் சொல்லாதே'' என்று என் வாயைப் பொத்தினான். '''என்னிடம் மட்டுமில்லை. யாரிடமும் சொல்லாதே. உன் மனசிலிருப்பதை மந்திராலயம் பகவானின் சன்னதியில் அவரிடம் மட்டும்தான் சொல்ல வேண்டும். அதுதான் ஐதீகம். அதற்குத்தான் பலம். உன் துன்பத்தை என்னிடம் சொல்ல வேண்டாம்'' என்றான்.

''இருந்தாலும் நீ என் நண்பன். சொன்னால்தான் எனக்கு நிம்மதி...'' என்று மேலும் சொல்லப் போனவனை மறுபடியும் உறுதியோடு நிறுத்தி விட்டான் நரீஷ். ''சொல்லாதே என்றால் சொல்லாதே.''

''சரி'' என்றேன்.

''வா, ஏதாவது சாப்பிட்டு விட்டு வரலாம். அதற்குள் பஸ் வந்து விடாது'' என்று சொல்லித் திரும்பவும் ஸ்டேஷன் பிளாட்பாரத்துக்கு என்னை அழைத்துப் போனான். போர்ட்டர் முதல் கான்டீன்காரர் வரை எல்லாரும் அவனுக்குத் தெரிந்தவர்களாக இருந்தார்கள். நின்று பேசினான். வடை, இட்லி சாப்பிட்டோம். காசு வாங்க மறுத்த கான்டீன்காரரிடம் வற்புறுத்திப் பணம் தந்தான்.

பஸ் ஸ்டாண்டுக்குத் திரும்பிய போது கூட்டம் அப்படியே இருந்தது.

இல்லை, ஒரு இடத்தில் மட்டும் கும்பலாகக் கூடியிருந்தது.

அந்தக் கும்பலின் மத்தியில் ஒரு பெண் தலை விரிகோலமாகப் பேயாட்டம் ஆடிக் கொண்டிருந்தாள். 'ஆ... ஆ...' என்று மயிரிழை இடம் விடாமல் உரத்த தொனியில் கத்திக் கொண்டிருந்தாள். இருபத்தைந்து வயது இருக்கும். குங்குமத்தை அள்ளி நெற்றி நிறையப் பூசிக் கொண்டாள். கூந்தல் பிரிந்து புயலில் நாணல் மாதிரி எட்டுத் திசையிலும் பரந்து சுழன்றது. ஒரு செம்பு நிறைய இருந்த மஞ்சள் நீரைக் கடகடவென்று மூச்சு விடாமல் குடித்து, செம்பைத் தூர விட்டெறிந்தாள். யாரோ கற்பூரம் ஏற்றிக் காட்டினார்கள். அதை விரலால் எடுத்து இடது உள்ளங்கையில் வைத்துக் கொண்டு பார்த்து விட்டு, வாயைத் திறந்து போட்டுக் கொண்டு விழுங்கினாள்.

கடைசியில் கொஞ்சம் கொஞ்சமாக ஆட்டம் குறைந்து, சோர்ந்து தள்ளாடி, வேகம் குறைந்த பம்ப ரத்தைப் போலச் சரிந்து விழுந்தாள். அவளுடன் வந்திருந்த வர்கள் மெதுவாகக் காகிதத்தாலும் துணியாலும் விசிறி னார்கள்.

நானும் நரீஷூம் ஒரு பழைய வீட்டின் வாசல் திண்ணையில் போய் உட்கார்ந்து கொண்டோம். வானத் தில் வெளிச்சம் ஏறி, ஊரெல்லாம் வெய்யில் மினுமினுத் தது. அந்தப் பெண்ணின் ஆட்டத்தைப் பார்த்து எனக்கு என்னவோ போலாகியிருந்தது. பக்கத்தில் வந்து உட் கார்ந்த ஓர் ஆள், ''பாவம், இந்த வயசில் பேய் பிடித் திருக்கிறது!'' என்றார்.

அது மேலும் என்னைக் கலங்க வைத்ததால், எனக்கு நானே தைரியம் சொல்லிக் கொள்கிற மாதிரி, ''பேயாவது மண்ணாவது. ஹிஸ்டீரியா'' என்றேன்.

நரீஷ் என் பக்கம் திரும்பி, ''ராஜா, என்னிடம் உனக்கு மாறுதல் ஏதாவது தெரிகிறதா?'' என்றான் திடீரென.

அவன் கேள்வியின் அர்த்தம் புரியவில்லை.

''ஏராளமாய் மாறியிருக்கிறாய்'' என்றேன். ''முன்னெல் லாம் தடாலடியாய்ப் பேசுவாய். அட்டகாசமாய்ச் சிரிப் பாய். இப்ப ரொம்ப அடக்கமாய், சாதுவாய், மெது வாய்ப் பேசுகிறவனாக ஆகியிருக்கிறாய்.''

''ஆமாம், இந்தக் கிளெய்ம்ஸ் இன்ஸ்பெக்டர் வேலை யில், நான் பிரயாணம் செய்யாத இடமில்லை. அடை யாத அனுபவமில்லை. அதிலேதான் மாறி விட்டேன்'' என்ற வன் சில நிமிடம் பேசாமல் இருந்தான். பிறகு, ''முக்கிய மாக, பேய் பிசாசு அனுபவங்கள் ரொம்ப ஜாஸ்தி'' என்றான்.

நான் திடுக்கிட்டு அவனை ஏறிட்டுப் பார்த்தேன். அசட்டுச் சிரிப்பாகச் சிரிக்க முயன்றேன். அவன் சிரிக்க வில்லை. ''எனக்கே நேர்ந்தவை, தெரிந்தவர்களுக்கு நேர்ந் தவை, பார்த்தவை, படித்தவை, கேட்டவை - இப்படிப் பல. முன்பெல்லாம் பேய் என்றால் சிரிப்பேன். 'கோஸ்ட்டா? ரோஸ்ட் பண்ணி ஒரு பிளேட்டில் கொண்டு வா. டேஸ்ட் பண்ணுகிறேன்'' என்று சொல்வேன். இப்போது-''

நான் அவனையே பார்த்துக் கொண்டிருந்தேன், எதுவும் பேசாமல். அவன் தன் சட்டையின் கையைத் தோள் வரை சுருட்டினான். புஜத்தில் ஒரு தாயத்து கட்டியிருந்தது. அதன் பட்டு நூல் முடிச்சை அவன் அவிழ்க்கப் போனதும், ''வேண்டாம். தாயத்தைப் பிரிக்கக் கூடாது என்று சொல் வார்கள்'' என்றேன்.

''இது அந்த மாதிரியில்லை. கள்ளிக் கோட்டையில் ஒரு மந்திரவாதி கொடுத்தது. எப்போதும் என்னுடன் வைத்

திருக்க வேண்டும் என்றார். அதற்காகப் பத்திரமாய்க் கட்டிக் கொண்டிருக்கிறேன்.''

தாயத்தை எடுத்தான்.

குழலுக்குள் இருந்த ஒரு சிறிய காகிதத்தை ஸேஃப்டி பின்னின் முனையில் வெளியில் எடுத்தான். பிரித்துக் காட்டினான். மங்கிப் போன பழுப்புக் காகிதத்தில் -

S D P N Q C N
D P N Q C N
P N Q C N
N Q C N
Q C N
C N
$N^3$

- என்று பேனாவினால் எழுதப்பட்டிருந்தது.

நரீஷ் சொன்னான்:

''பலவிதமான அனுபவங்களில் என் மனம் குழம்பி, நானே ஒரு பேய் மாதிரி உலவ ஆரம்பித்து விடுவேனோ என்று பயந்திருந்த சமயத்தில் இதை அந்த மந்திரவாதி கொடுத்தார். பேய் பிசாசு பயமில்லாமல், மனம் நிம்மதியாயிருக்க இதை வைத்திருக்கும்படி சொன்னார்.'' திரும்ப அதைத் தாயத்துக்குள் நுழைத்து புஜத்தில் கட்டிக் கொண்டு, கையைப் பிரித்து விட்டுக் கொண்டான். ''அப்பப்பா! எத்தனை அனுபவங்கள்! பயங்கரமான, கிறுக்குத்தனமான, நம்ப முடியாத அனுபவங்கள்!'' என்று சொல்லிக் கொண்டு தோள்களைக் குலுக்கிக் கொண்டான். கொஞ்சம் மௌன

மாயிருந்த பின், ''ராஜா! நீ பெங்களூர் போயிருக்கிறா யல்லவா?'' என்றான் திடுப்பென்று.

''இரண்டு மூன்று தடவை.''

''பெங்களூர் - மைசூர் கார் ரோடு ரொம்பப் பிரமாத மான சாலை இல்லை?''

''அதிலென்ன சந்தேகம்?''

''அழகும் அமைதியும் நிறைந்த அந்தச் சாலையில், ஒன்பது வருஷத்துக்கு முன்னால் எனக்கு ஒரு விசித்திர மான அனுபவம் நேரிட்டது. இப்போது நினைத்தால்கூட வியர்க்கிறது'' என்று கைக் குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டான்.

சாலையைப் பார்த்தேன். பஸ் எதுவும் வருகிற வழியாய்த் தெரியவில்லை. நரீஷ் சொல்ல ஆரம்பித்தான்.

## யாரும் உட்காராத சிம்மாதனம்

பம்பாயில் என்னுடன் வேலை பார்த்த ஒரு டி.டி. ஆருக்கு மைசூரில் கல்யாணம். நான் அப்போது பூனாவில் இருந்தேன். கல்யாணத்துக்குப் போவதாக இல்லை. ஆனால் கல்யாணத்துக்கு முந்தின தினம் எனக்குப் பெங்களூரில் ஒரு வேலை வந்தது. அது முடிந்து, கமர்ஷியல் ஸ்ட்ரீட்டில் கொஞ்ச நேரம் சுற்றி விட்டு, கன்டோன்மென்ட் ஸ்டேஷ னில் உலாத்திக் கொண்டிருந்த போது, ஒரு நண்பரைச் சந்தித் தேன். 'நாளை ஞாயிற்றுக்கிழமை தானே? மைசூர் கல் யாணத்துக்குப் போய் வரலாமே?' என்றார். புறப்பட்டு விட்டேன்.

கல்யாணம் முடிந்து, அன்று சாயந்தரம் கிளம்புவதற் குள் பெங்களூர் போகும் ரயிலை மிஸ் பண்ணி விட்டேன்.

பஸ் ஸ்டாண்டை அடைந்தேன். எக்கச்சக்கமான கூட்டம். பெங்களூர் பஸ்ஸுக்குக் காலையிலேயே ரிசர்வ் பண்ணி யிருக்க வேண்டுமாம். நான் பண்ணவில்லை. டாக்ஸிக் காரர்கள் ஆள் பிடித்துக் கொண்டிருந்தார்கள். தலைக்குப் பன்னிரண்டு ரூபாய். வேறு வழியில்லை என்று ஒரு டாக்ஸியை நெருங்கிய போது, கல்யாணத்துக்கு வந்திருந்த ஒரு வாலிபன் என்னைக் கூப்பிட்டான். அவன் பெயர் கோபாலி. மாப்பிள்ளையின் உறவு. எனக்குப் பழக்கமான வன்தான். உற்சாகமாய், ஆரோக்கியமாய், கலகலப்பான பேச்சோடு இருந்தான்.

''நான் ஸ்கூட்டரிலேயே பெங்களூரிலிருந்து வந்திருக் கிறேன். ஸ்கூட்டரிலேயே திரும்பிப் போகிறேன். நீயும் வருவதானால் வா'' என்றான். பிறகு என்னை ஏற இறங்கப் பார்த்து, ''ஒன்றும் ஸ்ட்ரெயினாக இருக்காது'' என்றான்.

அதுவே எனக்கு ஒரு சவால் மாதிரி இருந்ததால் ''ஸ்ட்ரெயின் என்ன, பிரமாத ஸ்ட்ரெயின்!'' என்று சொல்லி விட்டு, பில்லியனில் உட்கார்ந்து கொண்டேன்.

அப்போது சாயந்தரம் ஆறு, ஆறரை மணி இருக் கும். குளிர் மெதுவாகப் பரவிக் கொண்டிருந்தது. பெங்களூர் சாலை வழுவழுவென்று, ஜிலுஜிலுவென்றிருந்தது. கார் களும், பஸ்களும் ஜேஜே என்று போய்க் கொண்டிருந்தன. கோபாலி சீட்டியடித்துப் பாடிக் கொண்டே ஓட்டினான். பாபுலர் பாட்டு ஏராளமாய் ஸ்டாக் வைத்திருந்தான். வாயை வலிக்காதோ என்று எண்ணிக் கொண்டேன்.

மாண்டியாவைத் தாண்டியிருப்போம். ''பக்கத்திலே ஒரு மகிஷாசுர அம்மன் கோவில் இருக்கிறது. ரொம்ப விசேடம். பார்த்து விட்டுப் போகலாமா?'' என்றான்.

வாட்சில் மணி பார்க்க முயன்றேன். இருட்டில் தெரியவில்லை. ''மணி ஏழரை எட்டு இருக்குமே? நேரமாகி விடாது?'' என்றேன்.

''ஜஸ்ட் ஒரு பத்து நிமிடம். அதிலே என்ன ஆகி விடப் போகிறது'' என்று ஒரு கிளைப் பாதையில் ஸ்கூட்டரைத் திருப்பினான்.

ரஸ்தா குண்டும் குழியுமாக இருந்தது. ஒவ்வொரு குலுக்கலிலும் என் எலும்பு நொறுங்கியது. ஆனால் அதற்குப் பலன் இருந்தது. இரண்டு மைல் தூரம் சென்றதும் ஒரு சிறிய அழகான ஆலயம் தெரிந்தது. கொஞ்சம் மேட்டுப் பாங்கான இடத்தில் இருந்தது. அதிகக் கூட்டம் இல்லை. தேவி உக்கிரமாக, ஆனால் அழகாகக் காட்சி தந்தாள். பூசாரியாக உட்கார்ந்திருந்த சிறுவன் எங்களைக் கண்டதும், தானே தட்டில் சூடம் வைத்துக் கொளுத்தித் தீபாராதனை காட்டினான். தட்டை எங்களிடம் நீட்டியதும், குங்குமம் எடுத்துக் கொண்டு தட்டில் அரை ரூபாய் வைத்தேன். பூசாரிப் பையனுக்கு மிகவும் மகிழ்ச்சி. இருங்கள் என்று சொல்லி ஒரு சின்னப் பொட்டலத்தில் குங்குமம் வைத்து மடித்துக் கொடுத்தான். பையில் போட்டுக் கொண்டேன்.

வெளியே வந்து, ஸ்கூட்டரைக் கோபாலி ஓர் உதை உதைத்த போது, யாரோ ஒருவர், ''பெங்களூர் போகிறீர்களா?'' என்று அவனிடம் கேட்டார்.

''ஆமாம்'' என்றதும் ''நீங்கள் வந்த வழியிலேயே திரும்பத் தேவையில்லை. இதோ இப்படியே கிராஸ் கட்டில் போனால் ஹைரோடு வரும். பத்து மைல் மிச்சம்'' என்று ஒரு குறுக்குப் பாதையைக் காட்டினார்.

'என்னத்துக்கு...' என்று நான் சொல்ல வாயெடுத்தேன். ஆனால் கோபாலி, 'தாங்க்ஸ்' என்று சொல்லி அவர் காட்டிய பாதையில் ஸ்கூட்டரைத் திருப்பி விட்டான். வண்டி அவனுடையது. நான் ஓசி. பெட்ரோல் இனாமாகவா கிடைக்கிறது? ஆகவே பேசாமல் இருந்தேன். ஆனாலும் உள்ளூர ஒரு திகில், முதுகில் பூரான் ஊர்கிற மாதிரி உறுத்தியது. இத்தனைக்கும் நான் ரொம்ப தைரிய சாலி என்று பெயர்.

கொஞ்ச தூரத்துக்குச் சாலை நன்றாயிருந்தது. பிறகு சுமாராக இருந்தது. அதன் பின் படுமோசமாயிற்று. இறங்கி நடந்து விடலாமா என்றுகூட எண்ண வைத்தது. அப்படி நினைத்த அதே வினாடி ஸ்கூட்டர் இரண்டு மூன்று இருமல் இருமி விட்டு, நின்று விட்டது.

கோபாலி இறங்கி, எதையோ கழற்றிப் பரிசோதித்தான். எனக்கு ரயிலைப் பற்றியே ஒன்றும் தெரியாது. ஸ்கூட்டரை என்ன கண்டேன்?

''எங்காவது கொஞ்ச தூரம் தள்ளிக் கொண்டு போகலாம்'' என்றான். ''ஆமாமாம்'' என்றேன். ஸ்கூட்டரை அவன் தள்ளிக் கொண்டு முன்னே செல்ல, நான் பின்னே நடந்தேன். மணி ஒன்பது இருக்கும். கறுப்புப் போர்வை மாதிரி இருட்டு எங்களைச் சூழ்ந்திருந்தது. ஒரு பிறை நிலா மட்டுமே தெரிந்தது. வானத்தில் நிறைய நட்சத்திரங்கள். ஒரு மேகம் ஏதோ ராட்சத மிருகம் போல மிதந்து கொண்டிருந்தது. அந்த வெளிச்சத்தில் நடந்தோம். ஈ காக்கை கூட எதிர்ப்படாத சாலையாக இருந்தது.

''அதோ ஒரு வீடு தெரிகிறது'' என்றான் கோபாலி.

உற்றுப் பார்த்தேன். ஆம். ஒரு வீடு - வீடு அல்ல, ஒரு பெரிய கட்டிடம் மாதிரி தெரிந்தது. கிட்டத்தில் செல்லச் செல்ல அது ஒரு பழைய மாளிகை என்பது புலப்பட்டது. அதற்குச் செல்லும் நீண்ட பாதையும் அதை அடைத்தாற் போலிருக்கும் இரும்பு கேட்டும் தென்பட்டன. கேட் டின்மீது கைகளை ஊன்றிக் கவனித்த போது, கட்டிடம் வெகு தொலைவில் இருக்கிறதென்று தெரிந்தது.

கேட்டின் மறுபுறம் ஒரு மரக்கூண்டு இருந்ததால் அங்கே ஒரு வாட்ச்மேன் இருக்க வேண்டுமென்று ஊகித் தோம். ''யாரப்பா இங்கே?'' என்று கோபாலி கூப்பிட்டான்.

பதில் இல்லை.

ரொம்ப நேரம் நாங்கள் மாறி மாறியும் சேர்ந்தும் கூவிய பிறகு எங்கேயோ எதுவோ நகருகிற மாதிரி ஓசை கேட்டது. ஒரு முட்டை விளக்கின் வெளிச்சம் அசைந்தது.

ஆனால் யாரும் வரவில்லை.

மரக்கூண்டுக்குள் அந்த மினுமினுப்பு மட்டுமே தெரிந்தது. அந்த விளக்கு அணையாமல் இருக்க வேண் டுமே என்று என் உள்ளம் பிரார்த்தனை செய்தது.

''யாரப்பா உள்ளே? எழுந்து வாயேன்'' என்று கோபாலி மறுபடியும் கூப்பிட்டான்.

ஓர் இருமல் சத்தம் கேட்டது. பிறகு, ''யார்? யார் நீங்க? இங்கே யாரும் வரக் கூடாது. போங்க, போங்க'' என்று ஒரு குரல் பதில் அளித்தது. கரகரப்பான குரல். அதிலே கொஞ்சம்கூடக் கருணையோ ஈரமோ தெரியவில்லை.

''கொஞ்சம் கதவைத் திறங்க'' என்றேன் நான். ''ஸ்கூட்டர் ரிப்பேராகி விட்டது. வழி தெரியவில்லை. ராத்திரி தங்கி விட்டுக் காலையில் போய் விடுகிறோம்.''

அப்போதும் எவரும் எங்களை நோக்கி வரவில்லை. ஆனால் அந்தக் குரல் பதில் அளித்தது. ''ராத்திரி தங்கறீங் களா? இங்கேயா? பைத்தியம் பிடிச்சிருக்குதா உங்க ளுக்கு? போங்க, போயிடுங்க. இங்கே ராத்திரி தங்கின வங்க யாரும் காலையில் உயிரோடு திரும்பிப் போனது கிடையாது. புரிகிறதா? போயிடுங்க பேசாமல்!''



உருவம் தெரியாமல் வெறும் குரல் மட்டும் கேட்ட போது எனக்கும் கோபாலிக்கும் கொஞ்சம் திகில் ஏற்படத்தான் செய்தது. ''இந்த அட்மாஸ் ஃபியரே என்னவோ போலிருக்கிறது, நரீஷ். ஸ்கூட்டரை இன்னும் கொஞ்ச தூரம் தள்ளிக் கொண்டு போகலாம். மெயின் ரோடு வந்து விடும்'' என்று என் காதருகே கிசுகிசுத்தான் கோபாலி.

ஆனால் இரண்டு பேரில் நான் கொஞ்சம் தில் உள்ள வன். ஓடுகிற பாம்பைத் துரத்திக் கொண்டு போய் மிதிக் கிற வயது. இந்தப் பழம் பெரும் கட்டிடத்தில் என்னவோ ஒரு மர்மம் இருக்கிறது. அதைக் கண்டாக வேண்டும் என்று கிட்டத்தட்ட வெறியே ஏற்பட்டு விட்டது. 'யாரும் வரக் கூடாது' என்று எச்சரித்த குரலை லட்சியம் செய்யாமல், ''கேட்டைத் திறவுங்க முதலில். கிட்டே வந்து உங்க முகத்தைக் காட்டிப் பேசுங்க'' என்றேன். கோபாலி என் கையை இறுகப் பிடித்துக் கொண்டு தன் கெஞ்சலை மறு படியும் மானசீகமாகத் தெரிவித்தான்.

என்னுடைய விடாப்பிடி அந்தக் குரலுக்குடையவனை மசிய வைத்தது போலும். அந்த விளக்கு வெளிச்சம் கொஞ்சம் கொஞ்சமாக அருகில் வந்தது. அது ஹரிக்கேன் விளக்கு.

அதைத் தூக்கிப் பிடித்திருந்த கையில், சருமம் சுருங்கி, நரம்புகள் புடைத்திருந்ததைக் கொண்டு அது ஒரு கிழவன் என்று தெரிந்தது. அழுக்காக இரண்டு மூன்று சட்டையும் அதன்மேல் கோட்டும் போட்டிருந்தான். விளக்கைத் தூக்கிப் பிடித்தபடி எங்களை நோக்கி வந்தான். அவனுடைய ஷெட்டுக்கும் கேட்டுக்கும் பத்துப் பதினைந் தடி தூரம்தான் இருக்கும். இருந்தாலும் அவன் எங்கோ தொலை தூரத்திலிருந்து மணிக்கணக்காக, மைல் கணக் காக வந்து கொண்டே, வந்து கொண்டே, வந்து கொண்டே யிருப்பது போல ஒரு பிரமை ஏற்பட்டது எங்களுக்கு.

''இங்கெல்லாம் தங்க முடியாது, போன்னு சொன் னேனே, உங்களுக்குக் காது கேட்கலை?'' என்றான் கர கரத்த குரலில். முதலில் கவனிக்கவில்லை.

இதற்கு நான், எப்படிப்பட்டவரையும் மசிய வைக்கும் மந்திரக் கோலை கேட்டின் வழியாக அவன் கண்முன்னே நீட்டினேன் - ஐந்து ரூபாய் நோட்டை.

அவன் வாங்கிக் கொள்ளவில்லையே தவிர, கேட்டைத் திறந்தான். ''என்ன வேணும் உங்களுக்கு?'' என்றான்.

''ஸ்கூட்டர் ரிப்பேராயிட்டுது. ராத்திரி வேளை. இங்கே தங்கி விட்டு விடிகாலை எழுந்து போய் விடு கிறோம். உங்க எஜமானர் கிட்டே கொஞ்சம் சொல்லப்பா'' என்றேன்.

''எஜமானரா?'' மாளிகையை ஒரு முறை நோக்கி விட்டு எங்களைப் பார்த்துச் சிரித்தான். உதட்டுக்கு மேல் மீசை குலுங்கியது. ''அங்கே எஜமானர் யாரும் கிடையாது. காலி பங்களா.''

''எத்தனை நாளாய்க் காலியாயிருக்குது?''

''அறுபது வருஷத்துக்கு மேலாய்.''

கோபாலியும் நானும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டோம். ''இந்த ரூபாயை வாங்கிக்குங்க முன்னாலே'' என்று மறுபடி நோட்டை நீட்டினேன்.

அவன் பரிதாபத்துடன் தலையை அசைத்தான். ''பணத் துக்காக இல்லீங்க. உங்களைப் பார்த்தால் நல்லவங்களா தெரியுது. இது நல்ல இடம் இல்லை...'' சற்றுத் தயங்கி விட்டு, சொல்ல வேண்டாமென்று நினைத்ததையும் சொல்லி விட்டான். ''அது பாழடைந்த மாளிகை. பேய் பிசாசுகள் உலாவுகிற இடம்.''

''ஓ!'' என்றான் கோபாலி. ''சரி, போயிடலாம்'' என்று என் கையைப் பிடித்தான். அதை மெல்ல நான் விடுவித்துக் கொண்டேன்.

''பெரியவரே, எதற்கும் இதை வச்சுக்குங்க'' என்று சொல்லி நோட்டை அவன் கோட்டுப் பைக்குள் நானே செருகி விட்டேன். ''பேய் பிசாசுகளைப் பத்தி நாங்க ஆராய்ச்சி செய்கிறவங்கதான். பல கட்டுரைகள் எழுதியிருக்கிறோம். லெக்சர்கள் பண்ணியிருக்கிறோம். ஆகவே எங்களைப் பத்திப் பயப்படாதீங்க. முன்னே போங்க'' என்று அவர் தோளில் கையை வைத்து வற்புறுத்தினேன்.

கோபாலியின் முகத்தைப் பார்த்தேன். எதனாலோ தெரியவில்லை. முதலில் இருந்த திகில் இப்போது குறைந் திருந்தது. என்னைப் போலவே அவனிடமும் ஒருவித ஆர்வம் ஏற்பட்டிருந்தது.

கிழவன் முன்னே நடந்தான். கோபாலி ஸ்கூட் டரைப் போர்ட்டிகோவின் ஓரத்தில் நிறுத்தினான். அது

வெறும் மாளிகையல்ல. ஒரு சின்ன அரண்மனை. ஆனால் தூசியில் புதைந்திருந்தது. ஒட்டடையின் மணம் மூக்கை அடைத்தது. அரிக்கன் விளக்கைத் தூக்கி, ஒரு காகிதத்தைக் கொளுத்தி மூலைகளிலிருந்த பெரிய மெழுகு வர்த்திகளை ஏற்றினான் கிழவன். நாலு திசைகளிலிருந் தும் அவற்றின் நிழல்கள் ஒன்றோடொன்று மோதிய போது வினோதமான, அமானுஷ்யமான உருவங்கள் சுவர்களெங் கும் தரையெங்கும் திடீரெனத் தோன்றிப் படை படை யாய்ச் சஞ்சரித்தன.

அது முன் ஹால். வெல்வெட்டுப் போர்த்தப்பட்ட பழைய சோபாக்களும் உயரமான முதுகுகளைக் கொண்ட நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. ஒரு தட்டுத் தட்டினால் அந்த மாளிகையையே மூழ்கடிக்கக் கூடிய புழுதி கிளம்பும் போலிருந்தது.

ஹாலை அடுத்து ஒரு பெரிய அறை இருந்தது. அதைச் சாவி கொண்டு திறக்குமுன் கிழவன் மறுபடி எங்களைக் கெஞ்சுகிற மாதிரி பார்த்து விட்டு, ''மறுபடியும் சொல் கிறேன். பார்த்து விட்டுப் போய் விடுங்கள். இங்கே யாரும் ராத்திரி தங்கினது கிடையாது. தங்கினால் காலையில் உயிரோடு திரும்பியது கிடையாது'' என்றான்.

''ஏன்? அப்படி என்ன நேரும்?'' என்று தைரி யத்தைக் கூட்டிக் கொண்டு கோபாலி கேட்டான்.

''ராஜா ஹனுமந்தப்பாவின் ஆவி அவர்களைக் கழுத்தை நெரித்து விடும்.''

ஒரு வினாடி ஆழ்ந்த நிசப்தம் நிலவியது. எங்கள் மார்பு அடித்துக் கொள்ளும் சப்தமே பிரம்மாண்டமாகக் கேட்டது.

கிழவன் ஒரு பெருமூச்சு விட்டான். 'பாவம், சின்ன வயது. ஆனால் இவர்களுடைய விதி இப்படி இருந்தால் யார்தான் காப்பாற்ற முடியும்?' என்று அந்தப் பெருமூச்சு சொல்லாமல் சொல்லியது.

அடுத்த கதவைத் திறந்தான், அங்கேயும் மூலைக்கு மூலை மெழுகுவத்திகளைக் கொளுத்திய பின்னர்தான், இன்னும் விஸ்தாரமான, இன்னும் அலங்காரமான மண்டபம் என்பது தெரிந்தது. அறை பூரா நிலைக் கண்ணாடிகள் நின்றிருந்தன. மிக உயரத்தில் வர்ணக் கோலங்கள் போட்ட விதானம் தெரிந்தது. அங்கிருந்து அழகழகான லஸ்தர் விளக்குகள் தொங்கின. ஆனால் கீழே நடந்த, நடந்து கொண்டிருக்கிற, ஏதோ ஒரு சோக நாட கத்தைப் பார்த்துத் துன்பப்பட்ட மாதிரி அந்த லஸ்தர் களில் ஒரு சோகமும் மௌனமும் குடிகொண்டிருந்தன. எல்லாச் சாளரங்களும் கதவுகளும் சாத்தப்பட்டிருந்தும் கூட ஏர்கண்டிஷன் மாதிரி ஒரு குளிர்ச்சியை உணர்ந்தோம். அந்தக் குளிர்ச்சி இன்பமாக அனுபவிக்கக் கூடியதாக இல்லாமல், முதுகுத் தண்டில் ஏறிக் கொள்ளும் சில்லிப் பாக இருந்தது.

அந்தப் பரந்த அறையின் ஓரங்களில், சுவர்களை ஒட்டினாற் போலப் பல்வேறு ஆசனங்கள் போடப்பட் டிருந்தன. கொஞ்சம் உயர்ந்ததாக இருந்த ஒரு மேடை யில் பழைய சிம்மாசனமொன்று நடுநாயகமாகக் காணப் பட்டது. எவ்வளவு பழுதாயிருந்த போதிலும் அதன் தோற்றம் பளபளத்தது. முதுகிலும் கைகளிலும் கற்கள் பதிக்கப்பட்டிருந்தன.

''ராஜா ஹனுமந்தப்பாவின் சிம்மாதனம்'' என்றான் வேலைக்காரக் கிழவன். ''இதிலே உட்கார்ந்தபடியேதான்

அவர் இறந்து போனார். அதுக்கப்புறம் யாரும் இதிலே உட்கார்ந்தது கிடையாது.''

''அந்த ராஜா எப்போது இறந்து போனார்?'' என்று கேபாலி கேட்டான்.

''என் பாட்டனாருக்குப் பாட்டனார் காலத்தில் - நூற்றைம்பது வருஷத்துக்கு மேலிருக்கும்.''

''இதில் உட்கார்ந்தபடி இறந்து போனார் என்று சொன்னீர்களே? ஏன்? மாரடைப்பா?''

''இல்லை. தற்கொலை செய்து கொண்டார்'' என்றான் கிழவன் அமைதியாக.

எங்கள் இமைகள் ஒரு கணம் படபடக்க மறந்து விட்டது. கொஞ்ச நேரம் கழித்துத்தான் ''ஏன்?'' என்றான் கோபாலி.

''எனக்கு விவரமாய் தெரியாது. அவர் ரொம்பச் செல் வாக்காக இந்தப் பக்கத்திலே ஆண்டு கொண்டு வந்தா ராம். பரம்பரைப் பெருமை உள்ளவர். ஆந்திர ராஜ்யத்தில் ஒரு ராஜ குடும்பத்திலே அவருக்குக் கல்யாணம் நிச்சயம் பண்ணினார்களாம். கல்யாணத்தைக் கோலாகலமாய் நடத்தப் பிரமாதமாய் ஏற்பாடு செய்திருந்தார்கள். அக்கம் பக்கத்து ராஜாக்கள் எல்லோரும் வந்து குழுமியிருந்தார் கள். ஆனால் கல்யாணத்துக்கு முதல் நாள், பெண் காணா மல் போயிட்டுது!''

''கல்யாணப் பெண்ணா?''

''ஆமாங்க. அவர்களோட ஊரிலேயே யார் மேலேயோ ஆசையாம். அதன் இஷ்டத்துக்கு விரோதமாய் இந்தக் கல் யாணம் முடிவு செய்திருந்தார்களாம். அதனாலே கடைசி

நிமிஷத்தில் அந்தப் பெண் வடக்கே எங்கேயோ ஓடிப் போயிட்டாளாம். இங்கே என்னடான்னா, ராஜாக்கள் மேலே ராஜாக்கள் கூடியிருக்காங்க. விஷயத்தைக் கேள்விப் பட்டு எல்லோரும் சிரித்தார்களாம். எங்க ராஜாவுக்கு ஒரே அவமானமாய்ப் போயிட்டுது. அன்று ஒரே ராத்திரி இந்தச் சிம்மாசனத்தில் உட்கார்ந்து கொண்டு உடை வாளி னால் தன் கழுத்தைத் தானே வெட்டிக் கொண்டு செத்து விட்டார். காலையில் கதவைத் திறந்து பார்த்த பிறகுதான் அந்தக் கோரத்தை எல்லோரும் பார்த்தார்கள்.''

நானும் கோபாலியும் அந்த வெற்றுச் சிம்மாதனத்தை வைத்த கண் எடுக்காமல் பார்த்தபடி இருந்தோம். இந்த வினாடி கூட அங்கே அந்த ராஜா ஹனுமந்தப்பா வந்து உட்காருவதுபோலவும், தலையைக் கைகளினால் பிய்த்துக் கொள்கிற மாதிரியும், வெறிக்கிற மாதிரியும், வாளினால் கழுத்தை அறுத்துக் கொள்கிற மாதிரியும், அடுத்தடுத்த காட்சிகள் ஸ்லோ மோஷனில் நடந்தன.

''அப்புறம்?''

''அப்பாலே என்ன? ஒரு ராஜா தன் சிம்மாசனத் திலே செத்துப் போனார் என்றால், அதுவும் தற்கொலை பண்ணிக் கொண்டார் என்றால், அந்த ராஜ்யம் எப்படி உருப்படும்? சின்னா பின்னமாய்ச் சிதைந்து விட்டது. கடைசியில் இந்த மாளிகை மட்டும்தான் மிஞ்சியது. இதைச் சுற்றியிருக்கிற ஆயிரம் ஏக்கர் நிலம், அரண்மனை கஜானாவில் இருக்கிற நகைகள் - இதையெல்லாம் யார் எடுத்துக் கொள்வது என்று சண்டை வந்தது. வெள்ளைக் காரன் சமாதானம் பண்ணி, ஆளுக்குக் கொஞ்சம் பிரித்துத் தந்து, தானும் கொஞ்சம் எடுத்துக் கொண்டான். இந்த

மாளிகை பாக்கி இருந்தது. ராஜ வம்சத்தில் ஒருத்தர் தன் குடும்பத்தோடு கொஞ்ச நாள் தங்கியிருந்தார். ஒரு நாள் ராத்திரி ரத்தம் ரத்தமாய்க் கக்கிக் கொண்டு விழுந்து இறந்து போனார். அவரோட குடும்பம் பூனாவுக்குப் போய் விட்டது. அதன் பிறகு ஒவ்வொருவராய்ப் பல பேர் தங்கினாங்க. வந்த தினத்தன்றே நடு ராத்திரியில் சில பேர் உயிரை விட்டார்கள்... தினம் ராத்திரி பன்னிரண்டு மணிக்கு இங்கே ஒரு சிரிப்புச் சத்தம் கேட்கும். ராஜாவோட ஆவி வரும்..''

கிழவன் ஏற்றி வைத்த மெழுகுவத்திகளில் இரண்டு அணைந்து விட்டது. அதன் மெல்லிய புகைப் படலம் மட்டும் நடு அந்தரத்தில் சதிராடியதைப் பார்க்கையில் நீண்ட எலும்பு உருவங்கள் ஒன்றோடொன்று மோதிக் கொள்கிற மாதிரி இருந்தது.

கிழவன் என் கையைப் பற்றிக் கொண்டு, ''உங்களைப் பார்த்தால் நல்லவங்களாய் இருக்குது. சின்ன வயசு. அநியாயமாய் உயிரை விடாதீர்கள். பார்க்கணும்னு சொன்னீங்க. பார்த்தாச்சு. புறப்பட்டு விடுங்கள்'' என்றான்.

கோபாலியின் முகத்தைப் பார்த்தேன். தன் கலவரம் எனக்குத் தெரியக் கூடாது என்று எண்ணிய மாதிரி தலை குனிந்திருந்தான்.

''நான் பொய் சொல்லவில்லை. இந்த நரசிம்மஹள்ளி வட்டாரத்தில் யாரை வேண்டுமானாலும் கேளுங்கள் - நான் சொன்னது உண்மை என்று சொல்வார்கள்...'' என்று கிழவன் கூறிக் கொண்டிருந்த போது, ''நரசிம்மஹள்ளி என்றா சொன்னீர்கள்?'' என்றான் கோபாலி.

''ஆமாம். அதுதான் இந்த ஊரோட பெயர். ஏங்க?''

''இங்கே ஒரு பி டபிள்யூ டி இஞ்சினியர் ஆபீஸும் வீடும் இருக்கிறதில்லே?'' என்றான்.

''ஆமாங்க. இப்படியே இடது கைப்பக்கமாய் இரண்டு மைல் போனால் அந்த வீடு வரும்'' என்றான் கிழவன்.

கோபாலி கைக் கடியாரத்தைப் பார்த்துக் கொண்டான். ''மணி எட்டே கால்தான் ஆகிறது. போய் விடலாம்'' என்றான் அரை நம்பிக்கையுடன். என்ன சொன்னாலும் இங்கிருந்து என்னைக் கிளப்ப முடியாது என்று அவனுக்குப் புரிந்து விட்டது.

''ஆமாங்க, போயிடுங்க'' என்றான் வேலைக்காரனும்.

''கோபாலி! உனக்குப் பயமாயிருந்தால் போ. நான் இருந்து பார்த்து விட்டு வருகிறேன்'' என்றேன்.

கோபாலி பண்பாடுள்ள இளைஞன். என்னை ஆபத்தில் சிக்க வைத்து விட்டுத் தான் மட்டும் போவது அவனுக்குப் பிடிக்கவில்லை. ''உன்னை விட்டு நான் போகப் போவதில்லை. அந்த இஞ்சினியரின் வீட்டுக்குப் போய், ஸ்கூட்டரை ஏதாவது ரிப்பேர் பண்ண முடியுமா என்று பார்க்கச் சொல்கிறேன். ஸ்கூட்டரைச் சரிசெய்து விட்டால் அதிலேயே வருகிறேன். இல்லாவிட்டால் நடந்தே திரும்பி வருகிறேன். எப்படியும் பதினொரு மணிக்குள் வந்து விடுவேன். பிஸ்கட், டீ ஏதாவது கிடைத்தால் கொண்டு வருகிறேன். ராத்திரி இரண்டு பேரும் இருந்து பார்த்து விடலாம்'' என்றான். அவன் குரலில் உண்மை தொனித்தது.

''சரி, நீ போய் விட்டு வா'' என்று அவனை அனுப்பி வைத்தேன். வழி காட்டுவதற்காக வேலைக்காரக் கிழவன் அவனுடன் சென்றான்.

நான் சுவரில் மாட்டியிருந்த ஓவியங்களை ஒவ்வொன் றாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். எங்கேயோ ஒரு சுவர்க் கோழியின் ரீங்காரத்தைத் தவிர, வேறு சத்தம் கேட்க வில்லை. எப்போதாவது ஒரு பறவை வேகமாய்ச் சிறகடிக் கிற மாதிரி படபடப்புக் கேட்கும். மெழுகுவத்திகளின் சுடர் மெல்ல ஆடின. அது மிக நீளமான அறை. உடல் மெலிவதற்காக வாக்கிங் போக விரும்புகிறவர்கள் இங்கே தினம் ஐம்பது நடை உலாத்தினால் போதும் என்று எண்ணிக் கொண்டேன். கொஞ்ச நேரம் ஒரு நாற்காலி யின் முனையில் உட்கார்ந்தேன். நிலைக் கண்ணாடிகளில் என் உருவத்தைப் பார்த்துக் கொண்டேன். கதவுகளின் பிடிகளை இழுத்துப் பார்த்தேன்.

நேரம் ஓடிக் கொண்டிருந்தது. உயிரில்லாத அந்த மாளிகையில் எங்கேயோ ஒரு கடியாரம் மட்டும் ஓடிக் கொண்டிருந்தது போலும். எனக்குத் தாகமாயிருந்தது. தண்ணீர் ஜாடியில் நீர் இருந்தது. ஆனால் அதன் அழுக்கைப் பார்த்ததும் தாகம் போய் விட்டது.

மணி பதினொன்று அடிப்பது கேட்டது. பிறகுதான் எனக்குக் கோபாலியைப் பற்றி ஞாபகம் வந்தது. ஏன் வரவில்லை? போன இடத்தில் அவனை யாராவது தடுத்து விட்டார்களோ? வழியில் ஏதாவது... அல்லது போகும் போதே ஏதாவது... விபத்தோ?

நிமிடங்கள் ஓட ஓட எனக்கு இருப்புக் கொள்ள வில்லை. கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தேன். பிறகு கேட்டை அடைந்தேன். ஷெட்டுக்குள் வேலைக் காரக் கிழவன் குறட்டை விட்டுக் கொண்டு தூங்குகிற சத்தம் கேட்டது. கிறீச்சென்று கேட் திறந்து கொண்ட போது கூட அவன் எழுந்திருக்கக் காணோம்.

மெயின் ரோடு எந்தப் பக்கம் இருக்கும் என்று எண்ணியவாறே கொஞ்ச தூரம் நடந்திருப்பேன். எதிரில் கோபாலி வருவது கண்ணில் பட்டது. ஸ்கூட்டர் இல்லை. நடந்துதான் வந்தான்.

''என்ன ஆச்சு? இஞ்சினியரின் வீட்டைக் கண்டு பிடித்தாயா?'' என்றேன்.

''ஊம் ஊம்'' என்றான்.

''ஸ்கூட்டரைச் சரிசெய்வதாகச் சொன்னார்களா?''

அதற்கும் ஊம் ஊம்தான் பதிலாக வந்தது. போன இடத்தில் அவனைப் பயமுறுத்தியிருப்பார்கள் என்று ஊகித்துக் கொண்டேன். உள்ளுக்குள் ஆடிப் போயிருப்ப தால் வாய் விட்டுப் பேச விரும்பாமல் இருக்கிறான் என்று நினைத்தேன்.

எனக்கு முன்னதாகவே வேகமாய் நடந்து சிம்மாதன அறையை அடைந்தான் கோபாலி. அவனுடைய வேகம் ஆச்சரியம் அளித்தது. எதையோ கண்டுபிடிக்க, அல்லது எதையோ செய்து முடிக்க ஆர்வமாயிருப்பதைப் போலத் தோன்றியது.

''என்ன கோபாலி, ஏன் என்னவோ போலிருக்கிறாய்?'' என்ற என் கேள்விக்குப் பதில் ஒன்றும் கூறாமல், பின்கை கட்டியபடி அறையில் உலாத்தத் தொடங்கினான்.

கைக் கடியாரத்தைப் பார்த்தேன். மணி பதினொன்றே முக்கால். ராஜா ஹனுமந்தப்பாவின் ஆவி - அப்படியொன்று இருக்குமானால் - பிரசன்னமாவதற்குப் பதினைந்தே நிமிடங்கள் இருந்தன.

எங்கிருந்தோ இனம் தெரியாத ஒலியொன்று கேட் டது. உற்றுக் கேட்டேன். யாரோ சிரிக்கிற சத்தம்.

3

அந்தச் சிரிப்புச் சத்தம் கேட்கிற வரையில் நான் தைரியமாகத்தான் இருந்தேன். பேயாவது பிசாசாவது என்று எனக்குள் நானே சொல்லிச் சிரித்துக் கொண்டிருந்தேன். எனக்குத் தெரியும் நான் பிஸிக்ஸ் மாணவன் என்று. துரும்பு அசைவதானாலும் விஞ்ஞான அடிப்படையில்தான் அசையும் என்று தீவிர மாய் நம்பிக் கொண்டிருந்தவன். அந்த உருவமில்லாத சிரிப்புக்கு ஏதோ ஓர் உற்பத்தி ஸ்தானம் இருக்கத்தான் வேண்டுமென்று எண்ணியவனாக, அந்தப் பெரிய அறை யின் எல்லாப் பகுதிகளையும் நோட்டம் விட்டேன். அந்தச் சிரிப்பை வெளியிட்டது ஒரு பேய் என்றால் அது பெரிய குறும்புக்காரப் பேயாக இருக்க வேண்டும். ஏனென்றால், நான் ஆராய்கிறவன் போல நாலு புறமும் பார்த்தவுடன் சிரிப்பை நிறுத்திக் கொண்டது. நான் தலையைத் தாழ்த்திய மறு வினாடியே மறுபடியும் சிரித்தது. எங்காவது மணி அல்லது தட்டு அல்லது டம்ளர் உரசிக் கொண்டு சிரிப்புப் போன்றதொரு ஒலியை எழுப்புகிறதோ என்று கூர்ந்து கவனித்தேன். அலமாரியில் கண்ணாடி டம்ளர்களும் பீங்கான் தட்டுக்களும் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. ஆனால் மயிரிழைகூட அவை அசையக் காணோம்.

''கோபாலி... உனக்குக் கேட்கிறதா?'' என்றேன்.

''என்ன?'' என்று கேட்கிற மாதிரி தலையை மட்டுமே அசைத்தான்.

''அந்தச் சிரிப்புச் சத்தம்? இதோ...? இப்போ...'' என்று நான் பரபரக்கையிலே ஹஹ்ஹஹ்ஹ என்று மறுபடி அந்தச் சிரிப்புக் கேட்டது. ஆனால் ஒருவர் சிரிப்பதல்ல. பல பேர் சிரிக்கிறாற் போல. ராஜா ஹனுமந்தப்பா

கல்யாணம் செய்து கொள்ளவிருந்த பெண் ஓடிப் போன சமயத்தில் பல ராஜாக்கள் சிரித்தார்களென்று வேலைக்காரக் கிழவன் சொன்னது எனக்கு ஞாபகம் வந்தது.

''கோபாலி, நீ போயிருந்த இடத்தில் யார் இருக் கிறார்கள்? பேசாமல் அங்கேயே போய்த் தங்கி விட லாமா?'' என்று கேட்டேன்.

''வேண்டாம்'' என்றான்.

அதுவரை பயந்தவனாக இருந்து கொண்டிருந்த அவன் இப்போது உறுதியாக, அவசரமாய்க்கூடப் பேசினது எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

கடியாரத்தைப் பார்த்தேன். மணி பன்னிரண்டு அடிக்கப் பன்னிரண்டு நிமிடம் இருந்தது. வினாடி முள் கைக்கடியாரத்தில் குதித்துக் குதித்து நகரும் போதெல் லாம் ஏன் இப்படி அவசரப்பட்டு ஓடுகிறது என்று ஒரு புறம் தோன்றியது. மறுபுறம் இன்னும் வேகமாக ஓடி அந்தப் பிசாசு வேளையைச் சீக்கிரமாகவே தாண்டிவிடக் கூடாதா என்றும் தோன்றியது.

எங்களுடைய பேச்சுக் குரலும் சந்தடியும் காவல் காரக் கிழவனை எழுப்பி விட்டது போலிருக்கிறது. அல்லது அந்தப் பயங்கர வேளை நெருங்க நெருங்க அவனுக்கே தூக்கம் விழித்து விட்டதோ என்னவோ? கிறீச் கிறீச்சென்று அவன் பல கதவுகளைத் திறந்து கொண்டும் சாத்திக் கொண் டும் வந்தான். முதலில் அவன்தான் வருகிறான் என்பதைப் புரிந்து கொள்ளாமல் ''யார்? யாரங்கே?'' என்று சத்த மாகக் குரல் கொடுத்தேன்.

''நான்தான் சார்'' என்றான் அவன். பிறகே எனக்குத் தைரியம் வந்தது.

*கிழவன் உள்ளே வந்து, ''சார், மணி பன்னிரண்டாகப் போகுது. இப்பவும் ஒண்ணும் கெட்டு விடவில்லை. போயிடுங்க சார். சின்ன வயசாயிருக்கிறீங்க. நீங்க யாரோ என்னவோ எனக்குத் தெரியாது. இருந்தாலும் பரிதாப மாக இருக்குது. போயிடுங்க தயவு பண்ணி. முட்டாள் தனமாய் உங்களுக்கு நீங்களே கெடுதி ஏற்படுத்திக்கா தீங்க'' என்றான் மூச்சு இரைக்க. பீதியைக் குழம்பாய்ப் பண்ணி அவன் முகம் பூரா அப்பியிருந்த மாதிரி இருந்தது.*

*நான் அவனுக்குக் கொஞ்சம் கனிவாய்ப் பதில் சொல்லியிருப்பேன். அதற்குள் கோபாலி மிக முரட்டுத் தனமாய், ''உன்னை யார் இங்கே கூப்பிட்டது? எங்களைப் பார்த்துக் கொள்ள எங்களுக்குத் தெரியும்! போ!'' என்று கத்தினான். ஏதோ இவனுடைய வீட்டில்தான் கிழவன் ஆக்கிரமிப்பு செய்திருக்கிற மாதிரி இதென்ன குருட்டு அதிகாரம் என்று நான் எண்ணிக் கொண்டேன்.*

*''சரி, சார். நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன்'' என்று கூறிவிட்டுத் திரும்பியவன் கதவி னருகே கொஞ்சம் நின்றான். ''ஆனால் ஒன்று...''*

*''என்ன?'' என்று கோபாலி சீறினான்.*

*''அந்தச் சிம்மாசனத்திலே மட்டும் உட்காராதீங்க. வேறே நாற்காலி, கட்டில் எதிலே வேணுமானாலும் உட் காருங்க. அந்தச் சிம்மாசனம் மட்டும் வேண்டாம்...''*

*''சரி, சரி. தெரியும் போ'' என்று அவனை விரட்டி னான் கோபாலி.*

*கொஞ்ச நேரமாய் மறந்து போயிருந்த அந்த வெற்றுச் சிம்மாசனத்தை நான் மறுபடி பார்த்தேன். அது காலியாக*

இருப்பதே ஒரு பயங்கரமான அழைப்பாக இருந்தது. வா கண்ணே, வந்து என் மடியில் உட்காரேன் என்று ஒரு தாய் தன் குழந்தையை அழைப்பதைப் போல, அது வாய் விட்டுக் கெஞ்சுகிற மாதிரி எனக்குப் பிரமை ஏற்பட்டது. சைத்தான்கூட அப்படித்தான் பிரியமாக, மென்மையாக அழைக்கும் என்று ஞாபகப்படுத்திக் கொண்டு கோபாலியைப் பார்த்தேன். மைசூரிலிருந்து என்னை ஸ்கூட்டரில் அன்பு டன் அழைத்து வந்த அந்த இனிமையான கோபாலிக்கும் இப்போது இந்த அறையில் இருக்கும் கோபாலிக்கும் பெரும் வித்தியாசம் இருக்கிற மாதிரி எனக்குப் பட்டது.

''கோபாலி...'' என்று ஏதாவது பேசலாம் என்று முயன்றேன்.

அவன் நான் ஒருவன் இருப்பதையே மறந்து விட் டாற் போலக் குறுக்கும் நெடுக்குமாக உலாவ ஆரம்பித் தான். முதலில் மெல்ல நடந்து கொண்டிருந்தவன் கொஞ்சம் கொஞ்சமாக வேகமாய் நடக்கத் தொடங்கினான். கை கால்களைச் சங்கிலி போட்டுக் கட்டிக் கூண்டில் அடைத்து வைக்கப்பட்டிருந்த ஒரு மிருகம் இருப்புக் கொள்ளாமல் தவிக்கிற மாதிரி அவன் நடையில் வேகமும் தாகமும் வெளிப்பட்டன. தோட்டப் பக்கம் செல்லும் ஒரு கதவு இருந்தது. அதைத் திறந்து கொண்டு வெளியே சென் றான். எதையோ தேடுகிறவன் போல் அங்கே ஓடினான். பிறகு அறைக்குள் திரும்பி வந்தான். வேகமாக நடக்கலா னான். அவன் முகத்தைக் கவனிக்க முயன்றேன். நான்கு மூலைகளிலும் கொளுத்தி வைக்கப்பட்டிருந்த மெழுகு வத்திகள் இப்போது மங்கிக் கொண்டிருந்ததால் அவன் என்ன உணர்ச்சியில் இருக்கிறானென்பதைக் கண்டுபிடிக்க

முடியவில்லை. ஆனால் அவனுக்குள் ஒரு கொடூரமான காட்டு விலங்கு குடியேறி விட்ட மாதிரி இருந்தது. அவனுடைய மூச்சு புஸ்புஸ்ஸென்று வெளிப்பட்டது. கைகளையும் கால்களையும் வீசிப் போட்ட போது ஆஸிலேட்டிங் விசிறியால் விஸ்ஸென்று ஒரு காற்று அடித்து விலகுமே அந்த மாதிரி மோதி நகர்ந்தது. அதிலே எனக்குப் பயம் ஏற்பட்டது.

''கோபாலி! ஏன் இப்படி நடை போடுகிறாய்? கொஞ்ச நேரம் பேசாமலிரேன்'' என்றேன்.

அவன் பதிலளிக்கவில்லை. முன்னைக் காட்டிலும் வேகமாக நடை போட்டான். அவனுக்கு உடம்பில் ஏதாவது கோளாறு ஏற்பட்டு விட்டதோ என்று எனக்குக் கவலை ஏற்பட்டது. ஆரம்பத்திலெல்லாம் நான் தைரியமாய்த் தான் இருந்தேனென்றால் ஒரு வேளை இவனுடைய துணை இருந்ததாலோ என்னவோ! இப்போது அவனுக்கே ஏதோ நேர்ந்து விட்ட மாதிரி இருக்கிறதே?

எப்படியாவது அந்தப் பயங்கர முகூர்த்தத்தைத் தாண்டிவிட வேண்டும். பொழுது விடிந்ததும் இவனோடு பெங்களூருக்குப் பிரயாணத்தைத் தொடரு முன்னால் ஒரு டாக்டரிடம் அழைத்துப் போய்க் காட்ட வேண்டும்.

கடியாரத்தை அச்சத்தோடும் ஆவலோடும் பார்த்தேன். பன்னிரண்டுக்கு இரண்டு நிமிடம் இருந்தது.

கோபாலியின் வேகமான நடை என் மண்டைக்குள்ளும் மார்புக்குள்ளும் புகுந்து கொள்கிறாற் போல இருந்தது. ''கோபாலி! நில்லு! ஸ்டாப் இட்!'' என்று கோபமாக ஓர் அதட்டல் போட்டேன்.

உடனே அவனுடைய நடையின் வேகம் குறைந்தது. ஆனால் அதுவே மேலும் பயம் விளைவிக்கக் கூடியதாக ஆகிவிட்டது. இரவு நேரத்தில் இரையைப் பிடிப்பதற்காகத் திருட்டுத்தனமாகச் சஞ்சரிக்கும் மிருகத்தின் வஞ்சகம் அவனுடைய நடையில் இப்போது தென்படலாயிற்று.

''கோபாலி! நிறுத்து உன் நடையை! உட்கார் கொஞ்ச நேரம்! ப்ளீஸ்!'' என்றேன்.

அப்படிச் சொல்வதற்காகவே காத்திருந்த மாதிரி சரேலென்று கோபாலி உட்கார்ந்தான் -

எந்தச் சிம்மாசனத்தில் உட்காரக் கூடாதென்று வேலைக்காரக் கிழவன் எச்சரித்தானோ அதே சிம்மாசனத்தில்!

''கோபாலி! அங்கே உட்காராதே! எழுந்திரு! எழுந்திரு!'' என்று கூவினேன். கூவிய வண்ணமே கைக் கடியாரத்தைப் பார்த்தேன். இன்னும் ஒரே நிமிடம் இருந்தது.

கோபாலி என் கூச்சலைக் காதிலேயே வாங்கிக் கொள்வதாகத் தெரியவில்லை.

''எழுந்திரு, கோபாலி. ப்ளீஸ். இதிலே உட்காராதீங்க என்று இப்பத்தானே அந்த வாட்ச்மேன் சொல்லிவிட்டுப் போனான்? எழுந்திரு'' என்று நான் சொல்லச் சொல்ல, அவன் அந்தச் சிம்மாசனத்தில் இன்னும் நன்றாக உட்கார்ந்து கொண்டான். ஆனால் அவனுடைய முகத்தைப் பார்க்க முடியவில்லை. வெளிச்சம் அவன் மீது விழாதது மட்டுமல்ல, தலையைக் குனிந்து கொண்டு தன் இரு கைகளிலும் புதைத்தாற் போல அவன் உட்கார்ந்திருந்தான்.

அவனை மறுபடியும் எச்சரிக்க வாயைத் திறந்தேன். அதே வினாடி -

அந்தப் பழைய மாளிகையின் எந்த மூலையிலிருந்தோ ஒரு கடியாரம் டணால் டணாலென்று கோவில் மணி போலப் பன்னிரண்டு அடித்தது. அது சரியான நேரம் தானா என்று என் கைக் கடியாரத்தைப் பார்க்க எண்ணி னேன். ஆனால் கையை உயர்த்திப் பார்க்கக்கூடப் பயமா யிருந்தது.

கோபாலி எந்த நிமிடத்திலும் என்ன வேணுமானா லும் ஆவான் என்று திகில் கொண்டவனாக ஓரடி விலகி நின்று கொண்டு எதிரே நிமிர்ந்து பார்த்தேன்.

அந்த அறையில் திசைக்கு இரண்டாக மொத்தம் எட்டு நிலைக் கண்ணாடிகள் இருந்தன. கண்ணாடிக்குள் கண் ணாடியாகப் பிம்பங்கள் ஏராளமாகத் தெரிந்தன. நான் பார்த்த போது, மெழுகுவத்திகளின் வெளிச்சத்தில், சிம்மா சனத்தில் கோபாலியும் அருகே நானும் எண்ணற்ற உரு வங்களாய்த் தென்பட்டோம். கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டே அசைவற்று நான் நின்றிருந்த போது கோபாலி மெல்ல மெல்லத் தலையை உயர்த்துவதைக் கண்டேன். அவன் முகம் நிமிர நிமிர, மெழுகுவத்தியின் வெளிச் சத்தில் அதன் முழு வடிவத்தைக் கண்ட போது -

என் ரத்தம் கல்லாயிற்று.

என் மார்பை அடைத்தது.

என் மூச்சு நின்றது.

காரணம், அது கோபாலியின் முகமல்ல, ஒரு கர்னாடக மான ராஜாவின் முகம்! ராஜா ஹனுமந்தப்பாவின் முகம்!

பட்டுத் தலைப்பாகை, வெல்வெட்டுக் கோட்டு, முத்து ஆரங்கள், காதிலும் கழுத்திலும் பளபளப்பான அணிகள் -

கண்ணாடியில் நான் பார்ப்பது உண்மைதானா என்றறிய, இந்தப் பக்கம் திரும்பினேன். வெகு பிரயத்தனப் பட்டுத்தான் என் கண்களை அசைக்க முடிந்தது.

ஆம். சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தது என் நண்பன் கோபாலியல்ல. ராஜா ஹனுமந்தப்பாதான் - அல்லது அவருடைய ஆவி!

சும்மா உட்கார்ந்திருக்கவில்லை. இடையிலிருந்து ஒரு குறுகிய வாளை மெல்ல வெளியிலெடுத்தார். உயர்த் தினார். அவருடைய கழுத்தை நோக்கியா, என்னுடைய கழுத்தை நோக்கியா என்று சொல்ல முடியாது.

மரண பயம் என்றால் எப்படி இருக்கும் என்பது எனக்கு அந்தக் கணத்தில்தான் புரிந்தது. மூச்சு அடைக் கிற மாதிரி இருந்ததால் மார்பைப் பிடித்துக் கொண் டேன். 'மை காட்!' என்று அலறியதும், தலை ஒரே சுற்ற லாகச் சுற்றிக் கீழே விழுந்ததுதான் எனக்குத் தெரியும். அதன் பிறகு பிரபஞ்சம் மொத்தமும் இருட்டாகி விட்டது.



எத்தனை நேரம் நான் அப்படி மயங்கிக் கிடந்தேனோ தெரியாது. என் காதில் விழுந்த முதல் சப்தம் ரொம்ப மெதுவாகக் கேட்டது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாகக் கீச் கீச்சென்று ஒலித்தது. அது பறவைகளின் ஓசை என்பதைப் புரிந்து கொள்ள எனக்கு வெகு நேரம் பிடித்தது. அப்படியானால் பொழுது விடிந்து விட்டதா? கண்களை ரொம்பச் சிரமப்பட்டுத் திறந் தேன். இமைகளைப் பிரிப்பது பெரும் பாறாங்கல்லை

மார்பின் மேலிருந்து அகற்றி அந்தண்டை வைக்கிற மாதிரி இருந்தது. ஆனால் அப்படியொன்றும் வெளிச்சம் வரக் காணோம். ஜன்னலுக்கு வெளியே தோட்டத்தில் இருளோ இருள் என்று செடி கொடிகள் அடைத்துக் கொண்டு கிடந்தன. என்ன நடந்தது, ஏன் நான் விழுந்தேன் என் பதை நினைவுக்குக் கொண்டு வர முயன்றேன். முடிய வில்லை. கொஞ்சம் சிந்தனை செய்தாலும் தலை கிறுகிறுத் தது. கைகால்களில் ரத்தம் மொத்தமும் வடிந்து விட்ட மாதிரி தோன்றியது. விரல்களை மூடிப் பிரிப்பதுகூடக் கடுமையான சுமையாக இருந்தது. அப்படி இருக்கிறது என்பதை முழுக்க நினைக்கு முன்பே மறுபடியும் ஒரு மயக்கம் வந்தது. நினைவை இழந்தேன்.

''ஐயா... ஐயா... சார்!'' என்று யாரோ உலுக்கி உலுக்கி எழுப்பினார்கள். பல மைல்களுக்கப்பால் அந்தக் குரல் ஒலிக்கிற மாதிரி இருந்து, பிறகு கொஞ்சம் கொஞ்சமாகக் காதின் அருகே கேட்டது. என்னை யாரோ உலுக்குகிறார் கள் என்ற உணர்வும் மூளையில் உறைத்தது.

இப்போது கண்ணைத் திறக்கையில் நல்ல வெளிச்சம் பரவியிருப்பதைக் கண்டேன். என் முகத்துக்கு வெகு அருகே ஒரு தாடி மீசை முகம் தென்பட்டது; ஒரு நாற்காலியின் கால் - இல்லை, அந்தச் சிம்மாசனத்தின் கால் - என் விலாப் புறத்தில் தெரிவதைப் பார்த்தேன். அந்த முகமும் அந்தக் காலும், நேற்று இரவு பன்னிரண்டு மணிக்கு என்ன நேர்ந் தது என்பதை முற்ற முழுக்க ஞாபகப்படுத்தின. குப்பென்று எனக்கு வியர்த்தது. மீண்டும் அந்த மரண பயங்கரம் என்னைப் பிடித்துக் கொள்ளும் போல் நடுங்கிப் போனேன்.

''ஐயா... ஐயா...'' என்ற வாட்ச்மேனின் குரல்தான் அமுத நீராக என்னுள் பாய்ந்து, தைரியத்தைத் தந்தது.

வாரிச் சுருட்டிக் கொண்டு விருட்டெடன எழுந்து கொள்வ தற்கான தெம்பையும் கொடுத்தது.

''ஐயா... நான் சொன்னேனே, கேட்டீங்களா? என்னங்க நடந்தது? ஏன் இப்படி விழுந்து கிடக்கிறீங்க?... அவர்... உங்க சினேகிதர் எங்கே?'' என்று கிழவன் கேட்டான்.

''கோபாலி! ... கோபாலி!'' என்று நானும் கூவிய வண்ணம் எழுந்து நின்றேன்.

அந்தப் புராதன அரண்மனையின் பழைய ஹாலும் லஸ்தர் விளக்குகளும் சோபாக்களும் நிலைக் கண்ணாடி களும் என் கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியாமல் விழிக்கிற மாதிரி அசைவற்று நின்றன.

காவல்காரக் கிழவனின் தோளைப் பிடித்துக் கொண் டேன். தள்ளாடி நடந்து வெளியே வந்தேன்.

''உங்க சிநேகிதர் எங்கே ஐயா போனார்?'' என்று கிழவன் பதறப் பதற எனக்குப் பீதியும் கோபமும் ஒருங்கே ஏற்பட்டன. அந்தக் கோபத்தினால் எனக்குப் புதிய பலம் வந்தது. ''கோபாலி! கோபாலி!'' என்று கூப்பிட்டபடியே தோட்டத்தைச் சுற்றி வந்தேன். மாளிகையின் மற்ற அறைகளில் தேடினேன். அதுவரை போயிராத மேல் தளத்துக்குக் கூடப் போய்ப் பார்த்தேன்.

கோபாலி - நேற்றிரவு என்னுடன் இருந்த கோபாலி - சொல்லச் சொல்லக் கேட்காமல் உட்காரக் கூடாத சிம்மாசனத்தில் உட்கார்ந்த கோபாலி - நிலைக் கண் ணாடியில் நூறு நூறு ராஜா ஹனுமந்தப்பாக்களாகத் தோற்றம் தந்த கோபாலி - தன் கழுத்தைத் தானே அறுத்துக் கொள் கிற மாதிரியான மாயக் காட்சியை எனக்குக் காட்டிய கோபாலி -

எங்கேதான் போனான்? என்னதான் ஆனான்?

நான் மறுபடியும் தலை சுற்றி விழவிருந்தேன் போலிருக்கிறது. சட்டென்று வாட்ச்மேன் என்னைப் பிடித்துக் கொண்டான்.

அந்தக் கையை விலக்குவதற்கு வேண்டி என் கையைத் தூக்கிய போது -

என்ன இது?

அப்போதுதான் பார்த்தேன். என் மணிக்கட்டுக்கு மேல் முழங்கை வரையில் -

ரத்தக் கறை தெரிந்தது.

''ரத்தம்... இந்த ரத்தக் கறை எப்படி வந்தது?'' என்று தடுமாறினேன்.

கிழவன் என் கையைப் பார்த்தான். என் முகத்தைப் பார்த்தான். ''ரத்தமா? எங்கே சார்?'' என்றான்.

அவனுக்குக் கண் பார்வை அவ்வளவு மோசமாயிருக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ''ரத்தம் தெரியவில்லை? இதோ இங்கே!'' என்று கோபமாகக் கையைத் தூக்கிக் காட்டினேன்.

அவனுக்குக் கண்ணில் பீதி பரவியது. குரல் குழறியது. ''இல்லீங்க... சத்தியமாய் ஒரு பொட்டு ரத்தம்கூட இல்லையே சார்! எனக்கு எதுவும் தெரியவில்லையே?'' என்றான்.

அவன் குரலில் உண்மை தொனித்தது. அவனுக்குத் தெரியாமல் என் கண்ணுக்கு மட்டும் தெரியக் கூடிய ரத்தக் கறையா... குழப்பத்திலும் ஆச்சரியத்திலும் நான் ஆடிப்

போய் விட்டேன். ''கொஞ்சம் தண்ணி கொண்டாங்க...'' என்று சொல்லி, அவன் கொண்டு வந்த நீரில் கையைத் தேய்த்துக் கழுவினேன். அப்புறமும் கூட ரத்தக் கறை அப்படியே இருக்கிற மாதிரி தோன்றியது. ஆகவே அது அசல் ரத்தமல்ல என்றும் என் மனத்தில் ஏற்பட்டிருக்கும் பிரமை என்றும் நிச்சயப்படுத்திக் கொண்டு என்னை நானே தேற்றிக் கொண்டு வாசலுக்கு வந்தேன்.

''கோபாலி! கோபாலி!'' என்று மறுபடியும் கூப் பிட்டேன்.

காலை வெய்யிலில் குளித்துக் கொண்டிருந்த மரங்கள் என் வேதனையைப் பார்த்துச் சிரித்தன.

''பேய் தூக்கிட்டுப் போயிட்டுதுங்க... பேய் வேலை தான்... அவ்வளவு சொன்னேனே... அடப் பாவமே! எத்தனை சின்ன வயசு...'' என்று வாட்ச்மேன் புலம்பப் புலம்ப அந்தப் பேய் பிடித்த மாளிகையை விட்டு வெளியே நடந்தேன். ஒரு பாவமும் அறியாத கோபாலிக்கு ஒரு கோரமான முடிவை நாம் தேடித் தந்து விட்டோமே என்ற எண்ணம் என் மனத்தைக் குடைந்தது. எல்லாம் ஒரு கெட்ட கனவாக இருந்தால் -

மெயின் ரோட்டை அடைகையில் -

''நரீஷ்!'' என்ற குரல் கேட்டது.

திடுக்கிட்டு நிமிர்ந்தேன். எதிரே கோபாலி ஸ்கூட்ட ரில் வந்து கொண்டிருந்தான்.

எவ்வித விகாரமும் இல்லாதவனாக, எவ்வித மாறு தலும் இல்லாதவனாக, கசங்காத கலையாத உடுப்புடன், ஆரோக்கியமாக -

''கோபாலி! நீ எங்கே போய் விட்டாய் திடீரென்று?'' என்று நான் படபடப்பாகப் பேச ஆரம்பிக்கு முன் -

''ஸாரி நரீஷ்! ராத்திரி வர முடியாமலே போய் விட்டது!'' என்றான்.

மீண்டும் என் தலை சுழன்றது. கீழே விழாதிருக்க அவன் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன். ''கோபாலி... நீ... நேற்று இரவு... வரவில்லை?'' என்றேன்.

''இல்லை நரீஷ்... என்னை மன்னித்து விடு'' என்றான் அமைதியான குரலில். ''கிழவன் சொல்லியபடி பி.டபிள்யூ. டி. இஞ்சினியரின் வீட்டைக் கண்டுபிடித்து விட்டேன். அவரும் இருந்தார். ஆனால் அங்கே போகும் போதே என்னவோ உடம்பில் ஓர் அசதி ஏற்பட்டது. மயக்கமும் வருகிற மாதிரி இருந்தது. இஞ்சினியர் என் உடம்பைத் தொட்டுப் பார்த்து விட்டு, 'காய்ச்சல் அடிக்கிறது. கொஞ்ச நேரம் தூங்குங்கள்' என்று சொல்லி ஒரு மாத்திரை கொடுத்தார். நான் உன்னைப் பற்றிப் பேசக்கூடச் சந்தர்ப்பப் படவில்லை. மாத்திரையை விழுங்கிய சில நிமிடத்துக் கெல்லாம் என்னை மறந்து தூங்கி விட்டேன். காலை யில்தான் கண் விழித்தேன். உடம்பு நன்றாக இருந்தது. இஞ்சினியரின் ஜீப் டிரைவர் ஸ்கூட்டரைச் சரிசெய்து வைத்திருந்தான். உடனே அவர்களிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டேன். நேற்று ராத்திரி நான் வந்ததாகச் சொன் னாயே, என்ன விஷயம்?''

திகைப்பிலிருந்து மெல்ல மெல்ல மீண்டு அவனுக்கு விஷயத்தை விவரமாகச் சொன்னேன். கோபாலியின் முகத்திலும் குழப்பம் படிந்தது. இருவரும் சில நிமிடங் கள் பேசாமலிருந்தோம். கடைசியில் நான் சொன்னேன்.

''இப்ப எனக்கு எல்லாம் விளங்குகிறது... அதற்கு - ராஜா ஹனுமந்தப்பாவின் ஆவிக்கு-ரொம்ப நாளாய்ப் பசி. இன்றைக்கு நாம் இருவரும் அகப்பட்டோம் என்று ஆவலுடன் காத்திருக்கிறது. ஆனால் நீ முதலில் புறப் பட்டுப் போய் விட்டாய். பின்னாலேயே உன்னைத் தேடிக் கொண்டு நானும் கிளம்பி விட்டேன். என்னையாவது எப்படியேனும் மடக்கிப் பிடித்துக் கொள்ள வேண்டும் என்று தவித்து உன் உருவில் என் எதிரில் நீயாக வந்திருக் கிறது! வழக்கமான நள்ளிரவு வேளை வந்ததும் அதன் சுய உருவம், மனித உடலில் இருந்த போது அது செய்த கடைசிக் காரியம் - அது வெளிப்பட ஆரம்பித்திருக்கிறது...''

கோபாலி குறுக்கிட்டான். ''அது சரி. ஆனால் உன்னை ஏன் கடைசி நிமிடத்தில் உயிருடன் விட்டு விட்டது? அவ்வளவு தூரம் உன்னை மடக்கிய பிறகு ஏன் தன் பசிக்கு உன்னை இரையாக்கிக் கொள்ளவில்லை?''

ஏன்? அவன் கேள்விக்கு விடை எனக்குத் தோன்ற வில்லை.

''சரி, அந்தக் கிழவன் பாவம், உன்னைப் பற்றி மிகவும் புலம்பினான். அவனைப் பார்த்து நீ நல்லபடி இருப் பதைச் சொல்லி விட்டுத் திரும்பிப் போகலாம்'' என்றேன்.

கோபாலியை முழுசாய்ப் பார்த்த போது காவல் காரக் கிழவனின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் வடிந்தது. விஷயத்தையெல்லாம் சொல்லி விட்டு, இன்னோர் ஐந்து ரூபாய் கொடுத்து விட்டுத் திரும்பினோம்.

ஒரு நிமிடம் நின்று அந்த மாளிகையைப் பார்த்தேன். முந்திய இரவு என்னைக் குலை நடுங்க வைத்த இடமா

இது! எவ்வளவு சாந்தம் தவழுவதாய், எவ்வளவு இனிமை யாய், எவ்வளவு இயற்கை அழகோடு இருக்கிறது!

''சரியாய் எட்டு மணி நேரத்துக்கு முன் இங்கே - மை காட்!'' என்று மார்பைப் பிடித்துக் கொண்டேன்.

என் கையை ஏதோ உறுத்தியது. மார்பில் கை பட்ட இடத்தில் இருந்த சட்டைப் பையைப் பார்த்தேன். பையி லு...

எனக்கு மெய் சிலிர்த்தது. திடுமென்று ஏற்பட்ட பரவசத்தில் நான் பேச்சிழந்தேன்.

''என்ன? என்ன விஷயம்?'' என்றான் கோபாலி.

''ராஜா ஹனுமந்தப்பாவின் பிடியில் நான் சிக்கியிருந்த வினாடியில், இதே மாதிரி என் மார்பைப் பிடித்துக் கொண்டு, எனக்கே தெரியாமல், இந்தப் பொருளைப் பிடித்திருக்கிறேன்!''

பையிலிருந்து அந்தச் சிறு பொட்டலத்தை எடுத்துக் காட்டினேன். மாண்டியாவுக்குப் பக்கத்திலிருந்த மகிஷாசுர மர்த்தினி கோவிலுக்கு நாங்கள் போன போது, அந்த குருக்கள் பையன் மடித்துத் தந்த குங்குமப் பொட்டலம்!

உலகத்தில் பேய், பிசாசு, காற்று, கறுப்பு, தீய சக்தி, அசுரத் தோற்றம் - எல்லாம் இருப்பது உண்மைதான் என்பதையும், ஆனால் எப்படிப்பட்ட தீய சக்தியும் தெய்வ சக்தியின் முன்னே நிற்க முடியாமல் ஓடிவிடும் என்பதும் உண்மை என்பதையும் அன்றைக்கு அந்தப் பழைய மாளிகையின் வாசலில் நானும் கோபாலியும் உணர்ந்து கொண்டோம்.

மந்திராலயத்துக்குச் செல்லும் பாதையில், பஸ்ஸுக்காகக் காத்திருந்த வேளையில் நரீஷ் இவ்வளவையும் சொல்லி முடித்தான். அதையெல்லாம் நம்புவதா நம்பாமல் இருப்பதா என்ற சிந்தனையில் நான் வெகு நேரம் பேசாமல் இருந்தேன்.

''என்ன ராஜா, ஒரேயடியாய் மௌனமாகி விட்டாய்?'' என்று நரீஷ் கேட்டதும் எனக்குக் காதில் விழவில்லை.

எங்கோ ஒரு குழந்தை வீரிட்டு அழுத பிறகுதான் எனக்குச் சுய உணர்வு ஏற்பட்டது. 'அழாதேம்மா... அழாதே. இதோ பஸ் வந்திடும். இதோ போயிடலாம்...' என்று அதன் தாய் தோளில் சாத்திக் கொண்டு அதைச் சமாதானப்படுத்தினாள்.

கடகடவென்று வெய்யில் ஏறத் தொடங்கியதால் சாலையில் புழுதி மினுமினுத்தது.

''ரெய்ச்சூர் போனால் அங்கிருந்து பஸ் கிடைக்கும். ஆனால் அங்கே போகிறதுக்கும் பஸ் வேணுமே...'' என்று பழைய பல்லவியையே பாடிக் கொண்டிருந்தார் ஒருவர்.

''நரீஷ், சீக்கிரமே மந்திராலயம் போய் விட்டால் தேவலை. என் மனசில் என்ன வேதனையுடன் நான் வந்திருக்கிறேன் என்பது உனக்குத் தெரிந்தால்...''

''உஷ்! அதை மட்டும் யாரிடமும் சொல்லாதே என்று சொன்னேனா இல்லையா?'' என்று அதட்டி என் புலம்பலை நிறுத்தினான் நரீஷ். ''சரி வா, ஒன்று செய்யலாம். அதோ, ஒரு பர்லாங்கு தூரத்தில் ஒரு மடமும் கோவிலும் இருக்கிறது. சிக்க மந்திராலயம் என்று பேர். வா, பஸ் வருவதற்குள் அங்கே போய் விட்டு வந்து விடலாம்'' என்று முன்னே நடந்தான்.

நிறைய இடம் விட்டு, நடுவில் ஒரு சின்ன மண்டபம் போல இருந்தது அந்த இடம். அது ஒரு மடம் என்று தெரிந்தது. நடுவே சிறு கோவில். தொங்கிக் கொண் டிருந்த மணியை நரீஷ் அடித்தான். சிவப்பாய் ஒல்லியாய் இருந்த ஒரு பெரியவர் தீர்த்தம் கொடுத்தார். மந்திரால யம் போகிற யாத்திரிகர்களுக்கு அங்கே வசதி செய்து தரு கிறார்களாம்.

தீர்த்தத்தைத் தலையில் தெளித்துக் கொண்டு விட்டு, பழைய இடத்துக்கே திரும்பினோம். வெற்றிலை பாக்குக் கடையில் ஒரு செம்பு தண்ணீர் வாங்கி முகத்தைக் கழுவிக் கொண்டேன். ஜில்லென்று முழங்கையில் தண்ணீரை விட்டுக் கொண்ட போது, ''நரீஷ், நீ சொன்ன கதையைக் கேட்டதிலிருந்து என் வயிற்றில் ஏதோ ஒரு குமட்டல் உணர்ச்சி இருந்து கொண்டேயிருக்கிறது. இதோ இந்தக் கையில் வெறும் தண்ணீர்தான்... ஆனால் ரத்தம் மாதிரியே இருக்கிறது...'' என்றேன்.

''இது பரவாயில்லை. ஆனால் ஆபரேஷனின் போது - சர்ஜரியில் - ரத்தம் வராமல் இருந்ததுண்டா? என்று கேட்டு விட்டு நரீஷ் சொல்ல ஆரம்பித்தான்.

## ரத்தம் வராத ஆபரேஷன்

**கா**ரைக்குடிக்குப் பக்கத்தில் வல்லம்பாறை என்று ஒரு சின்ன ஊர். ஐந்து வருடத்துக்கு முன்னால் அங்கே ஓரிடத்தில் ஐந்து பேர் சேர்ந்து ஆபரேஷன் செய்தார்கள். ஆனால், கண்ணுக்குத் தெரியும்படி, உடம்புடன் இருந்தவர் ஒருவர்தான். அந்த ஒருவரும் டாக்டரல்ல.

அவர்களிடம்...

அவரிடம்...

ஆபரேஷன் செய்து கொண்டது ஒரு பெண்.

## 5

கிளியோபட்ராவின் மூக்கு மட்டும் கொஞ்சம் நீளம் குறைவாக இருந்திருந்தால் உலகத்தின் சரித்திரமே மாறியிருந்திருக்கும் என்று சொல்வதுண்டு. அது போல வல்லபன் குடியிருந்த வீட்டுச் சொந்தக்காரரின் மகள், பிளஸ் டூ வகுப்பில் இன்னும் பத்து மார்க் இங்கிலீஷில் கூடுதலாக வாங்கியிருந்தால் வல்லபனின் வாழ்க்கையில் அந்த விசித்திர, வினோத, நம்ப முடியாத அனுபவங்கள் ஏற்பட்டிருக்க முடியாது. அவன் வாழ்க்கையும் வேறு விதமாகத் திரும்பியிருக்கக் கூடும்.

வல்லபன் பி.எஸ்ஸி படித்து முடித்த வாலிபன். எம்.எஸ்ஸி செய்ய ஆசைப்பட்ட போதிலும் அதற்கான வசதியும் வாய்ப்பும் கிடைக்காத காரணத்தால் வேலை தேடிக் கொண்டிருந்தான். சென்னை பெரிய மேட்டுப் பகுதியில், எவரெஸ்ட் ஓட்டலுக்கு எதிரில், பூந்தமல்லி ஹைரோட்டிலிருந்து கிளைக்கும் டஜன் கணக்கான தெருக்களில் ஒன்றில் ஒரு வீட்டு மாடியறையில் வசித்துக் கொண்டு, சிபாரிசுக் கடிதங்களும் யோக்கியதாம்சம் பத்திரங்களும் கொண்ட பிளாஸ்டிக் பையுடன் தினம் தினம் அலுவலகங்களில் ஏறியிறங்குவதும், பாண்ட், ஸ்லாக்குகளுக்குப் பொத்தான் பிய்ந்தால் கூட ஒரு பெரிய பிராப்ளமாக கவலைப்படுவதுமாக வாழ்க்கை நடத்தி வந்தான்.

அன்று, இரவு எட்டு மணி சுமாருக்கு அவன் அலுத்துக் களைத்து மாடிப் படியேறிக் கொண்டிருந்த போது ஒரு

சிறுமியின் விசும்பல் சத்தமும், 'அழுதாயோ கொன்னுடு வேன் கொன்னு!' என்று வீட்டுக்காரர் கோபத்தோடு கத்தும் சத்தமும், ''என்னங்க, நீங்க! பொட்டைப் பிள்ளையைப் போய் அடிச்சுக்கிட்டு!' என்று அவர் மனைவி மன் றாடுகிற சத்தமும் கேட்டது.

அவன் வருவதைக் கண்ட வீட்டுக்காரரின் மனைவி வெளியே வந்தாள். ''நீங்களே சொல்லுங்க தம்பி, புள் ளைங்க ஒழுங்கா படிக்கணும்னால் அதுங்க கேட்கிற புஸ் தகத்தை வாங்கிக் கொடுக்கணுமா வேணாமா? அது மாட் டாராம். ஆனால் புள்ளை மார்க் மட்டும் வாங்கணுமாம்!'' என்றாள்.

உள்ளே பாவாடைத் தலைப்பால் கண்ணைத் துடைத்துக் கொண்டிருந்த பெண், தன் அவமானத்தைப் பிறர் காணும்படி நேரிட்டு விட்டதே என்று இன்னும் அதிகமாக விசும்பினாள்.

''சே, சே, அழக் கூடாதம்மா, சாரதா. உனக்கு என்ன புஸ்தகம் வேணும், சொல்லு. நான் வாங்கி வந்து தரேன்'' என்று திரும்பத் திரும்ப வெகு நேரம் வல்லபன் மன்றாடிய பிறகுதான் அந்தப் பெண் தனக்கு இங்கிலீஷ் நோட்ஸ் வேண்டும் என்பதைத் தெரிவித்தாள். அப்பா அதை வாங்கித் தந்திருந்தால் பாஸ் மார்க்குக்குப் பத்து மார்க் அதிக மாகவே வாங்கி விடுவாளாம்.

''அவ்வளவுதானே? நாளைக்கு வாங்கித் தருகிறேன்'' என்று தேறுதல் சொல்லிவிட்டுத் தன் அறைக்குச் சென் றான் வல்லபன்.

கையிருப்பு நாளைச் சாப்பாட்டுக்கே போதுமா என் றிருக்கும் போது எப்படி வாக்கைக் காப்பாற்றப் போகி

றோம் என்று கவலைப்பட்டபடி கயிற்றுக் கட்டிலில் புரண்டு கொண்டிருந்தான்.

கண்ணனைக் கேட்டால் என்ன?

சட்டென்று ஞாபகம் வந்ததும் எழுந்து உட்கார்ந்து கொண்டான், உற்சாகமாய்.

கண்ணன் அவனுடன் படித்தவன். ஆனால் வேலை தேட வேண்டிய அவசியமில்லாமல் ஜாலியாய், சௌகரிய மாய் இருப்பவன். அவனுக்கு ஒரு தங்கை பிளஸ் டூவில் படிப்பதாகச் சொல்லியிருந்தான். அவளிடம் நிச்சயம் நோட்ஸ் இருக்கும். சும்மாவே கூடக் கொடுக்கலாம். குறைந்த பட்சம் இரவலாவது கிடைக்கும்.

நிம்மதியாய் ஒரு டம்ளர் தண்ணீரைக் குடித்துக் விட்டுத் தூங்கினான்.

மறுநாள் பிற்பகல் மூன்று மணி சுமாருக்கு தியாகராய நகர் போய், வாணி மகாலுக்குப் பக்கத்திலிருந்த வீட்டை அடைந்த போது கண்ணன் தன் மோட்டார் பைக்கில் வெளியே புறப்பட்டுக் கொண்டிருந்தான்.

விஷயத்தைக் கேட்டதும் கண்ணன் தானே தங்கை யின் அறைக்குப் போய் நோட்ஸை எடுத்து வந்தான்.

மறுபடியும் வாசலுக்கு வந்த போது, வல்லபன் வல்லபனின் வழியிலும் கண்ணன் கண்ணனின் வழியி லும் சென்றிருந்தால் இந்தக் கதையைச் சொல்ல வேண்டிய அவசியமே வந்திருக்காது.

''வல்லப்! இப்ப உனக்குப் புரோக்ராம் எதுவும் இல் லையே?' என்று கேட்டான் கண்ணன்.

''நத்திங்'' என்றான் இவன்.

''சரி, பின்னால் உட்கார்.''

''எங்கே போகிறாய்?''

''உட்காரேன். ஒரே டல்லாயிருக்கிறாயே? உற்சாக மான இடத்துக்குத்தான் போகிறேன். நீயும் வா'' என் றான் சிநேகிதன்.

''நீ டேர்டெவில் அப்பா! எங்கேயாவது என்னை இழுத்து விட்டு விடுவாய். நான் வரவில்லை'' என்று வல்லபன் மறுத்தான்.

''தப்பான இடம் இல்லை. பயப்படாதே. குஷியாய் இரண்டு மூன்று மணி நேரம் போகும். என் கஸின் ஸிஸ்டர் படிக்கிற காலேஜில் ஒரு யூத் ஃபெஸ்டிவல். இன்று ஏகப் பட்ட காலேஜ் குமரிகள் பாடுகிறார்கள். ஃப்ரீ என்ட்ரன்ஸ். நிகழ்ச்சி முடிந்ததும் டிரைவ் இன்னில் சாப்பிட்டுவிட்டு, உன்னை வீட்டில் ட்ராப் பண்ணி விடுகிறேன்'' என்றான் கண்ணன்.

ஏதோ பொழுது போகட்டும் என்று வல்லபன் மோட் டார் பைக்கில் ஏறியமர்ந்தான்.

என்றாலும், போன இடத்தில், பசியைக் கூட மறக்க வைக்கும் அளவுக்கு அவன் மனம் நிறைந்தது. போன வருடம் வரையில் அவன் அனுபவித்து வந்த கல்லூரி வாழ்க்கை - கும்மாளமான மாணவக் கும்பல் - மினியும் மாக்ஸியும் மிடியும் சல்வார் கமீசும் ஸாரியுமாய்ப் பிரகாச மான வதனங்கள் - ஹாய்! - என்னம்மா எப்படீக்கீறே? - சரியான கடி! பெரிய கசமாச்சே! மாட்டிக்காதே அதுங் கிட்டே! - வெடிச் சிரிப்புக்கள்!

ஆடிட்டோரியம் நிரம்பி வழிந்தது. கண்ணன் எங்கோ மறைந்து விட்டான். வல்லபன் காலரியில் ஓர் இடம் பிடித்துக் கொண்டான். வெளியில் பார்த்ததைவிட அதிக உல்லாசம் இங்கே ததும்பி வழிந்தது. வல்லபன் தன்னையும் தன் பிரச்சினையையும் ஊரிலிருக்கும் அம்மாவையும் திரும்பிச் செல்லப் பஸ்ஸுக்குப் பணம் போதாதே என்பதையும், இன்னும் இப்படிப்பட்ட நூற்றுக்கணக்கான கவலைகளையும் மறந்தான். உற்சாகமும் சிரிப்பும் கைத் தட்டலும் நிறைந்த ஒரு புதிய உலகத்தில் ஒரு புதிய வாலிபனாக மாறினான்.

கிடார் இசைத்துக் கொண்டு ஒரு பெண் பாடினாள். எல்லாருடனும் சேர்ந்து அவனும் சீட்டியடித்தான். இன்னொருத்தி கையில் பிடித்த மைக்குடன் மெல்ல ஆடிக் கொண்டே பாடினாள். காலரியில் எல்லா இளைஞர்களும் எழுந்து நின்று ஆடினார்கள். வல்லபனும் ஆடினான். அதற்குப் பின்னால் ஒருத்தி 'வா மச்சான் வா! வண்ணாரப் பேட்டை!' என்று அழைத்தாள். எல்லாருடனும் வல்லபன் கை தட்டினான். தொடர்ந்து வந்த ஒரு பெண் கர்னாடக ராகத்தில் ஒரு கர்னாடகப் பாட்டுப் பாடியதும் -

''ஏய்! உள்ளே போ!'' என்று பல பேர் கத்தினார்கள்.

''கெட் அவுட்!'' என்று வல்லபனும் கூவினான்.

அப்போது அவன் பக்கத்திலிருந்த ஒரு இளைஞன், ''டோன்ட் ஸே தட்!'' என்றான். பின்னாலிருந்த சிலர் ''வாத்தியாரே! யூ ஷட் அப்!'' என்று அவனை அதட்ட, அவன் வல்லபனை முறைத்தான். வல்லபன் எதையும் லட்சியம் செய்யவில்லை. குஷியின் உற்சாகத்திலிருந்தான்

அவன். இதற்குள் ஓவர் உற்சாகமுள்ள சிலர் காகித அம்பைப் பறக்க விட்டார்கள் மேடையை நோக்கி.

வல்லபன் தன் கையிலிருந்த நோட்ஸைப் பார்த்தான். அதற்கு ஒரு நியூஸ்பேப்பரில் அட்டை போட்டிருந்தது. பரபரவென்று அதைப் பிரித்தான். காகித அம்பு செய்து இரண்டு சுட்டு விரலுக்கிடையே வைத்து -

''யூ மேனர்லஸ் புரூட்!'' என்று அந்த இளைஞன் பளீரென்று அறைந்தான் வல்லபனின் தோளில். வல்லபன் நிலை தடுமாறி நாலு நாற்காலிகளைத் தள்ளிக் கொண்டு கீழே விழ, முன் பல் உடைந்து ரத்தம் கசிய, அவனை அடித்த வாலிபனை மற்றவர்கள் 'யார்டா அவன் பஞ்சாங்கம்!' என்று மடக்கி அடிக்க, பிரின்ஸிபால் மேடைக்கு வந்து 'ப்ளீஸ்! ப்ளீஸ்!' என்று கெஞ்ச, மைக் வேலை செய்யாத தால் அவருடைய மன்றாடல் யாருக்கும் தெரியாமற் போக, இரண்டொரு போலீஸ் தலைகள் எட்டிப் பார்க்க -

அரை மணி நேரம் கழித்து, கிழிந்த சட்டையும் கலைந்த தலையும், ரத்தம் கசியும் வாயுமாக வல்லபன் வெளிப்பட்டான். அந்த அமளியில் கண்ணனையும் காணோம், அவன் வாக்களித்த சாப்பாட்டையும் காணோம்!

காலேஜ் வாசலை அவன் தாண்டிக் கொண்டிருந்த போது ஒரு கார் அவனைத் தாண்டிச் சென்று நின்றது. உள்ளே இரண்டு பெண்கள் இருந்தார்கள். காரை ஓட்டி வந்த பெண், ''இஃப் யூ டோன்ட் மைண்ட் உங்களை டிராப் பண்ணுகிறேன்'' என்று அழைத்தாள்.

''தாங்க் யூ'' என்று சொல்லி, பின்னால் ஏறிக் கொண்டான்.

பிறகுதான் அவள் முகத்தைப் பார்த்தான். தூக்கி வாரிப் போட்டது.

கர்னாடக சங்கீதம் பாடிய பெண்!

''ஐம் சவிதா. இவ்வளவு கலாட்டாவுக்கும் காரணம்'' என்று அவள் புன்னகையுடன் தன்னை அறிமுகம் செய்து கொண்டாள்.

''ஓ, நோ. நீங்கள் ரொம்ப ரொம்ப அருமையாகப் பாடினீர்கள். இவர்களுக்குத்தான் ரசிக்கத் தெரியவில்லை'' என்றான் வல்லபன். 'உண்மையில் நான்தான் கலாட்டா வுக்குக் காரணம்,' என்று சொல்லிக் கொள்ள அவன் மனச் சாட்சி குறுகுறுத்தது. வெட்கப்பட்டதால் சொல்ல வில்லை.

அப்போது அவர்களுக்கே தெரியாது-அந்தச் சந்திப்பு தீவிரமான காதலாக மாறப் போகிறதென்று. ஆனால் அடுத்த பதினைந்து நாட்களுக்குள் அவர்கள் கடற்கரையி லும் கல்லூரி வாசலிலும் தற்செயலாகவோ வேண்டு மென்றோ சந்தித்துச் சந்தித்து அவன் மனசில் இவளும் இவன் மனசில் அவளும் ஒரு சோபா போட்டுக் கொண்டு அழுத்தமாக உட்கார்ந்து விட்டார்கள்.

சவிதாவின் தகப்பனார் காரைக்குடியில் இருந்தார். பெரும் கோடீசுவரர். மதுரையில் இரண்டு மில்லும் ராணிப் பேட்டையில் ஒரு தொழிற்சாலையும் வைத்திருந்தார். மெர்க்காராவிலும் ஊட்டியிலும் எஸ்டேட்டுகள் இருந்தன.

இவ்வளவு இருந்தாலும், கண்டிப்பானவர். பிடிவாதக் காரர். பழமைவாதி. ஆகவே, அவள் ஊரில் காலடி வைத்த வுடனே தன் காதலுக்கு ஈமச் சடங்குதான் என்று பயந்

திருந்தான் வல்லபன். ஆனால் பயப்பட வேண்டிய சவிதா பயப்படவில்லை. ''அப்பாவிடம் பேசி வாதாடி, வீட்டி லுள்ளவர்களையும் என் கட்சியில் சேர்த்துக் கொண்டு நம் கல்யாணத்துக்கு அனுமதி வாங்கத்தான் போகிறேன். அப்பாவின் மில்லில் நீங்கள் ஐயாயிரம் சம்பளம் வாங்கும் டைரக்டராகிறீர்களா இல்லையா பாருங்கள்'' என்று அவர்கள் சந்திக்கும் ஒவ்வொரு முறையும் சொன்னாள்.

கல்லூரி முடிந்து அவள் ஊருக்குப் புறப்பட்டாள்.

ராமேசுவரம் எக்ஸ்பிரசில் அன்று முதல் வகுப்பு ஜன்னலோரமாக அவளும் பிளாட்பாரத்தில் அவனுமாக விடை பெற்றுக் கொண்ட காட்சியைப் பல பேர் பார்த்துச் சிரித்திருப்பார்கள். சவிதா புன்னகையுடன் ஏதேதோ சொல்லிக் கொண்டிருந்தாள். வல்லபன் யாரும் பார்க்காத போது கைக் குட்டையால் தன் கண்ணைத் துடைத்த வாறிருந்தான்.

''வல்லப்! என்ன இது அசடாட்டம்!'' என்று அவன் கைகளை மெல்லத் தட்டிக் கொடுத்தாள் அவள். ''ஊருக்குப் போனதும் நம் பிரசினையை முடித்து உங்களுக்கு லெட் டர் போடுகிறேன். அனேகமாய் ஒரு வாரத்துக்குள் எழுது கிறேன். உடனே புறப்பட்டு விடவேண்டும். என்ன?''

அவன் ஊம் ஊம் என்று தலையாட்டிக் கொண் டிருந்த போது எக்ஸ்பிரஸ் புறப்பட்டது.

ஒரு வாரத்துக்கெல்லாம், சொன்னபடியே அவள் கடிதம் போட்டாள். உடனே வரும்படியும் எழுதினாள் -

வீட்டுக்குள் சிறைப்படுத்தப்பட்டிருக்கும் தன்னை வந்து மீட்டு அழைத்துப் போகும்படி!

ஆம். வல்லப் பயந்திருந்தபடிதான் நடந்து விட்டது. 'எவனோ ஊர் பேர் தெரியாத அன்னக் காவடிக்கு உன்னைக் கொடுப்பதா? ஒரு நாளும் இல்லை!' என்று சொல்லி விட்டாராம் அவள் தந்தை. நேரில் வந்து அவருடன் பேசி, அவர் சம்மதத்துடனோ சம்மதம் இல்லாமலோ தன்னை அழைத்துப் போகும்படி எழுதியிருந்தாள்!

அழைத்து வருவதா!

எங்கே அழைத்துக் கொண்டு வருவது! அழைத்து வந்து எப்படி அவளைக் காப்பாற்றுவது? அந்தப் பிரச் சினை விசுவரூபமாக அச்சுறுத்திய போதிலும் காதலின் வேகம் அவனை முடுக்கி விட்டது. என்னை நம்பிய வளைப் பிச்சை எடுத்தாவது காப்பாற்றுவேன் என்கிற வைராக்கியத்துடன். வீட்டுக்காரரிடமே செலவுக்குக் கடன் வாங்கிக் கொண்டு புறப்பட்டான் விட்டான். ரயிலைத் தவற விட்டு விட்டதால் பஸ்ஸைப் பிடித்துக் கொண்டு ஊரை அடைந்தான்.

அப்போது இரவு எட்டு மணியாகி விட்டது. காரைக் குடிக்கு அவன் முன்னே பின்னே வந்ததில்லை. அங்கே யாரையும் அவனுக்குத் தெரியாது. பொழுது விடிந்த பிறகு, எப்படியேனும் சவிதாவுக்குத் தன் வருகையைத் தெரிவிக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டான்.

பஸ் ஸ்டாண்டுக்குப் பக்கத்திலிருந்த ஒரு லாட்ஜில் இரவு தங்க நினைத்தான். பக்கத்து ஊரில் ஒரு செல்வந்தர் வீட்டுக் கல்யாணத்துக்காக எல்லா அறைகளும் நிரம்பி விட்டன. வல்லபனும் அவனைப் போலவே இன்னோர் இளைஞனும் ரூம் கேட்டு நின்றிருந்தார்கள்.

இவர்களும் ஒரு வேளை அந்தப் பெரிய மனிதர் வீட்டுக் கல்யாணத்துக்கு வந்திருக்கக் கூடும் என்று லாட்ஜ் மானேஜர் நினைத்தார். ''காலையில் அறைகள் காலி யாகும். தருகிறேன். ராத்திரி தங்குவதற்கு வேண்டுமானால் அதோ ஹால் இருக்கிறது. போய்ப் படுத்துக் கொள் ளுங்கள்'' என்று காட்டினார்.

''தாங்க்ஸ்'' என்று அந்த இளைஞன் முன்னே நடக்க, வல்லபனும் பின் தொடர்ந்தான்.

மங்கலாக ஒரு பல்பு மட்டுமே அங்கே எரிந்து கொண்டிருந்தது. மறுகோடியில் ஓர் ஆள் கீழே ஒரு கம்பளத்தை விரித்துக் கொண்டு சப்பணமிட்டு உட்கார்ந் திருப்பது தெரிந்தது. தலையைக் குனிந்திருந்ததால் முகம் எப்படி இருக்குமென்று தெரியவில்லை. சாமியார் மாதிரி இருந்தார். அல்லது சாதாரணமான ஆளாகவும் இருக்கலாம். அரை இருட்டில் அப்படித் தெரிகிறதோ என்னவோ என்று வல்லபன் நினைத்துக் கொண்டான். முற்றத்துக் குழா யில் தண்ணீர் வந்தது. முகம் கழுவிக் கொண்டு ஒரு வாய் குடித்தான். கொண்டு வந்திருந்த ப்ரீஃப்கேஸைத் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்தான். அந்த இளைஞனும் கொஞ்சம் தள்ளிப் படுப்பது தெரிந்தது.

பவர் கட் இருந்த சமயம் அது. ஆகவே அந்த மங்கல் பல்பு திடீரென அணைவதும் திடீரென எரிவதுமாக இருந் தது. கடைசியில் ஒரேயடியாய் அணைந்தே போய் விட்டது.

மறுநாளைக்கு எப்படி சவிதாவைப் பார்க்கப் போகி றோம், பிறகு என்ன செய்யப் போகிறோம் என்ற கவலை களிலேயே முழுகியிருந்தான் வல்லபன். பிறகு எப்போது தூங்கினானோ தெரியாது.

''மிஸ்டர்! மிஸ்டர்!'' என்று அவனை யாரோ உலுக்கினார்கள். தூக்கம் விழித்த போதிலும் இருட்டில் எதுவும் தெரியாமல், ''யார்? யாரது?'' என்றான்.

''நான்தான்... உங்கள் பக்கத்தில் படுத்திருந்தேனே...'' என்றான் அந்த வாலிபன். ''ஒரு விசித்திரம் - அதிசயம் - என்னவோ பயமாக இருக்கிறது...''

அவனுடைய குரலில் ஒரு நடுக்கம் புலப்பட்டது. வல்லபன் எழுந்து உட்கார்ந்தான். ''என்ன... என்ன விஷயம்?''

''அந்த ஆள்... சாமியார் மாதிரி ஒருத்தன் அந்தக் கோடியில் படுத்திருக்கவில்லை?''

''ஆமாம், என்ன அவனுக்கு? உங்கள் பை கிய் எதை யாவது கிளப்பிக் கொண்டு போய் விட்டானா?''

''இல்லை... வந்து...'' அவன் குரல் இன்னும் நடுக்கமெடுத்தது. ''அவன்... அவன் மனிதனா... இல்லை... வேறே ஏதாவதா என்று பயமாயிருக்கிறது...''

திகீரென்று மார்பை அடைக்கிற மாதிரி ஆயிற்று வல்லபனுக்கு. ''நீங்கள்.. நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' இருட்டைத் துழாவ முயன்றான். அந்த ஆள் படுத்திருந்த இடத்தில் எதுவும் தெரியவில்லை. ''வேறே ஏதாவது என்றால்?''

''எனக்குச் சொல்லத் தெரியவில்லை. பாத்ரூம் போக வேண்டியிருந்தது. அந்த ஆளை - அதை - தாண்டிக் கொண்டு போனேன். சில்லென்றிருக்கிற மாதிரி ஒரு உணர்ச்சி ஏற்பட்டது. என்ன அது என்று குழம்பிக் கொண்டே திரும்

பினேன். அந்த இடத்தில் மறுபடியும் ஒரு சில்லிப்பு ஏற்பட்டது. கீழே தண்ணீரோ ஈரமோ இல்லை... இதுவோ கடுமையான கோடை... இந்த மூலையில் வியர்த்துப் புழுங்குகிறது. ஆனால் அந்த மூலையில்...''

வல்லபன் எழுந்தான். போய்ப் பார்ப்பதா என்று தயக்கமாயிருந்தது. ஆனால் தன் வயதுக்கொத்த இவனுக்குள்ள தைரியம் நமக்கு இருக்க வேண்டாமா என்று மெல்ல நடந்தான்.

அந்த மூலையைச் சமீபிக்கச் சமீபிக்க ஒரு குளிர் ஏற்படுவதை உணர முடிந்தது. கோடைக்கானல் பஸ்ஸில் அவன் ஒரு முறை சென்றதுண்டு. மாலையில் உயரத்துக்குப் பஸ் ஏற ஏறக் கொஞ்சம் கொஞ்சமாய் ஒரு சில்லிப்பு காலைக் கவ்வுவதை அவன் உணர்ந்திருக்கிறான். அதே போல - ஆனால் மென்மையான, இதமான, இனிமையான குளிராக இல்லாமல் -

எப்படியோ அந்த மூலையை அடைந்த போது, பனிக் கட்டியின் நடுவே அவனைத் தூக்கிப் போட்டாற் போல் ஒரு குளிர் அவனை விறைக்க வைத்தது. எங்கிருந்தோ ஒரு குளிர் காற்று சீறிக் கொண்டு வருகிற மாதிரி இருந்தது. அந்தக் காற்று அவன் உடைகளைத் துளைத்து, சருமத்தைக் கிழித்து, நரம்புகளுக்குள் குடியேறுகிறாற் போல் தோன்றியது. இமயமலையின் பனிப் புயல் போன்ற ஒன்று அவனை நாற்புறத்திலிருந்து சூழ்ந்து அடித்தது.



**வ**ல்லபன் தைரியம் இழந்தவனாக, மெய் நடுங்கியவனாகத் திரும்பி நகர்ந்தான். எந்தக் குளிரையும் காணோம். வெளியே வானமும்

நட்சத்திரங்களும் அமைதியாக இருந்தன. வெகு தொலை வில் அந்த வாலிபன் இவனையே பார்த்துக் கொண்டு நிற்பதும் தெரிந்தது.

அந்த ஆள், ஆள் தானா? அங்கேதான் படுத்திருக்கிறாரா என்று பார்த்தான். முயன்றான். முடியவில்லை. காலால் துழாவினான். துழாவத் துழாவ யாருமே இருப்பதாகத் தெரியவில்லை. அதே சமயம் வினாடிக்கு வினாடி... அந்தக் குளிர் அதிகரித்தது... அவன் பரிசோதனையைத் தடுத்தது.

அதற்குள் அந்த அறையில் இருள் அடர்ந்து சூழ்ந்தது.

''ஐயா! ஐயா!'' என்று கூப்பிட்டு, மரமாய் விறைத்துப் போன காலால் தரையைத் தட்டி உதைத்தான்.

அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. உதைத்த காலில் எதுவும் தட்டுப்பட்ட மாதிரி இருக்கவில்லை. வெறும் காற்றை உதைத்தால் எப்படி இருக்குமோ அப்படி இருந்ததது.

''பேசாமல் நம் இடத்தில் போய்ப் படுக்கலாம்'' என்றான் அந்த இளைஞன்.

அதுவும் சரிதான் என்று திரும்பிச் சென்றான் வல்லபன். மனதில் ஒரு பீதி ஏற்பட்டது. தூக்கம் வராதவனாகப் புரண்டு கொண்டேயிருந்த போது பொழுது விடிந்து விட்டது. அவன் எழுந்து உட்கார்ந்த அதே சமயம் அந்த இளைஞ னும் தூக்கம் விழித்தான்.

வல்லபனின் முகத்தைக் கண்டவன், திடுக்கிட்டு மிரண்டவனாக, ''நீங்கள்...நீங்கள்... என் பக்கத்தில் படுத்திருந்தவர்தானே?'' என்றான்.

''ஏன்? நானேதான். ஏன்?''

''இல்லை...உங்கள் தலை நேற்று கறுப்பாயிருந்ததே. இப்போது...'' அவன் சரேலெனத் தன் ஹாண்ட் பாக்கை எடுத்துக் கொண்டான். திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே வாசலுக்கு ஓடினான். போயே போய் விட்டான்.

வல்லபனுக்கு எதுவும் புரியவில்லை.

'என்ன கண்டான் நம்மிடம்? தலை என்று ஏதோ சொன்னானே? என்ன வந்தது என் தலைக்கு?'

குழாயினருகே ஒரு முகம் பார்க்கும் கண்ணாடி இருந்தது. விளக்கு வெளிச்சமும் இருந்தது. அருகே சென்று தன் முகத்தைப் பார்த்தான்.

முகத்தில் எவ்வித மாறுதலும் இல்லை. ஆனால், தலை மயிர்தான் - அவனுடைய கன்னங்கரேலென்ற தலை, செக்கச் செவேலென்று செம்பட்டையாக ஆகியிருந்தது.

விடிந்ததும் மானேஜரின் அறைக்குச் சென்றான்.

''நீங்கள்...'' என்று லாட்ஜ் மானேஜர் அவனைக் குழப்பத்துடன் பார்த்தார். அவன் கண்களைப் பார்க்கவில்லை. அவர் பார்வை உயர்ந்து தன் தலையை நோக்குவதை உணர்ந்தான் வல்லபன்.

''நேற்று ராத்திரி ரூம் கேட்டேனே, அதற்குள் மறந்து விட்டீர்களா?'' என்றான், சிரமப்பட்டு புன்னகையை வரவழைத்துக் கொண்டு. ''நீங்கள்கூட ஹாலில் படுத்துக் கொள்ளச் சொன்னீர்களே? காலையில் ரூம் காலியானால் தருவதாகச் சொன்னீர்களே...?''

''ஆமாம், ஆமாம்'' என்றபடி பெரும் ரெஜிஸ்டர் நோட்டைப் புரட்டலானார் மானேஜர். இருந்தாலும் பீதி

வசப்பட்டவராக அவனுடைய தலையையே திரும்பத் திரும்ப ஏறிட்டு அவர் விழிகள் பார்ப்பதை அவன் கவனித்தான். 'ராத்திரி நாம் சரியாய்க் கவனித்திருக்க மாட்டோம்' என்று அவர் தனக்குத்தானே சமாதானம் செய்து கொள்வது அவனுக்குப் புரிந்தது. அவருடைய தவிப்பை நீட்டிக்க விரும்பாதவனாக, ''இனிமேல் எனக்கு ரூம் தேவையிருக்காது என்று நினைக்கிறேன். தாங்க்ஸ்'' என்று புறப்பட்டான்.

பதிவுப் பேரேட்டை 'டொம்' என்று மூடிய சத்தத்திலேயே அவருடைய மனதில் ஏற்பட்ட பெரும் நிம்மதி புலப்பட்டது. ராத்திரி கறுப்பு நிறக் கிராப்பும் பொழுது விடிந்ததும் செம்பட்டைத் தலையுமாகக் காட்சி தரக் கூடிய ஒருவன் தன் லாட்ஜில் தங்காமல் இருப்பதே நலம் என்று அவர் கடவுளுக்கு நன்றி சொல்வது அவனுக்குக் கேட்கிற மாதிரி இருந்தது.

நாலடி நடந்த வல்லபன் அவரிடம் திரும்பி வந்தான். ''ஒரு இன்ஃபர்மேஷன்...'' என்றான்.

''என்ன, என்ன? சொல்லுங்களேன்?'' என்று பதைத்தார் அவர். நீ சீக்கிரம் போய்ச் சேர்ந்தால் சரி என்ற தவிப்புப் புரிந்தது.

''ஹாலில் என்னுடன் படுத்திருந்தாரே...''

''அந்த யங் மேன்? கொஞ்சம் முன்னால்தான் அவரும் போய் விட்டார் போலிருக்கிறது. ஆளே காணோம்.''

''அவரைக் கேட்கவில்லை. இன்னொரு ஆள். கொஞ்சம் வயதானவர். சாமியார் மாதிரி - முகம் எனக்குச் சரியாகத் தெரியவில்லை...''

'இன்னொரு ஆளா?' லாட்ஜ் மானேஜர் திகைத்தார். ''ஹாலில் நேற்று ராத்திரி வேறே யாரும் படுக்கவில் லையே... உங்கள் இரண்டு பேரைத் தவிர! இப்போது எங்கே இருக்கிறார்?''

''இப்போது எங்கே இருக்கிறார் என்பது தெரியாத தால்தான் கேட்கிறேன். ராத்திரி நாங்கள் படுக்கப் போன போது இருந்தார். காலையில் காணவில்லை'' என்றான் வல்லபன்.

''டேய் வேலு! யார்டா அங்கே காளி? கிணத்தடி யிலே போட்டிருந்த அண்டா தவலையெல்லாம் சரியா யிருக்குதா பாருங்க! ஏதாவது ரூம் பூட்டு உடைந்திருக் கிறதா, கவனியுங்கள்...'' என்று பரபரத்த வண்ணம் அவர் உள்புறம் வேகமாகச் சென்றார். நாம் 'ஏதோ ஒன்று' என்று நினைப்பதை இவர் திருடன் என்று நினைக்கிறார்! ஒரு பெருமூச்சுடன் வினாடி நேரம் தயங்கினான் வல்லபன். பிறகு, சவிதா சொல்லியிருந்த விலாசத்தைத் தேடிக் கொண்டு புறப்பட்டான்.

வாசலைத் தாண்டிய போது, அங்கேயும் குழாயடி யில் ஒரு கண்ணாடி இருந்தது. மறுபடி ஒருமுறை தன் முகத்தைப் பார்த்துக் கொண்டான்.

செம்பட்டைத் தலை அப்படியே இருந்தது. இப் போது இன்னும் நல்ல வெளிச்சம் வந்து விட்டதால், முன்னைக் காட்டிலும் தெளிவாக, ஒவ்வொரு மயிர்க் காலையும் சிவப்புச் சாயத்தில் தோய்த்த மாதிரி தெரிந் தது. விரல்களால் கிராப்பை அளைந்து, வலப்புறம் வாரப் பட்டிருந்த கிராப்பை இடப்புறம் தள்ளி விட்டுக் கொண்டு

பார்த்தான். அந்தச் செம்பட்டை நிறம் அடிமுடி வரை நீக்கமறப் பரவியிருந்தது தெரிந்தது.

சவிதா கொடுத்திருந்த விலாசத்தை ஒரு முறை பார்த்துக் கொண்டு விட்டுப் புறப்பட்டான்.

தெற்குத் தெருவில் எதிரெதிராக வீடுகள் இருந்தன. பெரிய பெரிய மாளிகைகள்தான் என்றாலும் ஒன்றோ டொன்று ஒட்டிக் கொண்டு, உயரமான வாசற்படிகளுடன் இருந்ததால் தெருவிலிருந்து பார்க்கும் போது குறுகிய, கர்னாடகமான வேலைப்பாடுகளுடன் கூடிய இரும்புக் கேட்டுகள், நுழைகிற எவரையும் ஒரு முறைக்கு இரு முறை யோசிக்க வைக்கக் கூடியனவாக இருந்தன.

ஆனால் சவிதாவின் வீடு மட்டும் இரண்டு பக்கத்து வீடுகளுடனும் ஒட்டாமல், அகலமான கேட்டும், நீளமான தோட்டப் பாதையும் உள்ளடங்கிய கட்டிடமுமாக இருந்தது. சிவப்பும் வெளுப்புமான போகன் வில்லாக்கள் ஒன்றை ஒன்று கிச்சுகிச்சு மூட்டிச் சிரித்துக் கொண்டிருக்கிற மாதிரி காற்றில் கலகலப்பாக அசைந்து கொண்டிருந்தன.

தோட்டத்தைக் கொத்திக் கொண்டிருந்த ஆளிடம், ''சவிதாம்மா இருக்கிறாங்களா?'' என்று கேட்டதும் முதலில் அவன் ஆச்சரியத்துடன் பார்த்தது வல்லபனின் தலையைத் தான். பிறகு, ''இருக்காங்க. போங்க'' என்றான்.

எப்படிப்பட்ட வரவேற்பு காத்திருக்கிறதோ என்று குழப்பமான எண்ணங்களுடன் உள்ளே கட்டிடத்தை நோக்கி நடந்தான். அந்தச் சிந்தனையில், தன் தலையில் ஏற்பட்டிருக்கும் மாற்றத்தைக்கூட அவன் மறந்து விட்டான்.

*போர்ட்டிகோ படிக்கட்டில் அவன் ஏறிய அதே சமயம், இடப் புறமிருந்த அறையின் கதவு திறந்து கொண்டது.*

*''சவிதா!'' என்று கூவினான் - மகிழ்ச்சியும் ஆர்வ மும் நிறைந்த குரலில்.*

*அவள் உடனே ''வல்லப்!'' என்று திருப்பிக் கூவ வில்லை. மருண்ட கண்களுடன் அவனைப் பார்த்து, ''நீங்கள் ...நீங்கள்...'' என்று தடுமாறினாள்.*

*''நான்தான் சவிதா; வல்லபன்தான் வந்திருக்கிறேன் ... இது...'' என்றவன் தன் தலையைத் தொட்டுக் காட்டி, ''இதன் கதை தனி, அப்புறம் சொல்லுகிறேன். இப் போது நாம் என்ன செய்ய வேண்டும். அதைச் சொல்லு முதலில்...'' என்றான்.*

*''என்ன செய்ய வேண்டும் என்றா கேட்கிறாய்? நான் சொல்கிறேன். முதலில் வெளியே போ!'' என்ற குரல் அவனுக்குப் பதில் கொடுத்தது.*

*பங்களாவின் நடுப் பகுதியான ஹாலிலிருந்து வெளியே வந்து நின்றிருந்தவர் - சவிதாவின் தந்தைதான் என்று புரிந்து கொண்டான் வல்லபன்.*

*''அப்பா, இவர்தான் நான் சொன்ன...''*

*''பொறுக்கி! புரிகிறது!'' வெடித்தார் ராமலிங்கம் - சவிதாவின் அப்பா. ஆறடி உயரமும் அதற்கேற்ற பரும னும் முண்டா பனியனும் அடர்ந்த மீசையுமாக இருந்த அவரை, பிஸினஸ் மேன் என்று சொல்வதைக் காட்டி லும் ரௌடி வாத்தியார் என்று அழைப்பதே பொருத்த மாயிருக்கும் போல் தோன்றியது.*

''மரியாதையுடன் பேசுங்கள், அப்பா'' என்று சவிதா சொல்ல ''தெருப் பொறுக்கிப் பசங்களுக்கு மரியாதை என்ன வேண்டியிருக்கிறது மரியாதை? போடா வெளியே என்கி றேன், வெட்கங்கெட்டு நிற்கிறாயே?'' என்று அவர் கத்த, வல்லபனைக் கழுத்தில் கை வைத்து வெளியே தள்ளத் தயாராக நாலு வாசல்களில் நாலு வேலையாட்கள் முன் வந்து நின்றார்கள்.

சவிதா தைரியசாலியான பெண் என்று வல்லப னுக்குத் தெரியும். ஆனால், இவ்வளவு தைரியமாக இருப் பாள் என்று நினைக்கவில்லை. அடுத்த கால் மணி நடந்த கடுமையான வாக்குவாதத்தின் முடிவில், ''நான் மேஜ ரான பெண். அப்பா, என்னை நீங்கள் எந்த வகையிலும் கட்டுப்படுத்த முடியாது'' என்று கூறியவள், ஒரு சூட் கேஸில் இரண்டு துணிமணியை அடைத்துக் கொண்டு, ''வாருங்கள் போகலாம்'' என்று வல்லபனின் கையை இழுத்துக் கொண்டு கிளம்பி விட்டாள். அவள் அப்பா ராமலிங்கம் அவளுக்கு மேல் பிடிவாதக்காரர் போலிருக் கிறது. 'போகாதே, நில்' என்று ஒரு வார்த்தைகூடச் சொல்ல வில்லை. உள்ளேயிருந்து யாரோ இரண்டொரு பெண்கள் அவளைத் தடுப்பதற்காக வேகமாக வந்த மாதிரி தெரிந் தது. அவர்களையும் அவர் கோபமாகத் தடுப்பதைக் கண் டான்.

சவிதா கொடுத்த தைரியத்தின் பேரில், அவள் சொந்த மாகச் சேர்த்து வைத்திருந்த பணத்தைக் கொண்டு அவர்கள் சென்னையை அடைந்து, வடபழனி கோவிலில் தாலி கட்டித் தம்பதியாகி, அபிராமபுரத்தில் ஒரு சிறு ஜாகை யும் அமைத்துக் கொண்டார்கள். குடும்ப நண்பர் ஒருவர்

மூலம் வல்லபனுக்குக் கிண்டி தொழிற் பேட்டையிலிருந்த ஓர் இஞ்சினியரிங் கம்பெனியில் ஐந்தாறு ரூபாய் சம்பளத்தில் ஒரு வேலையும் தேடித் தந்து விட்டாள். இவ்வளவும், காரைக்குடி வீட்டை விட்டு வெளியேறிய பத்து நாட்களுக்குள் நடந்து விட்டது. உலகம் இனி ஆனந்த மயமானது என்று மகிழ்ந்து போனான் வல்லபன்.

கண்ணாடியில் தலை வாரிக் கொள்ளும் போதெல்லாம் அந்த லாட்ஜ் சம்பவம் நினைவு வந்து மனத்தில் பீதி ஏற்படுத்தும். இரண்டு தடவை ஹேர் டிரெஸ்ஸரிடம் சென்று 'டை' போட்டுப் பார்த்தான். சாயம் ஒட்ட மறுத்து விட்டது. சலூன்காரரே திகைப்படைந்து, ''உங்கள் முடி ரொம்பப் பெகூலியர் சார்'' என்று சொல்லி விட்டார்.

சென்னையில் குடித்தனம் நடத்த ஆரம்பித்து ஒரு மாதம் ஆகியிருக்கும்.

அன்று கடற்கரையில், சீரணி அரங்குக்குப் பின்னால் உட்கார்ந்து பட்டாணி சுண்டல் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது வல்லபன் தன் ஃபேவரிட் விஷயத்துக்குத் திரும்பினான். ''அந்த லாட்ஜ் சம்பவத்தை நினைத்துத் திரும்பத் திரும்ப எனக்குப் பயமேற்படுகிறது, சவிதா. எப்போது அங்கே ஏதோ ஒரு தீய சக்தி இருக்கிறதாகத் தெரிந்ததோ, அப்போது நான் பயபக்தியுடன் திரும்பியிருக்க வேண்டும். எந்தப் போதாத வேளையோ, காலால் எட்டி உதைத்து விட்டேன். இன்னும் பயங்கரமாக என்னைத் தண்டித்திருக்க வேண்டிய அது, போனால் போகிறதென்று முடியோடு விட்டு விட்டது.''

''உளறாதீர்கள்'' என்று அவள் சிரித்தாள். ''அனாடமி படித்து விட்டு இப்படியெல்லாம் பிதற்றக் கூடாது. ரத்தத்

தில் மாறுதல் ஏற்படுவதும், திசுக்களில் மாறுதல் ஏற்படு வதும், சருமத்தில் மாறுதல் ஏற்படுவதும் சகஜமில்லை என்றாலும் நடக்கக் கூடாததில்லை. அந்த மாதிரிதான் உங்களுக்கும் நடந்திருக்கிறது. தினசரி நூறு பேர் வரக் கூடிய ஒரு பிரபலமான லாட்ஜில் பேய் பிசாசு நட மாட்டம் இருக்க முடியுமா? உங்கள் கண்களில் மட்டும் தான் பட்டதென்றால் அது என்ன ஸ்பெஷல் பிசாசு?''

''உலகத்தில் எல்லாக் கேள்விகளுக்கும் பதில் கிடைத்து விடாது, சவிதா'' என்றான் வல்லபன். ''கை ராசிக்கார டாக்டர் என்கிறோம். கை மணமுள்ள சமையல்காரர் என்கிறோம். அதெல்லாம் கண்ணால் பார்க்கக் கூடிய குணங்களா? சிற்சில சக்திகள் சிற்சில பேரைத் தேர்ந் தெடுத்துப் பிடித்துக் கொள்கின்றன. அதில் நல்ல விதமா யும் இருக்கலாம். கெட்ட விதமாயும் இருக்கலாம்...''

''நான்ஸென்ஸ்!'' சிரித்துக் கொண்டே எழுந்து கொண்டாள் சவிதா. ''வாருங்கள், வீட்டுக்குப் போய் உங்கள் தியரியைப் பற்றி ஆராய்ச்சி செய்யலாம்.''

அதிகம் பேசாமலே அவளுடன் நடந்தான் வல்லபன்.

ஆனால், வீட்டை அடைந்த போது அவள் சொன்னது போல வேடிக்கையாக ஆராய்ச்சி செய்யச் சந்தர்ப்பம் ஏற்படவில்லை. அதற்கு மாறாக -

படுக்கையறைக் கதவைத் திறந்து விளக்கைப் போட்டவள்...

''வல்லப்!'' என்ற கூவலுடன் அவனுடைய வலது கையை இறுகப் பற்றினாள். அவள் உடம்பு திடீரென நடுங்கியது.

''என்ன சவிதா? என்ன?'' என்றான் அவன்.

''படுக்கையில்...'' அவள் கண்ணைக் கசக்கி விட்டுக் கொண்டாள். ''யாரோ உட்கார்ந்திருந்த மாதிரி... விளக்கைப் போட்ட வினாடியில் மின்னல் மாதிரி மறைந்து போயிட்டுது...''

படுக்கையின் அருகே சென்று அவன் பார்த்தான். மெல்லக் கையால் துழாவினான். யாரும் - எவரும் - இருப்பதாகத் தெரியவில்லை. ஒரு படுக்கையறையும் அதையொட்டிய சமையலறையும்தான் அவர்கள் போர்ஷன். அங்கேயும் போய்ப் பார்த்தான். திரும்பி வந்தான். யாரையும் காணவில்லை.

இப்போது சவிதா அதிர்ந்து போயிருந்தாள். ''ஏதாவது பிரமையாக இருக்கும் சவி'' என்று அவன் சொன்னதை ஏற்கவில்லை.

''இல்லை... கண் கொட்டுகிற நேரம் கூட இருக்காது - மறைந்து போச்சு. ஆனால், குனிந்து உட்கார்ந்து... முழங்காலைக் கட்டிக் கொண்டு...முகம்தான் சரியாய்த் தெரியவில்லை...'' என்று அவள் சொன்னபோது, காரைக்குடி லாட்ஜில் பார்த்த அதே உருவம்தான் இதுவும் என்று அவனுக்குப் புலப்பட்டது.

நடுக் காட்டில் சிக்கிக் கொண்ட இரண்டு குழந்தைகளைப்போல அவர்கள் ஒருவரை ஒருவர் கட்டிக் கொண்டு தூங்கினார்கள் - தூங்க முயன்றார்கள்.

காலையில் எழுந்த போது அவளுக்கு அடி வயிற்றில் ஒரு வலி ஏற்பட்டது. நெருப்புக் குச்சியைக் கிழித்து வைத்த மாதிரி ஒரு சுரீல் உணர்வு. கொஞ்ச நேரம் அலட்

சியம் செய்தாள். பிறகு அஜீரணமாக இருக்கலாம் என்று சொல்லி வல்லபனை ஒரு சோடா வாங்கி வரச் சொன்னாள். குடித்தாள். சாயந்தரம் வலி அதிகரித்தது. தெருக் கோடியிலிருந்த ஒரு சாதா டாக்டரிடம் மாத்திரை மிக்ஸர் வாங்கிச் சாப்பிட்டாள். ஒரு வாரத்துக்குள் வலி தாங்க முடியாததாக ஆகிவிட்டது. ஸ்பெஷலிஸ்டிடம் போனாள். கையில் கழுத்தில் இருந்த நகைகளை விற்று வைத்தியம் செய்து கொண்டாள். ''எக்ஸ்ரேக்கும் ரத்தப் பரிசோதனைக்கும் புலப்படாத இடத்தில் கோளாறு இருக்கிறது. அது என்னவென்று தெரிந்தால்தான் ஆபரேஷன் செய்ய முடியும்'' என்றார் ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்.

டாக்ஸியில் திரும்பும்போது வல்லபனுக்குத் துக்கத்தில் தொண்டை அடைத்தது. ''சவிதா, இந்தத் துரதிர்ஷ்டக்காரனை நீ காதலிப்பானேன்? கல்யாணம் செய்து கொள்வானேன்? கோடீசுவரனின் வீட்டில் சந்தோஷமாய் வாழ வேண்டியவள்...''

''பேசாமல் இருங்கள்'' என்று மட்டுமே சொன்னாள் சவிதா. வேறெதுவும் சொல்லாமல் மௌனத்தில் ஆழ்ந்திருந்தாள்.

கதவைத் திறந்து விளக்கைப் போட்டபோது -

அன்று போலவே இன்றும் அவன் கையைச் சரேலென்று இறுக்கிப் பிடித்துக் கொண்டாள். ஆனால், அன்றைக்குப் போல் கத்தவில்லை.

''என்ன சவி?'' என்றான்.

''மறுபடியும் அதே உருவம். அதே போல் மறைந்து விட்டது'' என்றாள் சவிதா. ஆனால், அவள் குரலில் நடுக்கம் காணப்படவில்லை. மிக அமைதியாக, ''வல்லப்,

நான் சொல்வதைப் பொறுமையாகக் கேளுங்கள். அன்றைக்கு நீங்கள் அதை அவமதித்துக் கோபம் ஏற்படுத்தியதாகச் சொன்னீர்கள். சிரித்துப் பரிகாசம் பண்ணினேன் நான். எனக்கும் ஒரு தண்டனை கிடைத்திருக்கிறது. நீங்கள் சொன்னதில் உண்மை இருக்கிறது.''

''இப்போது என்ன செய்யலாம் என்கிறாய்?''

''எனக்கு நம்பிக்கையில்லை என்று சொன்னேனே தவிர, அதைப் பற்றிய விஷயங்கள் படித்திருக்கிறேன்'' என்றாள் அவள். ''இப்போது நான் செய்கிறபடி செய்து, நான் சொல்லுகிறபடி சொல்லுங்கள்.''

படுக்கையினருகே மண்டியிட்டு உட்கார்ந்தாள். ''நீ யார், எதற்காக எங்களைச் சுற்றுகிறாய் என்று தெரியவில்லை. இருந்தாலும் சொல்லாலோ, செயலாலோ நாங்கள் உன்னை என்ன அவமதித்திருந்தாலும் மன்னித்து விடு. என்னுடைய கடுமையான வயிற்று வலி உன் அருளினால்தான் தீர வேண்டும். அதற்கு நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதைச் சொல்லு.''

வல்லபனும் அவளைப் போலவே மண்டியிட்டு, அவள் சொன்னதை வாக்கியத்துக்கு வாக்கியம் திருப்பிச் சொன்னான்.

பிறகு சவிதா எழுந்து சென்று ஒரு வெற்றுப் பேப்பர் எடுத்து வந்தாள். பேனாவும் கொண்டு வந்து, பேப்பரின் மீது வைத்துப் பிடித்துக் கொண்டாள். விளக்குகளை அணைத்தாள்.

''சொல்லு'' என்றாள் - அந்த முகம் தெரியாத, இனம் தெரியாத, உருவம் தெரியாத, குரல் தெரியாத உருவத்தினிடம்.

இருட்டு அவர்களை மொய்க்க, பேப்பரின் மீது பேனா நின்று கொண்டேயிருந்தது.

''தயவு செய்து சொல்லு'' என்று மன்றாடும் குரலில் மறுபடி கூறினாள் சவிதா.

அவள் கை அவளையும் அறியாமல் நகரத் தொடங்கியது.



**வ**ல்லபன் மூச்சைப் பிடித்துக் கொண்டு சவிதாவையே பார்த்துக் கொண்டிருந்தான். அவளே கையை நகர்த்தி எழுதுகிறாளா? அல்லது அவளுடைய முயற்சியின்றி வேறு ஏதோவோர் அமானுஷ்ய சக்தி அவள் கையைப் பிடித்து நகர்த்துகிறதா? அவனுக்குத் தெரியவில்லை. காரைக்குடி லாட்ஜில் தலையின் நிறம் மாறியது முதல், இந்த உலகத்தில் எதை நம்புவது எதை நம்பாமலிருப்பது என்பது அவனுக்குப் புரியாமல் போய் விட்டது. இப்போது அந்த இனம் தெரியாத உருவத்திடம் சவிதா வேண்டிக் கொண்டு விட்டுக் காகிதமும் பேனாவுமாக எழுத உட்கார்ந்த போது அவன் மனம் திக்திக்கென்று அடித்துக் கொண்டது.

சவிதாவின் கை என்ன எழுதுகிறதென்று கவனித்தான். அறையில் எரிந்து கொண்டிருந்த விளக்கை ஏற்கனவே அவள் அணைத்திருந்தாள். எதிர் வீட்டின் மாடியில் பிரகாசமாக விளக்குப் போட்டிருந்ததால், அதன் வெளிச்சம் இங்கே பிரதிபலிக்க, அதில் ஊன்றிப் பார்த்தான் வல்லபன்.

முதலில் வெகு குண்டாக ஓர் எழுத்து வரையப்பட்டது. குழந்தை எழுதின மாதிரி கோணலாகவும், முனைகள் மழுங்கியும் இருந்ததால் அது என்ன எழுத்து என்பதைக் கஷ்டப்பட்டுத்தான் கண்டுபிடித்தான்.

'ம' என்று தெரிந்தது.

அதன் பின் பல நிமிடங்களுக்குச் சவிதா அசை யாமலேயிருந்தாள். அவள் கண்கள் மூடியிருந்தன. கைகள் துளியும் நகராமல் சலனமற்று இருந்தன. "சவிதா... சவி..." என்று கிசுகிசுத்த குரலில் அழைத்தான் வல்லபன். அவ ளிடமிருந்து பதில் வரவில்லை. உரக்கக் கூப்பிட்டோ, தொட்டு உசுப்பியோ, அவளை எழுப்ப அவனுக்குத் தயக்கமாயிருந்தது. இது ஒரு தினுசான டிரான்ஸ் என்று உணர்ந்திருந்ததால் அவளைப் பலவந்தமாக எழுப்ப அவன் அஞ்சினான்.

சட்டென்று மறுபடியும் அவள் கைகள் நகர்ந்தன. 'ன்' என்ற எழுத்து, முன் போலவே கோணல் மாணலாக உருவெடுத்தது.

'மன்'? என்ன அர்த்தமாக இருக்கும் அதற்கு? வல்லபன் யோசித்துக் கண்டுபிடிப்பதற்குள் 'னி' என்ற எழுத்துப் பேப்பரில் வெளிப்பட்டது. அதற்கு மேல் அவன் அதிகம் சிரமப்படத் தேவையிருக்கவில்லை. 'மன்னித்தேன்' என்ற வார்த்தை குண்டு குண்டாக, கோணல் மாணலாக, பெரிய காகிதத்தை அடைத்துக் கொண்டு ஆறு எழுத்துக் களில் வெளிப்பட்டதைக் கண்டதும் வல்லபனுக்கு நிம்மதி யினால் உடம்பெல்லாம் வெள்ளமாக வியர்வை கொட்டி யது. தன் கோரிக்கை நிறைவேறி விட்டது என்று எண்ணி யவனாகக் கடவுளுக்கு நன்றி தெரிவித்துக் கை கூப்பினான்.

கொஞ்சம் கொஞ்சமாகத் தன் மயக்க நிலையிலிருந்து விடுபட்டாள் சவிதா. கண்களைக் கசக்கி விட்டுக் கொண்ட வள், விளக்கைப் போட்டாள். காகிதத்தின் மீது தன் கை என்ன எழுதியிருக்கிறது என்பதை அப்போதுதான் பார்த் தாள்.

*'ம-ன்-னி-த்-தே-ன்.'*

*''வல்லப்!'' மகிழ்ச்சிப் பரவசத்துடன் கணவனைக் கட்டிக் கொண்டாள். ''என் யோசனை பலித்து விட்டது. இனி நம் வாழ்க்கையில் -''*

*உதடுகளை அவனை நோக்கி உயர்த்தியவள் இன்னுமொரு சந்தோஷக் கூச்சலிட்டாள். ''வல்லப்! உங்கள் முடி - அதன் நிறம் -''*

*ஓடிச் சென்று ஒரு கண்ணாடியை எடுத்து வந்து அவன் முகத்தினெதிரே காட்டினாள்.*

*வியப்பினால் ஒரு வினாடி அவனுக்கு மூச்சே நின்று விடும் போலாகி விட்டது. மகிழ்ச்சி அவனைச் சிலையாக்கியது. ஆம். அவன் தலை முடி செம்பட்டை நிறம் நீங்கி, முன்னைப் போலவே கன்னங் கரேலென்று மாறியிருந்தது. நம்ப முடியாதவனாகக் கையால் அளைந்து கொண்டு வாசற்புறம் வந்து இன்னும் பிரகாசமான விளக்கின் வெளிச்சத்தில் பார்த்துக் கொண்டான். சந்தேகமில்லாமல் பழையபடி ஆகிவிட்டது.*

*சவிதா, ஆனந்தத்தினாலும், மன நிம்மதியினாலும் கண்களில் நீர் பனிக்க, அந்தக் காகிதத்தைத் திரும்பத் திரும்பப் பார்த்தாள். ''வல்லப்! இனி நமக்கு எவ்விதக் குறையும் கிடையாது. உங்கள் தலை முடியும் பழையபடி ஆகி விட்டது. என் வயிற்று வலியும் -''*

*வாக்கியத்தை அவள் முடிக்கவில்லை. தடாலென்று அடிவயிற்றைப் பிடித்துக் கொண்டு படுக்கையில் விழுந்தாள். ''அம்மா! ஐயோ -''*

*''என்ன சவிதா, என்ன? சொல்லு சவி!'' என்று பதறினான் அவன்.*

''வல்லப்! உங்களைப் பொறுத்த வரையில்... அம்மா ...! சரியாகி விட்டது. ஆனால் எனக்குக் குணமாகவில்லை. என் வயிற்று வலி என்னை விட்டுப் போகவில்லை. அம்மா! அம்மா! ஐயோ!'' என்று துடித்துத் தவித்துக் கவிழ்ந்து புரண்டு அழுதாள்.

''சவிதா! அமைதியாயிரு சவி...'' என்று அவளைத் தோளோடு அணைத்துச் சேர்த்துக் கொண்டு தேறுதல் சொன்ன போதிலும் வல்லபனின் உள்ளம் அந்தப் புரியாத புதிரினால் குழம்பியது. ''சவி... என் தலைமுடிக்கென்ன - அது எந்த நிறமாயிருந்தாலும் ஆபத்து கிடையாது. ஆனால் நீ... நீ...''

வழக்கம் போல் சில நிமிடங்களில் அவள் வலி நின்றது. ஆனால் அந்த நோய் தன்னை விட்டுப் போக வில்லை என்பது நிச்சயமென்று புரிந்து கொண்டாள். திடுதிப்பென்று எப்போது வேண்டுமானாலும் வந்து தன்னை வாட்டப் போகிறது என்பதையும் உணர்ந்து கொண் டாள்.

அவளும் அவனுமாக அடுத்த சில நாட்களுக்குத் திரும்பத் திரும்ப பிளாஞ்செட் முறையை முயன்று பார்த்தார்கள். பேனாவையும் பேப்பரையும் வைத்துக் கொண்டு மணிக்கணக்காக உட்கார்ந்திருந்ததுதான் மிச்சம். கை இம்மியும் நகரக் காணோம். எந்தச் செய்தி வரவும் காணோம்.

நாளுக்கு நாள் சவிதா மெலிந்து கொண்டே போனாள்.

ஒரு நாள் -

அலுவலகத்திலிருந்து அவன் மாலையில் திரும்பி வந்த போது, வீட்டு வாசலில் ஒரு படகுக் கார் நின்றிருப்

பதைக் கண்டான். வேறு யார் வீட்டுக்கோ யாரோ வந்திருக்கிறார்கள் என்றுதான் எண்ணிக் கொண்டானே யொழிய, காரைக்குடியிலிருந்து தன் மாமனார் வந்திருப்பார் என்று எதிர்பார்க்கவேயில்லை.

சவிதாவுடன் பேசிங் கொண்டிருந்தவர், அவன் உள்ளே வருவதைக் கண்டதும், ''வாருங்கள் மாப்பிள்ளை. சௌக்கியமா?'' என்று அன்புடன் விசாரித்தார். அவர் குரல், தோற்றம், தோரணை எல்லாமே மாறியிருந்தன. ஆனால் கட்டிலில் சாய்ந்தாற் போல் படுத்துப் பேசிக் கொண்டிருந்த சவிதாவின் முகத்தில் கடுகடுப்பு பரவியிருந்தது.

''என்னை அழைத்துப் போவதற்காக வந்திருக்கிறாராம்!'' என்றாள் இகழ்ச்சியும் கசப்பும் கலந்த சிரிப்புடன். ''வீட்டை விட்டுத் துரத்தின மகளைப் பற்றி இப்போதுதான் ஞாபகம் வந்ததாம்!''

வல்லபனுக்கு என்ன பேசுவதென்று தெரியவில்லை. அதற்குள் அவரே, ''மாப்பிள்ளை, இவள் இவ்வளவு உடம்பு சரியில்லாமல் இருக்கிறாளென்று எனக்குத் தெரியாது. காரைக்குடியில் ஒரு கல்யாணத்துக்காக வந்திருந்த டாக்டர் சிவசங்கர் சொன்னார். மனசு கேட்கவில்லை. பதறிக் கொண்டு ஓடி வந்தேன். மாப்பிள்ளை, நான் பண்ணிய தப்பையெல்லாம் மன்னித்து மறந்து விடுங்கள். எனக்குச் சவிதாதான் எல்லாம். அவளை அமெரிக்காவுக்கோ ஸ்விட்சர்லாந்துக்கோ அழைத்துப் போய் முதல் தர ட்ரீட்மெண்ட் கொடுக்கும்படி பண்ணுகிறேன். குணமாக்கி இங்கேயே-உங்களிடமே - திரும்பக் கொண்டு வந்து விடுகிறேன். தயவு பண்ணி அனுப்புங்கள்'' என்றவர் குரல் தழுதழுக்க அவன் கைகளைப் பிடித்துக் கொண்டார்.

அவர் சொல்வது நியாயம் தானே என்று வல்லப னுக்குப் பட்டது.

''சவிதா...'' என்று ஆரம்பித்தவன் அவள் முகத்தைக் கண்டதும் அச்சத்துடன் நிறுத்திக் கொண்டான். அதில் அத்தனை சினம் பரவியிருந்தது!

''வல்லப், தயவு செய்து இதில் நீங்கள் தலையிடா தீர்கள். உங்கள் காலடியிலேயே உயிரை விடுவேனே தவிர, இவர் போடுகிற பிச்சைக் காசில் உயிர் பிழைக்கத் தயாராயில்லை!'' என்றாள் அவள் தீர்மானமாக.

''சவிதா! குழந்தை மாதிரி பேசாதே. நீ உடல் நலம் பெற்றுத் திரும்ப வந்தால் எனக்கும் தானே சந்தோஷம்? அதை நினைத்துப் பார். உனக்கு ஒன்று கிடக்க ஒன்று ஆகி விட்டால் நான் வேதனைப்பட மாட்டேனா? அது பரவாயில்லையா?''

சவிதா பிடிவாதமாக இருந்தாள். ''நீங்கள் தப்புக் கணக்குப் போடுகிறீர்கள். முதலாவது, என் நோயை அமெரிக்காவிலோ ஸ்விட்சர்லாந்திலோ குணப்படுத்த முடியும் என்றால் அப்போதே டாக்டர்கள் நம்மிடம் சொல்லியிருப்பார்கள். ஆகவே இது வெறும் காம்ப்ளிங் தான். என்ன பலன் கிடைக்குமென்று நிச்சயமாய்த் தெரியாத நிலையில், இவர் காலின் கீழ் நிற்பதைக் காட்டிலும் கடைசி மூச்சு வரை தன்மானத்தோடு இருந்து விட்டுப் போய் விடுகிறேன். ப்ளீஸ் வல்லப், என்னை கம்ப்பெல் பண்ணாதீர்கள்...''

மேலும் சிறிது நேரம் உட்கார்ந்திருந்து பார்த்து விட்டுப் பலனில்லாமல் போய் விட்டார் ராமலிங்கம் - சவிதாவின் அப்பா.

அடுத்த இரண்டு மணி நேரம் அந்த வீட்டில் ஓர் அசாதாரணமான அமைதி நிலவியது. அவளுடைய பிடி வாதம் அவனுக்குச் சிறிது கோபத்தை ஏற்படுத்திய போதி லும், அவளுடைய ரோஷமும் தன்மான உணர்ச்சியும் அவனை நெகிழ வைத்தன. இப்படிப்பட்டவளை விரை வில் நிரந்தரமாகப் பிரிந்துவிடப் போகிறோமே என்று நினைக்கையில் துக்கம் பாறாங்கல்லாக இதயத்தை அழுத்தியது. அவன் வற்புறுத்திய ஒன்றைத் தட்டினோம் என்ற குற்ற உணர்வு அவளுக்கும் இருந்தது.

அவன் தினப்படி செய்வது போல அவளுக்கும் தனக்கும் உணவு தயாரித்தான். அவளுக்குக் கொடுத்துத் தானும் சாப்பிட்டான். மருந்துகளை அளவுப்படி கொடுத் தான். படுக்கை தலையணைகளைத் தட்டிப் போட்டு, அவளை வசதியாகப் படுத்துக் கொள்ளும்படி கூறினான். படுக்கப் போனவள் சரேலென அவன் கழுத்தைத் தன் மெலிந்த கையால் வளைத்துக் கட்டிக் கொண்டாள். ''வல்லப், என்னை மன்னித்து விடு'' என்றாள். சூடான இரண்டு கண்ணீர்த் துளி அவன் தோளில் விழுந்தது.

''தட்ஸ் ஆல்ரைட்'' என்று தோளை அன்புடன் தட்டிக் கொடுத்தான் அவன். பிறகு மெல்லப் படுக்கையில் கிடத் தினான்.

விளக்கை அணைக்கப் போகு முன், கட்டிலுக்கருகி லிருந்த முக்காலியின் மீது சவிதாவின் பார்வை தற்செய லாகச் சென்றது. ''வல்லப் - ஏது இது?''

அவனும் பார்த்தான். அழகான டேப் ரெகார்டர்.

''நான் கொண்டு வரவில்லையே?'' என்று திகைத்தான்.

''புரிகிறது. என்னுடைய டேப் ரெகார்டர். என் அப்பா கொண்டு வந்திருக்கிறார். எல்லாம் சமாதானமாகி விடும், என்னிடம் இதைக் கொடுக்கலாம் என்று எண்ணி எடுத்து வந்திருக்கிறார்.'' அவள் விரக்தியுடன் சிரித்தாள். ''சங்கீதம் என்றால் எனக்கு உயிர்... வீணை, நாதசுரம், வயலின், குழல், சிதார் - இப்படி எந்த வாத்தியக் கச்சேரி எங்கே கேட்டாலும் டேப் பண்ணி வைத்து விடுவேன். அனேக மாக இருநூறு கேஸட் சேர்த்து வைத்திருந்தேன் வீட்டில்...''

அவள் பெருமூச்சு விட்ட போது அவன் அதைத் திறந்து பார்த்து விட்டு, ''உள்ளே காஸெட் இருக்கிறது, சவி. போடட்டுமா?'' என்று பிளக்கில் ஒயரைச் செருகி, பட்டனை அழுத்தப் போனான்.

''வேண்டாம், வல்லப்'' என்று அவன் கையைத் தடுத்தாள் சவிதா.

''என் பெரியண்ணா அடிக்கடி சொல்வார், சவி. அழகானதை வெறுக்கக் கூடாது என்பார். நிலா, வீணை, ஓவியம், கடல் அலை, குயிலின் கூவல் - இதெல்லாம் அழகின் வெளிப்பாடுகள்...''

அவள் சோகப் புன்னகையுடன் தடுத்திருந்த கையை விலக்கிக் கொண்டாள். ஆனால் வல்லபன் பட்டனை அழுத்தப் போன அதே கணம் விளக்குகள் அணைந்தன. அது நடுக் கோடைப் பருவம். அப்படியும் படபடவென்று தூறல் போட்டது. விஷ்விஷ் என்று காற்று வேகமாக அடித்தது. ஜன்னலுக்கு வெளியே தொலைவில் தென்னை மரங்கள் பேயாட்டம் ஆடுவது தெரிந்தது.

''சரி, தூங்கு'' என்று அவள் மீது போர்வையைப் போர்த்தி விட்டு, லேசாக அணைத்தபடி வல்லபன் படுத்

தான். அவள் தூங்கி விட்டாள். அவன் தூங்கவில்லை. மெதுவே எழுந்து உட்கார்ந்தான். அவனையும் அறி யாமல் உள்ளம் வாய் விட்டுப் புலம்பியது. ''காரைக்குடி யில் என்னைச் சந்தித்த நண்பனே, உனக்கு நூறு நூறு நமஸ்காரங்கள் செய்கிறேன். உயிரினும் இனிய என் சவிதாவைக் காப்பாற்று. பெருந்தன்மையுடன் என்னை மன்னித்து, என் தலைமுடியுடன் விளையாடிய விளை யாட்டை நிறுத்திக் கொண்டாய். அது போதாது. உன்னால் எதுவும் முடியும். உன்னை நம்புகிறேன். என் சவிதா உயிர் பிழைக்க ஏதாவதொரு வழி காட்டு...''

உதட்டில் அந்த வார்த்தைகள் மலர்ந்திருந்த நேரத் தில், அப்படியே அவனும் தூக்கத்தில் ஆழ்ந்து விட்டான்.

வெளியே காற்றும் மழையும் பேய்க் கூச்சலாகச் சத்தம் போட்டுக் கொண்டிருந்தன. தடாலென்ற சத்தம் கேட்டுச் சவிதா கண் விழித்தாள். முதலில் ஒரே இருட் டாக இருந்தது. பிறகு பளீரென்று ஒரு மின்னல் அந்த அறைக்குள் புகுந்த மாதிரி இருந்தது. கண்ணிமைக்கும் நேரத்துக்குள் மறைந்து விட்டது. ஜன்னல் கதவு படீர் படீ ரென்று மோதிக் கொண்டு ஆடியது. அந்த ஓசையில் வல்லபனும் விழித்துக் கொண்டு கதவுகளைக் கொக்கி போட்டு மூடினான்.

''தூங்கு சவிதா'' என்று கலைந்திருந்த போர்வையை அவள் மீது போர்த்தினான்.

''வல்லப், ஒரு மின்னல் அறைக்குள் புகுந்த மாதிரி இருந்தது கொஞ்சம் முன்னாடி'' என்று அவள் சொல்லிக் கொண்டிருந்த போதே, விளக்கு பளீரென்று ஒரு முறை

எரிந்து விட்டு உடனே அணைந்தது. ''சரி தூங்கு'' என்று அவளை அணைத்துக் கொண்டான்.

''வல்லப், இருங்கள்.'' போர்வையை விலக்கிக் கொண்டு அவள் எழுந்து உட்கார்ந்து கொண்டாள். ''என்ன அது, ஓசை?''

''என்ன ஓசை?''

''விர்ர்ர்ரென்று ரீங்காரம் மாதிரி...''

"டேப் ரெகார்டர் மாதிரி இருக்கிறதே?" என்றான் அவன். ''விளக்கு எரியவில்லை. மின்சாரம் கிடையாது. ஆனால்...''

அவள் அவன் கையைச் சேர்த்து இறுக்கிப் பிடித்துக் கொண்டாள். அவள் மேனி இளந் தளிர் போல நடுங்கு வதை அவன் உணர்ந்தான்.

''கவனி.''

குரலொன்று திடுமென்று கேட்டது. அழுத்தமான, கணீரென்ற ஆண் பிள்ளைக் குரல். ஆனால் இன்ன இடத்திலிருந்து வருகிறதென்று நிர்ணயிக்க முடியாத வகையில், அறையின் எட்டுத் திசைகளிலிருந்தும் எதி ரொலியுடன் வருகிற மாதிரி இருந்தது.

''யார்? யாரது? யார் பேசுவது?'' என்று மூச்சுப் படபடக்க வல்லபன் கேட்டான்.

"கவனி!" என்று மட்டுமே அது மறுபடியும் சொல்லியது.

அவன் உதட்டின் மீது விரலை வைத்த சவிதா, குறுக் கிட வேண்டாமென்று சாடை காட்டினாள்.

''கவனி. இவளுடைய நோய் என்னால் ஏற்பட்ட தல்ல. ஆகவே என்னால் நீக்கக் கூடியதுமல்ல. ஆனால் நீ மிகவும் மன்றாடிக் கேட்டதால் ஒரு வழி சொல்கிறேன்.''

இருவரும் ஒருவரையொருவர் அணைத்துக் கொண்ட படி, மூச்சுக் கூட பலமாக விடாமல் அந்த வார்த்தை களைச் செவியில் வாங்கிக் கொண்டார்கள்.

''... மாரி என்று பெயர். டாக்டர். வல்லம்பாறை.''

டொக்கென்ற ஓசை கேட்டது. குரல் நின்று விட் டது. அதே வினாடி, யாரோ கட்டளையிட்ட மாதிரி பளிச் சென்று விளக்கு எரிந்தது.

இருவரும் பயத்துடன் அந்த டேப் ரெகார்டரைப் பார்த்தார்கள். சாதாரணக் கருவியாக, சாதுவாக, அது தன் பாட்டுக்கு இருந்தது. தயக்கத்துடன் பட்டனைத் தட்டி னான் வல்லபன். இனிமையான ஒரு நாதசுரம் இசைத் தது. டேப்பை முன்னே சுழல விட்டு, மறுபடி கேட்டான். வீணை ஒலித்தது. பின்னே ஓடவிட்டு மீண்டும் கேட் டான். புல்லாங்குழலின் கீதம் கேட்டது. ஆனால் அந்தக் குரல் இந்த டேப்பிலிருந்துதான் ஒலித்திருக்க வேண்டும் என்பதைப் பற்றி இரண்டு பேருக்கும் கொஞ்சமும் சந்தேக மும் ஏற்படவில்லை.

''வல்லம்பாறை... கேள்விப்பட்டதேயில்லையே? எங்கே இருக்கிறது?'' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான் வல்லபன்.

''எனக்குத் தெரியும். எங்கள் ஊருக்குப் பக்கத்தில்'' என்றாள் சவிதா. ''நாளை புறப்படலாம்.''

அவன் திடுக்கிட்டான். ''சவிதா, இதெல்லாம் நிஜமா, சொப்பனமா, நம்முடைய மனக் குழப்பத்தினால் ஏற்பட் டுள்ள பிரமையா என்று எதுவும் தெரியாத போது -''

''இல்லை, அது நமக்காகச் சொல்லப்பட்ட நிச்சய மான மெஸேஜ் தான்'' என்றாள் அவள் உறுதியாக.

அடுத்த நாள் -

நோயாளி மனைவியைக் கைத்தாங்கலாக அழைத்துக் கொண்டு காரைக்குடியில் இறங்கினான்.

வல்லம்பாறை என்ற கிராமத்துக்கு நேர் பஸ் இருக்கவில்லை. அருகிலிருந்த வேறோர் ஊரில் இறங்கி, வண்டி அமர்த்திக் கொண்டு அந்த ஊரை அடைந்தார்கள்.

அது ஒரு குக்கிராமம். யாரை விசாரித்தாலும் -

''மாரியா? டாக்டரா? அப்படி யாரும் இங்கே கிடை யாதே?'' என்றார்கள்.



**மா**ரி என்று எந்த டாக்டரும் அந்த ஊரில் இல்லையென்றதும் வல்லபனுக்கும் சவிதாவுக் கும் அடுத்து என்ன செய்வதென்று புரியவில்லை.

''நான் அப்பவே சொன்னேன். அருவமான ஏதோ வொன்றை நம்பிக் கொண்டு புறப்பட வேண்டாம் என்று. நீதான் பிடிவாதமாய் இருந்தாய்'' என்றான் வல்லபன். வெய்யிலையும் நடையையும் தாங்கிக் கொள்ள முடி யாத நிலையில் இருக்கும் காதல் மனைவியைப் பார்க்கப் பார்க்க அவன் மனத்தில் ரத்தம் கசிந்தது. கோடீசுவரரான அப்பாவுடன் போக மாட்டேனென்று மறுத்து, நம்முடன் வறுமையைப் பகிர்ந்து கொண்டு நோய்க்குத் தக்க வைத் தியம் செய்து கொள்ளாமல் தவிக்கிறாளே என்பதை உணர்ந்து அவனுக்குத் தன் மேலேயே வெறுப்பு வந்தது.

''சவி, பேசாமல் ஊருக்குத் திரும்பி விடலாம், வா. என் சக்திக்குத் தகுந்த ஆஸ்பத்திரியில் சேர்த்து உன்னைக் கவனித்துக் கொள்கிறேன்'' என்று மறுபடியும் சொல்லிப் பார்த்தான்.

ஆனால் சவிதா அவனுக்குப் பதில் சொல்லாமல் நின்றிருந்தாள். அவள் கவனம் வேறெங்கோ பதிந்திருந்த மாதிரி இருந்தது. ஒருவேளை உடம்பு திடீரென்று மோசமாகி விட்டதா? ''சவி...'' என்று அவள் கைகளைக் கவலையுடன் பற்றினான்.

''இருங்கள்'' என்று அவள் மெல்ல பிடியை உதறினாள். எதிரே வெறித்தபடி பார்த்தவாறிருந்தாள்.

அவர்கள் நின்றிருந்த இடம் ஒரு புளிய மரத்தடி. அங்கேதான் காரைக்குடி போகும் பஸ் நிற்கும் என்று சொன்னார்கள். சவிதா சம்மதித்தால் பஸ்ஸில் போய் விடலாம் என்று அவன் நினைத்திருந்தான். மரத்தடியின் இன்னொரு பக்கத்தில் ஒரு கிழவி அவித்த கிழங்குகளை விற்றுக் கொண்டிருந்தாள். கிழக்குப் பக்கம் ஒரு பழைய சிவன் கோவில் தெரிந்தது. தெருவின் இடது கோடியில் ஊருக்குப் பொதுவான கிணறு ஒன்று இருந்தது. வலது கோடியில், டீக்கடையாயுமில்லாமல் ஓட்டலாயுமில்லாமல் இரண்டும் கெட்டானான காபிக் கிளப் ஒன்று உடைந்து போன போர்டுடன் காட்சி தந்தது. அந்தக் கிளப்பைச் சேர்ந்த ஒருவன் இடுப்பில் ஒன்றும் தலையில் ஒன்றுமாகப் பளபளக்கும் பித்தளைக் குடங்களை வைத்துக் கொண்டு கிணற்றிலிருந்து நீர் எடுத்து அவர்களைத் தாண்டிச் சென்று கொண்டிருந்தான். குடங்களிலிருந்து தெறிக்கும் நீர்த் திவலைகள் உஷ்ணமான பகுதியில் பொட் பொட்டென்று தெறித்து, தெறித்த கணமே மறைந்து கொண்டிருந்தன.

சவிதா பேசாததால் வல்லபனின் கவலை மேலும் அதிகரித்தது. ''சவி, என்னம்மா?'' என்றான் அவள் தோளை அழுத்தி.

''உஷ்! அதோ அந்த ஆளைக் கவனியுங்கள்'' என்றாள் சவி.

கண்களால் அவள் சுட்டிக் காட்டிய திசையைப் பார்த்த போது அந்தக் காபி கிளப் ஆசாமி தன் குடங்களுடன் சென்று கொண்டிருந்தான்.

''என்ன அவனுக்கு?'' என்றான்.

''நானும் இங்கே வந்து நின்ற நிமிடத்திலிருந்து கவனித்துக் கொண்டிருக்கிறேன். அவன் என்னைத் தாண்டிப் போகிற போது, என் அடிவயிற்றில் ஒரு நிம்மதி ஏற்படுகிற மாதிரி இருக்கிறது. வயிற்றின் மீது வைத்திருந்த பாறாங்கல்லை யாரோ எடுத்து அகற்றி விட்டாற் போலத் தோன்றுகிறது. அவன் போன பிறகு மறுபடியும் வயிற்றில் பளு ஏறுகிறது. இதோ... இதோ... இப்போது...'' அவள் தன் வயிற்றின் கீழ்ப் பகுதியை இடது கையால் அழுத்திக் கொண்டே கிசுகிசுவென்ற குரலில் பேசினாள். ''இதோ அவன் என்னைத் தாண்டிப் போகும் போது லேசாயிருந்த வயிறு, அவன் எட்டத்தில் போனதும் கனமாகி விட்டது...''

அவனுக்கு வயது முப்பதுக்குள் இருக்கும். வேட்டியைத் தூக்கிக் கச்சமாகக் கட்டியிருந்தான். ஆரோக்கியமான உடல்வாகு.

அவர்கள் பார்த்துக் கொண்டேயிருக்கையில் அந்த ஆள் காபிக் கிளப்புக்குள் போய் விட்டான். வல்லபன் கவலையுடன் தன் மனைவியை நோக்கினான். ''சவிதா, இதெல்லாம் ஒரு வகையான பிரமை...''

சவிதா சோகமாகப் புன்னகை செய்தாள். ''வல்லப், நம் இரண்டு பேர் வாழ்க்கையிலும் வேறு எவருக்கும்

ஏற்படாத அனுபவங்கள் ஏற்பட்டாகி விட்டது. எதையும் பிரமை என்றும் கற்பனை என்றும் நடக்க முடியாதது என்றும் தள்ளி விடக் கூடிய நிலையில் நாம் இல்லை.''

ஒரு வினாடி தயங்கி நின்றான் வல்லபன். ''சரி, மறுபடி அவன் வரட்டும்'' என்றான்.

ஆனால் இம்முறை அவன் வரவில்லை. பத்து நிமிடம் பதினைந்து நிமிடம் போல் காத்திருந்தும் அவனைக் காணோம். ஆகவே இருவரும் காபிக் கிளப்பிற்குள் போனார்கள். உள்ளே ஒரே இருளாயிருந்தது. அழுக்கான மேஜையடியில் உட்கார்ந்திருந்த குண்டான முதலாளிக்கு, நாகரிகமான பட்டணத்துக்காரர்கள் இருவர் வந்ததில் மகிழ்ச்சி. மணியை அடித்து, ''சாருக்கு என்ன வேண்டும், கவனிப்பா!'' என்றான் உற்சாகமாக.

அவரைச் சந்தோஷப்படுத்துவதற்காகவே உள்ளே போனார்கள். வல்லபன் காபி சாப்பிட்டான். இருவர் கண்களும் இருட்டை ரகசியமாய் ஆராய்ந்தன. அவனைக் காணோம். பில்லைக் கொடுக்கும் போது, வல்லபன் கேட்டான். ''இங்கே ஒரு ஆள் - எங்க ஊர்க்காரர் மாதிரி இருந்தார் - கிணற்றுக்குப் போய்த் தண்ணி எடுத்து வந்து கொண்டிருந்தார்...''

''மாரியைச் சொல்றீங்களா?'' என்று அவர் சொன்னதுமே இருவருமே திடுக்கிட்டு ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

''ஆமாம் சார்... மாரிதான்'' என்றான் வல்லபன்.

''அவன் வீட்டுக்குப் போயிட்டானே? இப்பத்தான் போனான். பின்பக்க வழியாய்ப் போயிட்டான் போலிருக்கு.''

''அவன் வீடு எங்கே?'' அவசரமாய் விசாரித்தான் வல்லபன்.

''இங்கேதான் குடியானத் தெருவிலே கடைசி வீடு.''

இருவரும் வெளியே வந்தார்கள், ''சவி, போக வேண்டியதுதானா?'' என்றான் வல்லபன் தயக்கத்துடன்.

''இதற்கப்புறமும் உங்களுக்கு என்ன சந்தேகம்? அவன் பெயர் மாரி! கவனியுங்கள். உலகத்திலே கோடிக் கணக்கான பெயர்கள் இருக்கிறப்போ இவனுக்கு மாரி என்று ஏன் பெயர் இருக்க வேண்டும்?''

அவளுடைய பேச்சில் நியாயம் இருப்பது புலப் பட்டது அவனுக்கு. அவளுடன் நடந்தான்.

ஒரு கிராமத்துக் காபிக் கிளப்புக்குத் தண்ணீர் கொண்டு வந்து கொடுக்கிறவன், குடிசையில் தான் வசிப் பான் என்று அவர்கள் நினைத்தார்கள். மாறாக, சுமாரான ஓட்டு வீடாக இருந்தது. இருபத்தைந்து வயதில் ஒரு பெண் - மாரியின் மனைவி என்று தோன்றியது - அவர்களை நடையிலிருந்த ஒரு மரப் பெஞ்சில் உட்காரச் சொல்லி, உள்ளே போய் அவனை அழைத்து வந்தாள்.

இப்போதும் அவன் கச்சத்துடனேயே இருந்தான். மார்பில் ஒரு துண்டுகூட இருக்கவில்லை. சதுரமான முகம், சிறிய மீசை இருந்தது. கண்களில் அமானுஷ்யமான ஒரு பளபளப்பைக் கவனித்தார்கள்.

''யார் நீங்க? என்ன வேணும் உங்களுக்கு?'' என்று கணீரென்ற குரலில் அவன் கேள்வி கேட்பானென்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. நிச்சயமாய்த் தெரியாமல் ஏதோ ஓர் ஊகத்தின் பேரில் அவர்கள் வந்திருக்கும் போது என்னவென்று பதில் சொல்வது?

இருந்தாலும் சவிதா சமாளித்துக் கொண்டாள். ''நாங்கள் மதறாசிலிருந்து வந்திருக்கிறோம். எனக்குக் கடுமையான வயிற்று வலி. வல்லம்பாறையில் மாரியைப் பார்த்தால் வைத்தியம் செய்வார் என்று சொன்னார்கள்...''

''யார் சொன்னாங்க?''

சவிதா தயங்காமல், ''ஒரு சக்தி - நம் எல்லோருக்கும் பொதுவான ஒரு நண்பர் - டேப் ரெக்கார்டரில் சொன்னார்'' என்றாள்.

''உங்க பேர் சவிதாவா?'' என்றான் மாரி.

அவள் திகைத்தாள் ''ஆமாம்...''

''சவிதான்னு ஒரு பேரு ரெண்டு மூணு நாளாய் என் மனசில் தோணிக்கிட்டே இருக்குது. அதனாலே கேட்டேன்'' என்றான் மாரி. அன்னியர்களிடம் பேசுகிறோம் என்கிற தயக்கமில்லாமல் அறிமுகமானவர்களிடம் பேசுகிற சரளம் அவன் குரலில் தென்பட்டது. ஆனால் கிராமத்தான் போலச் சிறிது கொச்சையாகவே பேசினான்.

மேற்கொண்டு என்ன பேசுவது என்று தெரியாமல் அவர்கள் காத்திருந்தார்கள். அவனும் இரண்டு நிமிடம் மௌனமாயிருந்தான். ஒரு முடிவுக்கு வந்தான். ''காமாட்சி!'' என்று உள்புறம் நோக்கிக் கூப்பிட்டான்.

''என்ன?'' என்ற வண்ணம் அவன் மனைவி உள்ளேயிருந்து வெளியே வந்தாள்.

''இப்படி நில்லு'' என்று அவளை ஜன்னல் பக்கமாக நிற்க வைத்தான். ''நீங்கள் இப்படி வாங்கம்மா'' என்று சவிதாவை மட்டும் அழைத்தான். ''நீங்க அங்கேயே இருங்க'' என்றான் வல்லபனிடம்.

காமாட்சி என்ற அந்தப் பெண்ணின் முதுகுப்புறம் தான் வல்லபனுக்குத் தெரிந்தது. அவளுக்கு முன்புறமாகப் போய் நின்று கொண்டிருந்தாள் சவிதா. அருகே இருந்த மாரி, தன் மனைவியின் சேலையை மார்புப் பக்கத்தில் விலக்கினான். பிறகு ரவிக்கையையும் தூக்கினான்.

என்ன இதெல்லாம் என்று புரியாதவனாக, படபடக்கும் இதயத்துடன் மூச்சைப் பிடித்துக் கொண்டு வல்லபன் காத்திருந்தான்.

''உங்க கண்ணுக்கு ஏதாச்சும் தெரியுதாம்மா?'' என்று மாரி கேட்டான் சவிதாவை.

''ஆமாம். வலது மார்பில் ஒரு தழும்பு தெரிகிறது. ஆபரேஷன் செய்த வடுமாதிரி'' என்றாள் சவிதா.

மாரியின் முகத்தில் திருப்திக் குறி தெரிந்தது. மனைவியின் ரவிக்கையையும் சேலையையும் முன்போல் போர்த்தி, ''நீ போ'' என்று அவளைத் திருப்பி அனுப்பினான். வல்லபனை நோக்கிப் புன்னகை செய்தான். ஆனால் அந்தப் புன்னகை வல்லபனை அமைதிப்படுத்துவதாக இல்லாமல் குடைவதாக இருந்தது.

''அந்த ஆபரேஷன் நானே என் சம்சாரத்துக்கு செஞ்சது'' என்றான்.

பிரமிப்பினால் மூச்சடைக்க அவர்கள் அவனையே பார்த்தார்கள்.

''ஆனால் எல்லார் கண்ணுக்கும் ஆபரேஷன் செஞ்ச அடையாளம் தெரியாது. தெரிஞ்சுதுன்னால் அவங்க என் கூட்டத்தைச் சேர்ந்தவங்கன்னு அர்த்தம்.''

'என் கூட்டம்' என்றால் என்ன? எதைக் குறிப்பிடு கிறான் அவன்? படபடப்பு வெளியே தெரியாத வண்ணம் அவனையே பார்த்தவாறு இருந்தான் வல்லபன்.

''இதுக்குப் பேர் பிசாசு ஆபரேஷன்'' என்றான் அவன் அமைதியாக. ''இதை நான் எல்லாருக்கும் செய்ற தில்லை. செய்யறதா சொல்றதுமில்லை. ஆனால் இப்படி எப்பவாச்சும் உங்களைப் போல சில பேர் என்னைத் தேடிக்கிட்டு வருவாங்க, அவர்களுக்கு மட்டும் ஆபரேஷன் செய்வேன்.'' திடீரென்று அவன் சிரித்தான். ''நான் செய் வேன், நான் செய்வேன்னு அப்போ பிடிச்சு சொல்லிட் டிருக்கேன் பாருங்க! நான் செய்யறதில்லை. வேறே டாக் டருங்க வந்து செய்வாங்க.''

அவன் பேச்சில் குறுக்கிடாமல் அவர்கள் அசை வற்று உட்கார்ந்திருந்தார்கள். மாரி சட்டென்று அவர்களுக்கு எதிரில் சப்பணமிட்டு உட்கார்ந்தான். ைககளை மார்பின் குறுக்காகக் கட்டிக் கொண்டான். கண்களை மூடிக் கொண் டான்.

நிமிடங்கள் ஓடின. அவன் உடம்பு கொஞ்சம் கொஞ்சமாய்த் தளர்வு நீங்கி விறைப்பாக மாறிற்று. பாறையில் செய்த சிலை போல் ஒரு கெட்டித்தனம் அதில் ஏற்பட்டது. சுவாசம் ஒரே சீராக ஏறியிறங்கியது. மங்க லான கறுப்பு நிறம் மாறி, உடம்பில் ஒரு மினுமினுப்பு ஏற்படுகிற மாதிரி இருந்தது.

சட்டென்று தன்னைத் தானே உதறிக் கொண்டவ னாக மாரி எழுந்து கொண்டான். கண்களைத் திறந்து கொண்டு அவன் நிமிர்ந்த போது படிக்காத கிராமத்து ஆள் மாதிரி இல்லாமல் படிப்பும் அறிவும் நிமிர்வும் சுறு

சுறுப்பும் உள்ள ஒரு புதிய நபர் அங்கே முளைத்திருப்பது போல் இருந்தது.

''யெஸ்'' என்றான் உள்ளங் கைகளைச் சுறுசுறுப் பாகத் தேய்த்து விட்டுக் கொண்டு. ''ஐம் டாக்டர் சாயி ராம். ரேடியாலஜிஸ்ட். லெட்ஸ் ஸீ. பெயின் எங்கே என்று சொன்னீர்கள்?'' என்றான் சவிதாவை நோக்கி.

முற்றிலும் மாறுபட்ட அந்த நடையுடை பாவனை யையும், ஆங்கிலப் பேச்சையும் கண்டு அதிர்ந்து போயிருந் தாள் சவிதா. ஒரு ஸ்பெஷலிஸ்ட் டாக்டரின் முன்னிலை யில் தான் இருக்கிறோம் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ள சில வினாடிகள் பிடித்தன. ''இதோ இந்த இடத் தில்'' என்று விலாப் புறத்தைச் சுட்டிக் காட்டினாள்.

''லை டவுன்'' என்று கட்டளையிட்டான் மாரி. ''முதலில் எக்ஸ்ரே எடுத்துப் பார்த்து விடலாம்.''

அந்தப் பெஞ்சில் அவள் படுத்தாள். பரிசோதிக்க வேண்டிய இடத்தில் புடவையைச் சிறிது விலக்கி விட் டான் மாரி.

அவளுடைய கைகளை அகட்டி விட்டு, தலையைப் பக்கவாட்டில் சாய்த்து, மேலே எக்ஸ்ரே விளக்கை நகர்த்தி, ஸ்விட்சுகளை ஆன் செய்து, அவளையே கூர்ந்து கவனித்திருந்து, பிறகு ஸ்விட்சுகளை அணைத்து, காமெராவை நகர்த்தி, திறந்து, பிலிமை எடுத்து, சளசளவென்று கழுவி -

அவன் தன்பாட்டுக்கு வெறும் காற்றில் இத்தனை அசைவுகளையும் செய்து கொண்டிருந்தான். வல்லபன் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். 'இது ஒரு கிராமத்து வீட்டின் மரப் பெஞ்சு அல்ல. முதல் தரமான

லாபரேட்டரியில் எக்ஸ்ரே எடுக்கப்படும் கூடம்' என்று கற்பனை செய்ய அவனுக்குச் சிரமம் ஏற்படவில்லை. மாரியின் அசைவுகளும் இயக்கங்களும் தத்ரூபமாகக் கண் முன்னே எல்லாம் நடைபெறுவது போலக் காட்டின.

''ஹியர், டாக்டர் வீரப்பன்'' என்று மாரி யாரிடமோ கொடுக்கிற மாதிரி கை நீட்டினான். பிறகு மாரியே அதைப் பெற்றுக் கொண்டு எக்ஸ்ரே பிலிமை ஸ்பெஷல் விளக்கின் ஒளியில் வைத்துப் பார்த்தான். டாக்டர் சாயி ராம் என்பவர் எக்ஸ்ரே எடுத்து, டாக்டர் வீரப்பன் என்பவ ரிடம் அதைக் காட்டின மாதிரி இருந்தது. மாரி தூக்கிப் பிடித்து வெளிச்சத்தில் பார்த்தான் பிலிமை. ஈரமான பிலிமை விரல்கள் பிடித்திருந்தால் எப்படி இருக்குமோ? அதே போன்ற பாவம் மாரியினிடம் தென்பட்டது. சவிதாவை முதன் முதல் சந்தித்த காலேஜ் விழாவும், அதில் கண்ட மோனோ ஆக்டிங் நிகழ்ச்சியும் வல்லபனுக்கு நினைவு வந்தன.

''ஐ தாட் ஸோ'' என்றான் மாரி ஆழமான குரலில். ''இன்ட்டெஸ்டினல் காலிக்'' என்றான்.



இன்ட்டெஸ்டினல் காலிக்!

கச்சம் கட்டிக் குடுமி வைத்திருக்கும் ஆள் -கிராமத்துக் காபி கிளப்பில் தண்ணீர் எடுத்து வரும் வேலையாள் - இவன் வாயிலிருந்தா அவ்வளவு பெரிய மெடிகல் வார்த்தை வருகிறது?

வல்லபன் திகைத்துப் போய் சவிதாவை நோக்கினான். இப்போது எழுந்து உட்கார்ந்திருந்தாள் அவள், அவனைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

''தியேட்டருக்குப் போகலாம்'' என்றான் மாரி. ஒரு சீனியர் சர்ஜனின் சுறுசுறுப்பும் கம்பீரமும் அவன் குரலை ஆக்கிரமித்தது. வல்லபனைப் பார்த்தான். ''யூ ஆர் எ நான் - மெடிகல் பர்ஸன். சட்டப்படியும் சுகாதாரப் படியும் உன்னை ஆபரேஷன் தியேட்டரில் அனுமதிக்கக் கூடாது. இருந்தாலும் இது எக்ஸ்ட்ரார்டினரி ஆபரேஷனாகை யால் உன்னை இருக்கச் சொல்லுகிறேன். எழுந்து வெளியே போய் வந்து கொண்டிராமல், குறுக்கே கேள்விகள் எதுவும் கேட்காமல் உட்கார்ந்திருப்பாயா?'' என்றான் மாரி.

''எஸ் -'' என்றவன், ''எஸ் டாக்டர்'' என்றான் தன்னையும் அறியாமல்.

''அப்படியானால் அந்த மூலையிலிருக்கிற முக்காலி யில் உட்கார்ந்திரு'' என்று கூறி விட்டு, ''நர்ஸ்!'' என்றான்.

''எஸ் டாக்டர். எவரிதிங் ரெடி!''

அந்தப் பெண் குரலைக் கேட்டதும் வல்லபனுக்கு மறுபடியும் தூக்கி வாரிப் போட்டது. வாய் விட்டுக் கத்தியும் இருப்பான். மாரியின் எச்சரிக்கை ஞாபகம் வரவே சட்டென்று தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான்.

அதே சமயம் சளசளவென்று எங்கேயோ ஒரு வாஷ் பேசினில் குழாய் திறக்கப்படும் சத்தம் கேட்டது. பல பேர் அடுத்தடுத்துக் கையைக் கழுவிக் கொள்ளும் ஓசை கேட்டது மட்டுமல்ல, கிருமிநாசினி சோப்பின் மணமும் மெல்லிதாக வந்தது.

''யுவர் cap டாக்டர்..'' என்றாள் நர்ஸ். ''யுவர் மாஸ்க் ... யுவர் கௌன்... யுவர் க்ளவ்ஸ்'' என்று ஒவ்வொன் றையும் நாலு தடவை அவள் சொல்வதைக் கேட்டு, அந்த

அறையில் நாலு டாக்டர்கள் இருக்க வேண்டுமென்று வல்லபன் ஊகித்துக் கொண்டான். ஆபரேஷனின் நடைமுறைகளைப் பற்றி அவனுக்கு மேலெழுந்த வாரியாகத் தெரியும். ஆகவே ஒரு பெரிய டாக்டரும் மூன்று அஸிஸ்டென்ட்டுகளும் இருக்கிறார்கள் என்று கண்டு கொண்டான். அவர்களைத் தவிர ஒரு நர்ஸ்.

துணிகளை அணிந்து கொள்ளும் சலசலப்பு அவன் காதில் விழுந்தது.

''நர்ஸ்! எல்லாம் ரெடிதானே?'' என்று மறுபடியும் மாரி கேட்டான்.

''ஆமாம் டாக்டர். ஆபரேஷன் டேபிள் ரெடி, இன்ஸ்ட்ருமெண்ட்களை எடுத்து வைத்து விட்டேன்'' என்றாள் நர்ஸ்.

''ஜோசப், இது நீ அஸிஸ்ட் பண்ணும் முதல் ஆபரேஷன் என்று நினைக்கிறேன், இல்லையா?'' என்றான் மாரி.

''ஆமாம் டாக்டர். உங்களைப் போன்ற ஒரு திறமை வாய்ந்த சர்ஜனின் கீழே வேலை செய்ய ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததில் எனக்கு ரொம்பவும் பெருமை'' என்று ஓர் இளைஞனின் குரல் பதிலளித்தது.

''உனக்காக எல்லாவற்றையும் எக்ஸ்ப்ளெய்ன் செய்து கொண்டே செய்கிறேன்.''

''தாங்க்யூ டாக்டர்.''

ஆக, டாக்டர் வீரப்பன் பெரிய டாக்டர். ஜோசப் என்று இளைஞனான ஒரு டாக்டர். ஒரு நர்ஸ், இன்னும்

இரண்டு டாக்டர்கள் யார் என்று தெரியவில்லை. மீண்டும் சவிதாவை நோக்கி அவன் பார்வை சென்றது. தேர்ச்சி பெற்ற வென்ட்ரிலாக்கிஸ்ட்டைப் போல ஒரே தொண்டைக் குள்ளிருந்து வெவ்வேறான பல குரல்கள் வெளிப்படு வதைக் கண்டு அவளும் இவனைப் போலவே பிரமித் திருப்பது தெரிந்தது. டாக்டர்களும் நர்சும் முகமூடி அணிந்திருந்ததால் அவர்கள் பேச்சு கசங்கியதாகவே இருப் பதையும் அவர்கள் கவனித்தார்கள்.

''நீ படுத்துக் கொள்ளம்மா'' என்றான் மாரி சவிதா விடம்.

அவள் படுத்தாள். சொல்லி வைத்தாற் போல எங்கேயோ சுவிட்ச் போடப்படும் ஓசையுடன், அந்த அறையில் குப்பென ஒரு வெளிச்சம் பரவியது. அதிலும் குறிப்பாக, சவிதாவின் மீது அதிகப்படியான ஒளி விழுந்தது.

''நீங்கள் ரெடியா டாக்டர் மணி?''

''எஸ் டாக்டர். ஒரு யூனிட் ரத்தமும் ஸலைனும் ரெடியாயிருக்கிறது. இதோ வெயினில் செலுத்தி விடு கிறேன்'' என்றது இதுவரை வல்லபன் கேட்டிராத இன் னொரு குரல்.

''அனஸ்தடிஸ்ட் வந்து விட்டாரா நர்ஸ்?''

''இதோ பாயில்ஸ் அப்பேரடஸ்ஸுக்குப் பக்கத்திலே தான் இருக்கிறேன்.''

''க்விக்'' என்றது சீனியர் சர்ஜனின் குரல். ''ஜோசப், இது முதல் நீ கவனமாய்ப் பார்க்க வேண்டும்.''

''எஸ் டாக்டர்'' என்று இளைஞனின் பதில் வந்தது.

''பேஷண்ட்டுக்கு முதல் இஞ்செக்ஷன் போடு கிறார். கவனி. பென்ட்டதாலும் ட்யூபாரினும் கொடுக் கிறார். லெரிங்காஸ்கோப்பின் உதவியால் காற்றுக் குழாய்க் குள் ட்யூபை லாகவமாகப் போட்டு, அனெஸ்தடிக் அப் பேரடஸ்ஸுடன் கனெக்ட் செய்கிறார். பேஷண்ட் சீராக மூச்சு விடுவதால் கறுப்பு பை மெல்லச் சுருங்கி விரிவதைப் பார். இதெல்லாம் உனக்கு மெடிகல் காலேஜில் முன்பே தெரிந்திருக்கக் கூடிய விஷயங்கள்தான். இருந்தாலும் நீ கவனிப்பதற்காகச் சொல்கிறேன்.''

''கவனிக்கிறேன் டாக்டர், தாங்க் யூ.''

அவர்கள் இப்போது மௌனமாயிருந்தார்கள். எதற் காகவோ எல்லாரும் காத்திருக்கிறார்கள் என்று வல்லப னுக்குத் தோன்றியது. சவிதாவைப் பார்த்தான். அவளிடம் எந்தவித அசைவும் காணோம். கண்கள் மூடியிருந்தன. பிறகுதான் வல்லபனுக்குப் புரிந்தது. மயக்க மருந்து வேலை செய்யத் தொடங்கி அவளுக்கு முழு மயக்கம் வருவதற்காகவே எல்லோரும் காத்திருக்கிறார்கள் என்று தெரிந்து கொண்டான்.

பத்து நிமிடம் கழிந்தது.

''நீங்கள் ஆரம்பிக்கலாம் டாக்டர்'' என்றது அனஸ் தடிஸ்டின் குரல்.

''நர்ஸ்!'' என்றார் சீனியர் சர்ஜன்.

''எல்லாம் ரெடி'' என்று நர்ஸ் பதிலளித்தாள். ''அப்ட மனை க்ளீன் செய்து பெயின்ட் பண்ணி விட்டேன்.''

''டவல்ஸ்?''

''எல்லாம் சரியாய்ப் போட்டிருக்கிறேன்.''

''நைஃப்.''

வல்லபன் தானும் ஒரு மயக்க உலகத்தில் இருந்தான். சவிதா கட்டை போலப் படுத்திருந்தாள். ஆபரேஷன் தியேட்டரின் விசித்திரமான மணங்கள் அந்தக் கிராமத்து வீட்டின் நடையெங்கும் வியாபித்திருந்தது. சவிதாவின் வயிற்றுக்கு நேரே மாரி நின்றிருந்தான். அவன் கைகள் விறுவிறுவென்று வெறும் காற்றில் இயங்கிக் கொண் டிருந்தன. ஆனால் சவிதாவின் உடம்பை எந்த இடத்தி லும் அவன் தொடவில்லை.

''கவனி ஜோசப்!'' என்றது சீனியர் சர்ஜனின் குரல். ''அப்டமனை ஓப்பன் பண்ணப் போகிறேன். ஒரே இன்ஸிஷன்தான்.''

சவிதா வீலென்று கத்தப் போகிறாள் என்று நினைத்தவனாக அவள் முகத்தைப் பார்த்தான். அது சற்றும் சலனமற்று இருந்தது.

க்ளிங் க்ளிங் என்று ஆபரேஷன் கருவிகள் வைக்கப் படுவதும் எடுக்கப்படுவதுமான ஓசைகள் அடுத்தடுத்துக் கேட்டுக் கொண்டேயிருந்தன.

''இது உனக்குத் தெரிந்திருக்கும், ஜோசப். லாப்ராடமி. அப்டமனை ஓப்பன் செய்ததும், உள்ளே எப்படி இருக் கிறதென்று நிதானமாய், கம்ப்ளீட்டாய் ஒரு பார்வை பார்ப்பது. பார். ஸ்டமக், லிவர், கால் ப்ளாடர், ஸ்ப்ளீன், ஸ்மால் இன்டெஸ்டின், அப்பெண்டிக்ஸ், கோலன், ப்ளாடர், யூரினரி, கர்ப்பப்பை, ஓவரி - எல்லாம் தெரிகிறதா?''

''தெரிகிறது, டாக்டர்.''

*வல்லபன் மாரியைப் பார்த்தான். சவிதாவின் வயிற்றுப் பகுதியை நோக்கி அவன் குனிந்திருப்பது தெரிந்தது. அவன் கைகள் இங்குமங்கும் அசைந்து, விரல்கள் வளைவதும் நிமிர்வதுமாக இருந்தன. ஆபரேஷன் கருவிகள் எடுப்ப தும் கொடுப்பதும் உபயோகிப்பதும் - எல்லாம் பாவனை யிலேயே நடந்தன. ஆனாலும் அவனுடைய கை சவிதா வின் உடம்பைத் தொடாமல் இரண்டு அங்குலம் உயர் வாகவே இருந்தன.*

*''ரத்தம் ஒழுங்காய்ச் சென்று கொண்டிருக்கிறது இல்லையா, டாக்டர் மணி?''*

*''ஆமாம் டாக்டர். ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள் கிறேன்'' என்று டாக்டர் மணியின் குரல் பதில் கூறியது.*

*நைஃப், ஆர்ட்டெரி ஃபோர்ஸெப்ஸ், க்ளாம்ப்ஸ் என்று சீனியர் சர்ஜன் கேட்கக் கேட்க நர்ஸ் எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள்.*

*''கவனி ஜோசப். இது அஸெண்டிங் கோலன். இங்கே ஒரு கட்டி பெருங்குடலை அடைத்துக் கொண்டிருப் பதைப் பார். என்ன ஜோசப், பேச்சையே காணோம்?''*

*''ஐம் மார்வெல்லிங் அட் யுவர் ஸ்பீட் அண்ட் எஃபிஷியன்ஸி டாக்டர்.''*

*''பலே!...'' திருப்தியுடன் சிரித்தது சீனியர் டாக்டரின் குரல். ''ஆ! இன்ட்டெஸ்டினல் காலிக்குக்குக் காரணம் என்னவென்று கண்டுபிடித்து விட்டேன்.''*

*வல்லபன் மூச்சைக்கூடப் பலமாக வெளியிடாமல் மாரியையே பார்த்துக் கொண்டிருந்தான்.*

*''கான்ஸர்!''*

தலையில் ஆயிரம் இடி விழுந்த மாதிரி திகீரென்றது வல்லபனுக்கு. குபுக்கென எழுந்திருக்க நினைத்தான். ஆனாலும் ஏதோ ஒரு சக்தி அவனை முக்காலியோடு கட்டிப் போட்டிருந்தது. கான்ஸர்! புற்று நோய்! சவிதா! என் அருமை சவிதா! உனக்கு...

சீனியர் சர்ஜனின் குரல் உயர்ந்தது. ''ஆனால் அதிர்ஷ்டவசமாய் ஆபரபிள் கான்ஸர். குணப்படுத்தி விடலாம். கவனி ஜோசப், ரைட் ஹெமி கொலாக்டமி பண்ணப் போகிறேன்.''

கருவிகளின் மெல்லிய ஓசை தொடர்ந்தது.

''கவனி ஜோசப். கான்ஸர் உள்ள பெருங்குடலின் பகுதியை இதோ வெட்டி எடுத்து விட்டேன். சிறுகுட லின் முடிவையும் பெருங்குடலின் மீதிப் பாகத்தையும் இணைத்து அனஸ்டமோஸிஸ் செய்கிறேன். ரத்தம் கசி யாமல் இருக்கிறதா கவனி. இனி அப்டமனை மூடி, தையல் போட வேண்டியதுதான்...''

சவிதா... சவிதா... என்று தன்னுள் புலம்பிக் கொண் டிருந்த வல்லபன் அடுத்து நிகழ்ந்த எதையும் கவனிக்க வில்லை. ட்யூப்... எக்ஸ்டுபேஷன்... பேஷண்ட் ரிகவரி ... ப்ரோஸ்டிக்மைன்... ரிவர்ஸ் என்று பல சொற்கள் அவன் காதில் விழுந்து கொண்டிருந்தன.

''கங்கிராசுலேஷன்ஸ் டாக்டர்!'' என்றன இரண்டு மூன்று குரல்கள்.

''என்னம்மா, ஆபரேஷன் ஸக்ஸஸ்ஃபுல்! தெரிகிறதா? இதோ பார்.'' சவிதாவின் கன்னத்தில் யாரோ தட்டுகிற மாதிரி சப்தம் கேட்டது. ''உன் பேர் என்னம்மா? எப்படி இருக்கிறாய்?''

சவிதா அரை மயக்கத்துடன் கண்களை விழித்தாள். ''என் பேரா... சவிதா... டாக்டர்...'' என்று குழறியபடி அவள் சொல்வதைக் கண்டான் வல்லபன்.

டக்டக்கென்று எங்கோ ஸ்விட்சுகள் அணைக்கப் படும் ஓசை கேட்டது. குபீரென்று ஒளி மறைந்தது. கிரா மத்து அறை, பழைய கிராமத்து அறையாக மாறியது. சரசர வென்று பலர் வெளியேறும் சத்தங்கள் கேட்டன. அந்த அறையெங்கும் பரவியிருந்த வினோத மணமும் துப்புர வாக அகன்றது. வல்லபன் கைக்கடியாரத்தைப் பார்த்தான். காலை ஒன்பதே முக்காலாகிக் கொண்டிருந்தது. மாரியுடன் வீட்டுக்குள் நுழைந்த போது மணி எட்டே கால் என்று அவனுக்கு ஞாபகம் வந்தது. ஆக, ஒன்றரை மணி நேரம் இந்த 'ஆபரேஷன்' நடந்திருக்கிறது!

யந்திரம் மாதிரி இத்தனை நேரமும் இயங்கிக் கொண் டிருந்த மாரி, இப்போது ஒரு பெருமூச்சுடன் திரும்பி னான். கடும் தேகப் பயிற்சியில் ஈடுபட்டவன் போல அவன் உடம்பில் வியர்வை வெள்ளமாய் ஓடிக் கொண்டிருந்தது.

இதெல்லாம் உண்மையாகவே நடந்திருக்க முடியுமா? நிஜமாகவே சவிதாவுக்கு வயிற்றில் புற்று நோய் இருந்து, நிஜமாகவே இந்த ஆபரேஷனில் குணமாகியிருக்குமா? வல்லபன் குழப்பத்தில் ஆழ்ந்தான்.

## 10

இந்தப் பிசாசு வைத்தியம் உண்மைதானா? நம்பக் கூடியதுதானா? சவிதா பிழைத்து விட் டாளா?

பேச்சற்றவனாக வல்லபன் ஒரு நிமிடம் திகைத்திருந்த சமயம் சவிதாவிடமிருந்து ஒரு பலவீனமான முனகல் கேட்டது.

சட்டென எழுந்து தன் மார்போடு சாத்திக் கொண்டு அவள் கூந்தலை மெல்ல வருடிக் கொடுத்தான் வல்லபன். ''சவி... சவிக் கண்ணா... இப்ப எப்படிம்மா இருக்கு?''

அவளால் பதில் சொல்ல முடியவில்லை. அரைக் கண்ணை மெதுவே திறந்து பார்த்து விட்டு, மறுபடியும் மூடிக் கொண்டு விட்டாள். அசல் ஆபரேஷன் செய்து கொண்டவர்களுக்கு எப்படி மயக்கம் வருவதும் தெளிவது மாக இருக்குமோ அதுபோலவே வீக்காக இருந்தாள்.

''இவளுக்கு... இனிமேல்...'' மாரியின் முகத்தை நோக்கிக் கேட்டான் வல்லபன்.

ஆனால் இப்போது மாரிக்குள்ளிருந்த டாக்டர் - டாக் டர்கள் - மறைந்து விட்டார்கள். டக் டக்கென்ற நடையோ தூக்கலான பார்வையோ கம்பீரமான குரலோ இருக்க வில்லை. கிராமத்துக் காபிக் கிளப்புக்குத் தோளிலும் கையிலும் தண்ணீர்க் குடம் சுமந்து செல்லும் படிப்பறி வில்லாத ஆணின் சாதாரணக் களைதான் தென்பட்டது. ''என்ன சார்... என்ன கேட்டீங்க?'' என்றான்.

''இவளைப் பற்றி இனிமேல் கவலைப்பட வேண் டாமா? எல்லாம் சரியாகி விட்டதா?'' என்றான் வல்லபன்.

''கட்டாயம் ஆகியிருக்கணுங்க. நாலு பேருக்குத் தான் நான் இந்த மாதிரி செய்திருக்கிறேன். என் பெண் சாதியையும் சேர்த்துத்தான். யாரும் மறுபடி நோவுன்னு சொன்னது கிடையாது.''

தோள்மீது சாய்த்திருந்த சவிதாவை மெல்லப் பெஞ் சில் கிடத்தினான் வல்லபன். ''என்ன செய்தீர்கள், என்ன சொன்னீர்கள் என்பது உங்களுக்கு இப்போது ஞாபகம் இருக்கிறதா?''

மாரியின் முகத்தில் கள்ளமற்ற சிரிப்பு தெரிந்தது. ''கொஞ்சம்கூடத் தெரியாதுங்க. ஏதோ பிடிச்சு ஆட்டுதும் பாங்களே, அந்த மாதிரி எனக்குள்ளே நாலைஞ்சு பேர் புகுந்துகிட்ட மாதிரி இருக்கும். அதற்கப்புறம் எனக்கு நடக்கிறது எதுவும் தெரியாது. அவங்க என்னை விட்டுப் போனப்புறம்தான் எனக்கு என் நினைவு வரும்.''

அமைதியுடன் மூச்சு விட்டபடி சீராகப் படுத்திருக் கும் சவிதாவையும் மாரியின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தான் வல்லபன். ''ஆனால் இந்த மாதிரி ஒரு சக்தி உங்களிடம் இருப்பது எப்போது தெரிந்தது?''

''என் பெண்சாதிக்கும் இந்தப் பெண்ணைப் போல் தான் மார்புப் பக்கத்திலே ஒரு கட்டி இருந்தது. காரைக் குடிக்குப் போய் டாக்டர்கள் கிட்டே காட்டினேன். ஒண் ணும் முடியாதுன்னு சொல்லிட்டாங்க. வலி தாங்காமல் எப்பப் பார்த்தாலும் அழுதிட்டிருக்கும். அதுக்குத்தான் முதல் முதல்லே வைத்தியம் பண்ணினேன்.''

''எப்படி?''

மாரி சொன்னான்: ''இங்கே ஆறு மைல் தூரத்தில் கண்டிப்பட்டின்னு ஒரு கிராமம் இருக்குது. அங்கே ஒரு டெண்ட் கொட்டகையில் நல்ல சினிமா ஆடுதுன்னு சொன் னாங்க. மூணு வருஷம் முந்தி ஒரு நாள் அதுக்குப் போயிருந்தேன். இன்னொரு சினேகிதனும் வந்திருந் தான். சைக்கிள்லே போனோம். பாதிப் படம் பார்த்திட் டிருந்தப்போ என் சினேகிதன் என்னவோ காய்ச்சலா இருக்கு துன்னு புறப்பட்டுப் போயிட்டான். படம் முடிஞ்சப்போ மணி பன்னிரண்டு இருக்கும். நெலவே கிடையாது. வல்லம்பாறை - காரைக்குடி ரஸ்தாவிலே தனியாய்

வந்திட்டிருந்தேன். திடீர்னு யாரோ என்னைக் கீழே பிடிச்சுத் தள்ளி மேலே ஏறி உட்கார்ந்திருக்கிற மாதிரி இருந் திச்சு. நான் தைரியக்காரன்தான். பலசாலிதான். இருந்தாலும் நாலைஞ்சு பேர் அமுக்குறாப்பலே இருந்ததும் என்னாலே ஒண்ணும் செய்ய முடியலீங்க. பேசாமல் படுத்திட்டேன். அப்புறம் தூக்கத்திலே நடக்கிற மாதிரி எப்படியோ என் வூட்டுக்கு வந்திட்டேன். காலையிலே என் பெண்சாதி சொன்னப்ப என்னாலே நம்பவே முடியலீங்க சார்!''

''என்ன சொன்னாங்க?''

''நான் ராப்பூரா இங்கிலீஷிலே பேசிட்டிருந்தேனாம். ஆனால் பல பேர் குரல் கேட்டுச்சாம். என் குரல் கேட்கவே இல்லையாம். அடிக்கடி ஒருத்தரை ஒருத்தர் டாக்டர்னு கூப்பிடறது மட்டும் இவளுக்குப் புரிஞ்சுதாம். நடு நடுவே ஒரு நர்ஸ் குரலும் - பொம்பளைக் குரல் - கேட் டுச்சாம்.''

வல்லபன் சில நிமிட நேரம் மௌனமாயிருந்தான். பிறகு, ''அதிலேயிருந்து உங்கள் மனைவிக்குக் குணமாகி விட்டதா?''

''இல்லீங்க. ஒரு மாசம் பொறுத்து ஒரு நாள் அவள் நோவு பொறுக்க முடியாமல் அழுதிட்டேயிருந்தாள். பக்கத்திலே உட்கார்ந்திருந்த எனக்குத் திடீர்னு ஒரு வெறி மாதிரி ஏற்பட்டுது. 'படுத்துக்க அப்படியே'ன்னு சொல்லி, கீழே பெஞ்சிலே படுக்கச் சொன்னேன். அப்பாலே கனவிலே நடக்கிற மாதிரி எனக்குள்ளேயிருந்து யார் யாரோ பேசற மாதிரி இருந்திச்சு. ரொம்ப நேரம் கழிச்சுக் கண்ணை முழிச்சேன். இவளும் மயக்கமாகவே இருந் தாள். பிறகு எழுந்துக்கிட்டாள். வலி மறைஞ்சு போச்சு

துன்னு சொன்னாள். நான் முதல்லே நம்பலை. பிறகு இருபது நாள் கழிச்சு ஒரு நாள் மார்பிலே ஒரு தழும்பு ஏற்பட்டிச்சு. ஆஸ்பத்திரியிலே ஆபரேஷன் செய்துகிட்டால் தழும்பு ஏற்படுமே அதே போல் இருந்திச்சு. பிறகுதான் நான், எனக்குள்ளே ஒரு சக்தி புகுந்து வேலை செய்யு துன்னு தெரிஞ்சுக்கிட்டேன்.''

''யார் கிட்டேயும் சொன்னீங்களா?''

''சொன்னேன். கூட வேலை செய்யறவங்களண்டை யும் சொன்னேன். எல்லோரும் என்னைப் பயித்தியம்னு சொல்லிச் சிரிச்சாங்க. அதனாலே நான் யாரண்டையும் சொல்றதில்லை. ஆனால் உங்களைப் போலவே யாராவது திடீர்னு வருவாங்க. ஏதோ ஒரு குரல் இங்கே வர சொன்னதா சொல்லுவாங்க. தோளில் ஒருத்தருக்கும், முழங் காலில் ஒருத்தருக்கும் ஆபரேஷன் செய்திருக்கேன் - அதா வது எனக்குள்ளே இருக்கிறவங்க செய்திருக்கிறாங்க.''

சவிதா புரண்டு படுத்தாள். சிறிது முனகினாள். எழுந்திருக்க முயன்றாள். வல்லபன் சட்டென்று அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

''சாயந்தரம் வரை இங்கேயே இருக்கட்டுங்க. காபி மட்டும் வாங்கியாந்து தர்றேன். வேறே எதுவும் வேணாம்'' என்றான் மாரி.

அன்று மாலை அவர்கள் வல்லம்பாறை கிராமத்தை விட்டுப் புறப்பட்டார்கள். மாரிக்கு நூறு ரூபாய் கொடுத் தான் வல்லபன். ஆனால் அவனும் சரி, அவன் மனைவி யும் சரி வாங்க மறுத்து விட்டார்கள். ''நான் எதுவுமே செய்யவில்லை'' என்று சொல்லி விட்டான்.

காரைக்குடி வந்து ரயிலுக்காகக் காத்துக் கொண்டு உட்கார்ந்திருந்த போதுதான் ''என்ன நடந்தது?'' என்று சவிதா கேட்டாள்.

வல்லபன் எல்லாவற்றையும் விவரித்துச் சொல்லி விட்டு, ''உனக்கு எப்படி இருந்தது?'' என்றான்.

''கையில் ஊசி போடுகிற மாதிரியும், நரம்பில் ட்யூப் செருகுகிற மாதிரியும் இருந்தது. மூக்கில் குழாய் பொருத்தப் படுகிறாற் போல் ஓர் உணர்வு ஏற்பட்டது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக மயக்கம் வந்தது. ஆனாலும்கூட வயிற்றுக்குள் ஒரு கை இறங்குவது தெரிந்தது. வலியேற் படுகிற இடத்தில் என்னவோ வெட்டுகிற மாதிரி, வெட்டி எறிகிற மாதிரி தோன்றியது...''

வல்லபன் அவளைப் பிரியத்துடன் அணைத்துக் கொண்டான். ''இப்போது எப்படி இருக்கிறது?''

''ஆபரேஷன் பண்ணின இடத்தில் வலி இருக் குமே, அந்த மாதிரி தோன்றுகிறது'' என்றாள் அவள்.

எல்லாம் கனவிலே நடக்கிற மாதிரி இருந்தாலும், சென்னை திரும்பிய பிறகு கூட அவளுக்கு அந்தப் பழைய வயிற்றுவலி வரவில்லை. அவள் முற்றிலும் குணமடைந்து விட்டாள் என்பது இருவருக்கும் தெளி வாகப் புலப்பட்டு விட்டது.

பதினைந்து நாள் சென்றிருக்கும்.

குளிக்கச் சென்ற சவிதா, ''வல்லப், இங்கே வாருங் களேன்!'' என்று கூப்பிட்டாள் அவசரமாக.

என்னவோ ஏதோவென்று பயந்து போய்ப் பார்த்த போது அவளுடைய கண்கள் ஆச்சரியத்தால் விரிந்திருந்தன.

''இங்கே பாருங்கள்'' என்று தன் வயிற்றின் அடிப்புறத்தைக் காட்டினாள்.

மூன்று அங்குல நீளத்துக்கு ஆழமான தழும்பொன்று அங்கே காணப்பட்டது. ஆபரேஷன் செய்து தையல் பிரித்த பிறகு ஏற்படும் கெட்டியான தழும்பு.

இருவரும் ஒருவருக்கொருவர் ஒன்றும் பேசிக் கொள்ளவில்லை. வல்லம்பாறையில் நடந்த அந்த நாடக ஆபரேஷன் நிஜமானதுதான் என்பது அவர்களுக்குப் புரிந்து விட்டது. அவளுக்கு இருந்தது கான்ஸர்தான் என்பதும் அது மகா ஆச்சரியமான முறையில் குணமாகி விட்டது என்பதும்கூட அவர்களுக்குச் சந்தேகமறத் தெரிந்து விட்டது.

அவர்களுடைய வாழ்க்கையில் இன்னொரு முக்கிய மான சம்பவமும் விரைவில் நடந்தது.

சவிதாவின் அப்பா ராமலிங்கம் மறுபடியும் வந்தார்.

''சவிதா, நீ என்ன திட்டினாலும் கோபித்தாலும் என் மனம் உன்னையே சுற்றிச் சுற்றி வருகிறதம்மா. நான் வராவிட்டாலும் யாராவது ஆள் மூலம் உன்னைப் பற்றித் தகவல் தெரிந்து வைத்துக் கொண்டு தான் இருந்தேன். உனக்கு உடம்பு நன்றாய்க் குணமாகி விட்டதாகச் சொன் னார்கள். பார்க்கத்தான் வந்தேன்'' என்றார்.

போன தடவை மாதிரி அவர்களுக்கு அவர்மீது இந்த முறை கோபம் ஏற்படவில்லை. மனித மனத்தின் விசித் திரம் அது. தோல்வியும் கஷ்டமுமாக இருக்கும் போது வெறுப்பும் குரோதமும் வருகிற அளவுக்கு, சந்தோஷமாயும் வெற்றிகளுடனும் இருக்கும் போது ஏற்படுவதில்லை.

இருவரும் ஒரே சமயத்தில் ராமலிங்கத்தை நோக்கிப் புன்னகை செய்தார்கள். அந்தப் புன்னகையில் துவேஷமும் குரோதமும் பொடிப் பொடியாகி விட்டன.

சாயந்தரம் மூன்று பேரும் டிரைவ் இன் ரெஸ்டாரெண்ட்டில் காபி சாப்பிட்டுக் கொண்டிருந்த போது, ''எப்படி உனக்குக் குணமாயிற்று சவிதா? எங்கேயோ வெளியூர் போய் வைத்தியம் செய்து கொண்டதாகக் கேள்விப்பட்டேன். யார் அப்படிப்பட்ட மேதையான டாக்டர்?'' என்று ராமலிங்கம் கேட்டார்.

''சொன்னால் நீங்கள் நம்ப மாட்டீர்கள்'' என்ற பீடிகையுடன் எல்லா விவரங்களையும் சொல்லி முடித்தான் வல்லபன்.

ராமலிங்கம் திகைப்புடன், ''அந்த மாரி தனக்குள் நாலைந்து பேர் புகுந்த மாதிரி இருந்தது என்றானே, அது எந்த இடம்? இன்னொரு தரம் சொல்லுங்கள்'' என்றார்.

''வல்லம்பாறை - காரைக்குடி ரஸ்தாவில்'' என்று மீண்டும் சொன்னான் வல்லபன்.

''ஐந்து பேர்... ஒரு ரேடியாலஜிஸ்ட்... ஒருத்தர் பெயர் டாக்டர் வீரப்பன்... ஒருத்தர் மணி... ஒருத்தர் அனஸ்தடிஸ்ட்...'' என்று திருப்பித் திருப்பிச் சொன்னவர், ''மாப்பிள்ளை!'' என்று வல்லபனின் கையைத் திடீரெனப் பிடித்துக் கொண்டார். ''மாப்பிள்ளை! பத்து வருஷத்துக்கு முன்னால் காரைக்குடியில் ஒரு மெடிகல் கான்ஃபரன்ஸ் நடந்தது. அதற்காக டாக்டர் வீரப்பன் என்று ஒரு பிரபல சர்ஜன், தன் யூனிட் டாக்டர்களுடன் மதுரையிலிருந்து வந்திருந்தார். கான்ஃபரன்ஸுக்குப் பிறகு வல்லம்பாறைக்குப் பக்கத்தில் ஒரு முருகன் கோவி

லுக்குப் போய் விட்டு அவர்கள் காரில் திரும்பிக் கொண்டிருந்த போது ஒரு லாரி மோதி அவ்வளவு பேரும்.. மாப்பிள்ளை! எனக்கு நன்றாய் நினைவிருக்கிறது... டாக்டர் வீரப்பன், டாக்டர் மணி, ஒரு நர்ஸ், ஒரு ரேடியாலஜிஸ்ட், ஒரு அனஸ்தடிஸ்ட்... ஆமாம். ராமனாதபுரம் வட்டாரம் பூரா அடிபட்ட செய்தி அது...'' என்றார்.

சவிதாவும் வல்லபனும் பிரமிப்பிலிருந்து விடுபட வெகு நேரமாயிற்று.

நரீஷ் இவ்வளவையும் சொல்லி முடித்த போது எனக்கும் பிரமிப்பிலிருந்து விடுபடப் பல நிமிடங்கள் பிடித்தன. வெய்யில் சுறுசுறுவென்று ஏறியிருந்தது. மந்திராலயத்திற்குச் செல்லும் பஸ் இன்னும் வருவதாகக் காணோம். கூட்டம் அப்படியே காத்துக் கொண்டிருந்தது. சிக்க மந்திராலயத்தில் கொஞ்சம் நிழலாக இருந்தது. அங்கேயே இன்னும் சிறிது நேரம் உட்கார்ந்திருக்கலாமோ என்று எண்ணிக் கொண்டேன்.

''சார்! நீங்களும் வர்றீங்களா?'' என்று ஒரு குரல் எங்களைக் கூப்பிட்டது.

நிமிர்ந்து பார்த்தோம். ஒரு கட்டை வண்டி. கூண்டில்லாத மொட்டை வண்டி. மந்திராலயம் பஸ்ஸுக்காகக் காத்திருந்த ஆண்களும் பெண்களுமாய்ப் பலபேர் மூட்டை முடிச்சுடன் அதில் ஏறி உட்கார்ந்திருந்தார்கள். இரட்டை மாடு பூட்டப்பட்டுப் புறப்படத் தயாராயிருந்தது.

''இன்னி பூரா பஸ் வராது. தலைக்கு ஐந்து ரூபாய்'' என்றான் எங்களை அழைத்த வண்டிக்காரன்.

''சரி, போகலாம்'' என்றான் நரீஷ்.

கட்டை வண்டியின் முனையில் நானும் அவனும் தொற்றிக் கொண்டோம்.

ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் கிழவர்களுமாக நிரம்பி வழிந்து கொண்டிருந்த கட்டை வண்டியின் லொடக் லொடக் எனக்குத் தனியானதோர் அனுபவம் தான். மந்திராலயம் இன்னும் எவ்வளவு தூரம் என்று தெரியவில்லை. மரங்களில்லாத வெற்றுச் சாலையில் மினுமினுவென்று பூச்சி பறந்தது. திடீரென்று ஒரு குழந்தை பசியோ களைப்போ வெய்யிலோ வீல் வீல் என்று அழ ஆரம்பித்தது. தாயாரும் அருகில் இருந்த மற்றப் பெண்களும் என்ன சமாதானம் செய்தும் ஓயாமல் பெருங்குரலில் அலறியது.

''சரியான ராட்சசக் குழந்தை!'' என்று முணுமுணுத்தார் என் பக்கத்திலிருந்த ஒருவர். நான் குழந்தையைப் பார்த்தேன். எலும்பும் தோலுமாய்ப் பரிதாபமாக இருந்தது.

''இவ்வளவு பேசுகிறாயே? ராட்சசக் குழந்தை எப்படி இருக்கும்? சொல்லு'' என்று நரீஷைச் சீண்டினேன்.

''ராட்சசக் குழந்தையைப் பற்றித் தெரியாது. ஆனால் பிசாசுக் குழந்தையைப் பற்றித் தெரியும்'' என்றான் அமைதியாக.

''என்னது! பிசாசுக் குழந்தையா?''

''பிசாசுக்குப் பிறந்த பிசாசுக் குழந்தை'' என்று சொல்லி விட்டு அடுத்த கதையை ஆரம்பித்தான் நரீஷ்.

## பிசாசுக்குப் பிறந்த குழந்தை

கிட்டத்தட்ட இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில், துரைசிங்கம் என்பவர் வடிவேலன்குடி ஜமீந்தாராக இருந்

தார். வெள்ளைக்கார அதிகாரிகளின் நெருங்கிய சிநேகிதர். கோயமுத்தூருக்கு அருகே இருந்தது அவருடைய ஜமீன்.

முதுமலைக் காடுகள் பிரசித்தியாகாத காலம் அது. அதுதான் ஜமீந்தார் துரைசிங்கம் அடிக்கடி தலயாத்திரை செய்யும் இடம். அளவு கடந்த வேட்டைப் பிரியர். கையில் எந்நேரமும் துப்பாக்கி வைத்திருப்பார். அவராக வும் வேட்டைக்குக் கிளம்புவார். துரைமார்களுக்குத் துணையாயும் போவார். ஜமீன் குடிகளுக்கு வேறெவ்வித வசதியும் செய்து தராவிட்டாலும், சிறுத்தைகள் யானை களின் தொந்தரவு தாளாமல் அவர்கள் முறையிட்டால் உடனே கிளம்பி விடுவார்.

காட்டு மிருகங்களுடன் பழகிப் பழகி, சுபாவத்தில் அவரும் ஒரு விலங்காகவே இருந்தார். ஈவு இரக்கம் கிடை யாது. பஞ்சு போட்டுத் துடைத்த இருதயம். தான் நினைத் தது நடக்காவிட்டால், தடையாயிருந்த எவரையும் உண்டு இல்லையென்று பண்ணி விட்டுத்தான் மறுவேலை பார்ப்பார்.

வேட்டை விவகாரங்களில் அவருக்கு வலது கையாகத் திகழ்ந்தவன் சோமு, இளைஞன்.

அவனுடைய நம்பகமான துணையுடன் எத்தனையோ மிருகங்களை அழித்தவர், அவனால் ஒரு நாள் தன் வம்சமே அழியப் போகிறதென்பதை அறியவில்லை.

## 11

ஜமீந்தார் துரைசிங்கம் எவ்வளவுக்கெவ் வளவு கொடியவரோ அவ்வளவுக்கவ்வளவு இரக்கமும் உள்ளவர். தனக்கு ஊழியம் செய்ப

வர்கள் நன்றாயிருக்க வேண்டும், சந்தோஷமாயிருக்க வேண்டும் என்று எண்ணுகிறவர். அவர்களுக்காகத் தனி வீடுகள் கிராமத்துக்கு வெளிப்புறம் கட்டிக் கொடுத்திருந் தார். கிணறு வெட்டித் தந்திருந்தார். சொந்தமாகப் பயிர்ச் செலவு செய்து கொள்ளட்டும் என்று ஆளுக்குக் கொஞ்சம் நிலம் கூடக் கொடுத்திருந்தார். ஆனால் வேலை என்று கூப்பிட்டனுப்பினால் எதுவானாலும் அப்படியே போட்டு விட்டு ஓடி வரவேண்டும் என்று எதிர்பார்ப்பார். 'தின்கிற சோத்துக்கு வேலை செய்ய வேண்டியது தானே நாய்கள்!' என்று கத்துவார்.

ஒரு நாள் ஒரு கிழவி ''மகாராஜாவிடம் ஒரு விண்ணப்ப முங்க'' என்று சொன்னபடி கும்பிட்டுக் கொண்டே அவ ரிடம் வந்தாள். *(குட்டி ஜமீந்தார் என்றாலும் மகாராஜா என்றுதான் குடிபடைகள் கூப்பிட வேண்டும்.)*

''யார் நீ?'' என்றார்.

''சோமுவோட அம்மாவுங்க.''

''ஓகோ. என்ன விஷயம்?''

''பிள்ளைக்கு இருபத்திரண்டு வயசு ஆகுதுங்க. கண்ணாலம் கட்டிக்காமல், பிடிவாதம் பிடிக்கிறானுங்க, மகாராஜா. நீங்கதான் சொல்லணும் மகாராஜா.''

துரைசிங்கத்துக்குப் பெருமையாயிருந்தது. தன் னுடைய அடிமை நாய்கள் கல்யாணம் செய்து கொள்ளக் கூடத் தன் அனுமதிக்காகக் காத்திருக்கின்றன என்பதில் சந்தோஷமடைந்தவராக, ''எல்லாம் ஏற்பாடு செய்யலாம். கவலைப்படாமல் போ'' என்றார். ''உறவு முறையிலே பொண்ணு இருக்குதா?''

''ஆமாம் மகாராஜா. அவனோட அத்தை மகள் சிவகாமி இவனுக்காகவே காத்துக்கிட்டிருக்குது. இவனுக்கும் சின்ன வயசிலேயிருந்து அவள் மேலே உசிரு. மகாராஜா என்ன சொல்வீங்களோன்னுதான் கம்முனு இருக்கிறேன்'' என்றாள் சோமுவின் தாய்.

''வயசு வந்தால் அவனவன் கல்யாணம் கட்டிக்க வேண்டியதுதானே? இதுக்கு நான் என்ன சொல்லப் போறேன்?'' என்று பெருந்தன்மையாகப் பதிலளித்தார் ஜமீந்தார்.

அன்றே சோமுவை வரவழைத்து, அவன் திருமணம் செய்து கொள்ள வேண்டிய அவசியத்தை எடுத்துரைத்து அவனைச் சம்மதிக்க வைத்தார். சோமுவுக்குக் கசக்குமா என்ன? ஜமீந்தாருக்கு எந்த விஷயத்தில் என்ன கோபம் வந்து விடுமோ என்று தானே அவன் இத்தனை நாளும் காத்திருந்தான்!

ஜமீந்தார் தன் மாளிகையிலேயே ஓர் ஓரமாக இருந்த மண்டபத்தைக் கல்யாணத்துக்காகக் கொடுத்தார். தாலி கட்டும் சமயத்துக்குத் தானே வந்திருந்து ஆசீர்வாதம் செய்தார். வஸ்திரங்களும் பணமும் வழங்கினார்.

கல்யாணத்துக்காக வந்திருந்த சோமுவின் உறவினர்கள் பெரும்பாலும் மறுநாள் திரும்பிப் போய் விட்டார்கள். மூன்று பேர் மட்டும் வந்து, ஜமீந்தார் துரைசிங்கத்தை அணுகி, ''ஏழைங்களை மகாராஜாதான் காப்பாத்தணும்'' என்றார்கள்.

''என்னடா செய்யணும்?'' என்றார் துரைசிங்கம் தோரணையோடு.

''நாங்க இருக்கிறது காட்டுப்பட்டிங்க. அங்கே ஒரு சிறுத்தை ரொம்பத் தொல்லை குடுக்குதுங்க. இருட்டிப் போனால் வெளியே நடமாட முடியவில்லை. இது வரைக்கும் மூணு குழந்தை, ஒரு பொம்பளை, ஏழெட்டு ஆடு தூக்கிட்டுப் போயிட்டுதுங்க'' என்றான் அவர்களில் கிழவனாயிருந்த ஒருவன்.

''காட்டுப்பட்டின்னா சொன்னீங்க?'' யோசனை யுடன் மீசையைத் தடவிக் கொண்டார் ஜமீந்தார். ''அது நல்லபாண்டி ஜமீன் இல்லையோ?''

''ஆமாங்க. ஆனால் அவரு துப்பாக்கியே எடுக்க மாட்டாருங்க, மகாராஜா. பயந்தாங்கொள்ளிங்க. கலெக்ட ருக்கு எழுதிப் போடுங்கன்னு சொல்லிட்டார். கலெக்டர் வேறே எங்கேயோ காம்ப் போயிட்டாரு. மகாராஜாதான் எங்களைக் காப்பாத்தணும்.''

துரைசிங்கத்தின் தற்பெருமை கொழுந்து விட்டெரிந் தது. துப்பாக்கி பிடிக்கத் தெரியாத பயல்களெல்லாம் ஏன்தான் ஜமீந்தார் என்று பட்டம் கட்டிக் கொள்கிறார் களோ! பெருமையுடன் மறுபடி மீசையை முறுக்கி விட்டுக் கொண்டு, ''சரி, கவனிக்கிறேன் போ'' என்றார்.

சுற்று வட்டாரம் ஐம்பது மைல் தூரத்துக்கு எல்லாப் பகுதிகளையும் அவருக்குத் தன் உள்ளங்கை மாதிரி தெரியும். காட்டுப்பட்டி ஜமீனில் அட்டகாசம் செய்யும் சிறுத்தை எந்தெந்தக் காடுகளில் சுற்றக் கூடும், எங்கெங்கே தண்ணீர் குடிக்க வரக்கூடும் என்பதை அவரால் மனத்தி லேயே கணக்கெடுக்க முடிந்தது. நாளை மறுநாள் பௌர்ணமி யாகையால் நிலா வெளிச்சம் இருக்கும். சோமுவிடம் சொல்லி வைத்து, சிறுத்தைக்கு இறைச்சியாக ஓர் ஆட்டை

அடித்து வைத்து எடுத்துக் கொண்டு போக வேண்டு மென்று எண்ணியிருந்தார்.

அதை, தீர்மானம் செய்த அன்றைக்கே அவர் சோமு விடம் சொல்லியிருந்தால் அவனும் நாய் மாதிரி தயாராக இருந்திருப்பான். கழுதை எங்கே போய்விடப் போகிறது என்று அலட்சியமாக இருந்து விட்டதால்—

சோமு தன் புது மனைவியுடன் உல்லாசமாகச் சுற்றிக் கொண்டிருந்தான். துரதிர்ஷ்டவசமாக, காட்டுப்பட்டியி லிருந்து வந்திருந்த தன் உறவினர்கள் ஜமீந்தாரிடம் சிறுத் தையைப் பற்றி முறையிட்டதோ, அவர்களைக் காப்பாற்று வதாக அவர் வாக்களித்ததோ அவனுக்குத் தெரியாது. இது வேட்டை சீசனல்ல என்பதால் தன் இஷ்டத்துக்கு எங்கே போனாலும் 'மகாராஜா' கூப்பிட மாட்டார் என்று நினைத்து விட்டான். கல்யாணத்துக்கு இடம் தந்து நேரில் ஆசி கூறியவர் கொஞ்ச நாளைக்கு விடுமுறையும் கொடுப் பார் என்று நம்பி விட்டான்.

வடிவேலன்குடி ஜமீன் கோயமுத்தூரிலேயே மிக இயற்கையழகு ததும்பும் பகுதி. மலைப் பிரதேசம். எங்கு பார்த்தாலும் காடுகள். இடறி விழுந்தால் சளசளத்து உருண்டோடும் சுனைகள். நிலவும் கட்டுச் சோறும் இளமை கொழிக்கும் பெண்ணும் இருந்து விட்டால் நேரம் போவதே தெரியாமல் சுற்றிக் கொண்டிருக்கலாம்.

அன்று அவனும் சிவகாமியும் பழனிச் சுனை என்ற இடத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்த போது வெய்யில் மறைந்து இருள் கவிழத் தொடங்கி விட்டது.

''மச்சான், வீட்டுக்குப் போக நேரமாயிட்டுது'' என்று பயத்துடன் அழைத்தாள் சிவகாமி.

அவளைத் தன் மார்பில் சாய்த்துக் கொண்டு சிரித்தான் சோமு. ''கவலைப்படாதே. அம்மா கிட்டே சொல்லிட்டுத்தான் வந்திருக்கிறேன். நேரமாயிட்டுதானால் ராவுக்கு எங்கேயாவது தங்கி விட்டுக் காலையிலே வர்றோம்னு சொல்லிட்டேன்.'' ஒரு சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டான் ஆனந்தத்துடன். அரண்மனைப் பகுதியில் இருக்கும் போது எவருக்கும் புகை பிடிக்கச் சுதந்திரம் கிடையாது. இப்போது அவனுக்குள் விடுதலையுணர்ச்சி கொப்புளித்தது.

''இங்கே தங்கறதா? எங்கே?'' நாற்புறமும் அவளுடைய மான் விழிகள் சுழன்றன.

''அதோ உயரமாய் ஒரு பாறை இருக்குது பார்! நமக்காகவே மன்மதன் போட்டு வச்சிருக்கிற மெத்தை!'' என்றான் அவன். வேளையும், தனிமையும், இளமையும் சேர்ந்தால் தானாகவே கவிதை பிறக்கும்!

''சீ! இப்படித் திறந்த வெளியிலா படுத்துப்பாங்க!'' என்றாள் அவள் நாணத்துடன்.

''அதனாலென்ன? இங்கே யாரும் வரமாட்டாங்க!'' என்று அவளை அணைத்துக் கொண்டு அந்தப் பாறையை நோக்கி நடந்தான் சோமு.

கிட்டத்தட்ட அதே நேரம் ஜமீந்தார் துரைசிங்கம் அவனைத் தேடிக் கொண்டிருந்தார் அரண்மனையில்.

''எங்கேடா போயிட்டான் அவன்!'' என்று கேட்ட போது யாருக்கும் பதில் சொல்லத் தெரியவில்லை.

சோமுவின் தாய் நடுங்கிக் கொண்டு, ''இருட்டிப் போச்சுதுன்னா காலைலே வர்றேன்னு சொல்லிப் போனான், மகாராஜா'' என்று தெரிவித்தாள்.

''காலையிலேயா!'' பல்லைக் கடித்தார் துரைசிங்கம். நினைத்தால் நினைத்தவுடனே நடக்க வேண்டும் என்று வாழ்ந்து வந்திருப்பவருக்கு, முதல் முறையாகத் தன் அனுமதியின்றி ஒரு வேலையாள் வெளியே போனதை ஜீரணிக்க முடியவில்லை.

''புது மாப்பிள்ளை—புதுப் பெண்டாட்டி'' என்று காரியஸ்தர் மெதுவாய்த் தூபம் போட்டார். அவருக்குச் சோமுவை ரொம்ப நாளாகவே பிடிக்காது.

''புதுப் பெண்ணாவது ஒன்றாவது! இழுத்து வாங்கடா எங்கேயிருந்தாலும்!'' என்று ஜமீந்தார் கட்டளையிட்டார்.

போனவர்கள் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் திரும்பி வந்தார்கள், அவனைக் காணவில்லை என்று. வினாடிக்கு வினாடி ஜமீந்தாரின் ரத்தம் உச்சத்தில் கொதிக்கத் தொடங் கியது.

''பழனிச் சுனை பக்கமாய் அவன் போனதாகச் சில பேர் சொல்றாங்க'' என்று ஒருவன் தெரிவித்தான்.

''நாயைக் கொலை பண்ணிடறதில்லை?'' என்று தானே கிளம்பி விட்டார் ஜமீன்தார். அவர் கையில் வேட்டைத் துப்பாக்கி பளபளத்தது.

''மகாராஜா! மகாராஜா! அவன் ஒண்ணும் தெரியாத பிள்ளைங்க! ஏதோ தெரியாத்தனமாய்த் தப்புப் பண்ணிட் டான். பெரிய மனசு பண்ணி மன்னிக்கணுமுங்க...'' என்று சோமுவின் அம்மா குறுக்கே விழுந்து கெஞ்சினாள். அவளைக் காலால் எட்டி உதைத்துத் தள்ளி விட்டுத் தானே தனியாகப் புறப்பட்டார் ஜமீந்தார்.

பழனிச் சுனை என்பது இரண்டு மைல் தூரத்தில் தான் இருந்தது. அந்தப் பகுதியை அவர் அடைந்த போது

நிலா மேகத்தினுள் புகுந்திருந்ததால் எவ்வித வெளிச்ச மும் இருக்கவில்லை. தயங்கியபடி சுற்று முற்றும் பார்த் தார்—பார்க்க முயற்சித்தார்.

திடீரென்று அவருடைய நாசி விடைத்தது. என்னவோ ஒரு மணம்!

என்ன அது? சுருட்டின் நாற்றம்!

அவர் உஷாரானார்.

சிறிதும் ஓசைப்படுத்தாமல் தோளுக்கு உயர்த்திக் கொண்டார் துப்பாக்கியை.

மேகத்துக்குள்ளிருந்து நிலா வெளிப்பட்டது. இரு நூறடி தூரத்தில் அந்தப் பாறை மீது, தங்களை மறந்தவர் களாக அணைத்துக் கொண்டு குலவும் அந்தத் தம்பதியைக் கண்டார். எந்த மனிதக் கண்ணும் பார்க்கக் கூடாத மகா அந்தரங்கமான காட்சி அது. கண்ணிமைக்கும் நேரம் மெய் மறந்து அதைப் பார்த்தார். அடுத்த வினாடி, தன்னை மீறி வந்த நாய்க்கு இந்தச் சுகம் வேறு ஒரு கேடா என்று உள்ளம் கொதித்தார். துப்பாக்கியைக் குறி வைத்தார். சோமு புரண்டு தன் வாகாக வருகிற நேரம் பார்த்து, விசையை அழுத்தினார்.

இரண்டு தோட்டா சீறியது. விழுந்தான் சோமு.

அவிழ்ந்து விலகியிருந்த ஆடையை அவள் அள்ளிப் போர்த்திக் கொண்டு நிமிர்ந்த போது, அவன் உயிர் பிரிந்து விட்டது.

துப்பாக்கியைத் தோளில் மாட்டிக் கொண்டு துரை சிங்கம் அரண்மனைக்குத் திரும்பி விட்டார்.

ஜமீன் பரம்பரையில் இப்படிப்பட்ட 'தண்டனை' கள் வெகு சகஜம். இம்மென்றால் சிறை வாசமும் ஏனென் றால் வனவாசமும் மலிந்திருந்த காலம் அது. இளம் மனைவியும் கிழத் தாயும் உறவினர்களும் ஊமையாக அழுது கொண்டு சோமுவைத் தகனம் செய்தார்கள். மூன்று நாட்கள் ஊரார் கிசுகிசுவென்று பேசிக் கொண்டார்கள். பிறகு எல்லாம் மறைந்து விட்டது. மறந்து விட்டது.

அந்தப் பௌர்ணமி தினம் கெட்டு விட்டதே தவிர, துரைசிங்கம் காட்டுப்பட்டி சிறுத்தையை மறந்து விட வில்லை. அடுத்த முழு நிலாத் தினம் வேறு ஆட்களை துணை சேர்த்துக் கொண்டு புறப்பட்டார்.

சிறுத்தையின் அடிச் சுவடுகளை வைத்து அது சஞ்ச ரிக்கும் இடங்களைக் கண்டுபிடித்தார். குறிப்பாக அது வரக் கூடிய ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து, அதற்குத் தீனி யாகக் கொண்டு வந்திருந்த ஆட்டைக் கட்டிப் போட்டார். மூன்று ஆட்களை மூன்று வெவ்வேறு இடத்துக்கு அனுப்பி விட்டு, மரத்தின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டார். சிறுத்தை வேட்டைக்குப் போனால் வேட்டை நாய்களைச் சாதாரண மாக அவர் அழைத்து வருவது கிடையாது. ஆனால் இந்தத் தடவை அவர் புறப்பட்ட சமயம் அவை இரண்டும் ஓடி வந்ததால் அவைகளையும் கூடவே அழைத்து வந்திருந் தார். பழக்கப்பட்ட நாய்களாகையால் மூச்சுக் கூட விடா மல் பதுங்கியிருந்தன.

பின்னிரவு நேரம். காட்டுக்கே உரிய அசைவுகளும் சத்தங்களும் கேட்ட வண்ணமிருந்தன. கட்டப்பட்டிருந்த ஆடு பரிதாபமாக மே மே என்று கத்திக் கொண்டிருந்தது. துப்பாக்கியும் கையுமாகக் காத்திருந்தார் துரைசிங்கம்.

திடீரென்று நாய்கள் குரைக்கத் தொடங்கின. சரசர வென்று சத்தம் கேட்டது. ஆனால் சிறுத்தையின் பாய்ச்சல் மாதிரி இல்லை. யாரோ மனிதர் ஓடுகிற மாதிரி இருந் தது. நிலா வெளிச்சம் குறைந்து கொண்டே வந்த போதி லும், ஆடு கட்டப்பட்டபடியே இருப்பது தெரிந்தது. பின்னே என்ன ஓசை? ஏன் நாய்கள் குரைக்கின்றன?

துப்பாக்கியை உயர்த்தி உஷாராக வைத்தபடி மரத்தி லிருந்து இறங்கினார். நாய்களின் குரைப்பைத் தொடர்ந்து மெல்ல நடக்கலானார். பிறகு நாய்கள் வேகமாக ஓடுகிற மாதிரி தோன்றியது. தானும் ஓடினார். நாய்களின் குரைப்பு அவருக்கு முன்னே கேட்டுக் கொண்டிருந்தது. அந்தக் குரைப்புச் சத்தத்தையே வழிகாட்டியாகக் கொண்டு வேகமாய் நடந்தார்.

மரங்கள் அடர்த்தியில்லாமல், ஏறத்தாழத் திறந்த மைதானம் போலிருந்த இடத்தை அடைந்தார்.

நின்றார். நிலா வெளிச்சம் பிரகாசமாயிருந்தது. பார்த்தார். நாய்களின் குரைப்புக் கேட்டதே தவிர எந்த நாயையும் காணோம். ''டைகர்! சிங்கா!'' என்று அவை களின் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டார். உலகின் எந்தக் கோடியில் இருந்தாலும் அவர் குரலைக் கேட்டதும் ஓடி வருகிற அவை இப்போது வரவில்லை. பயங்கர நிசப்தம்!

அப்படியானால் குரைத்தது யார்?

குரைக்கிற மாதிரி ஓசை தந்தது யார்? அல்லது எது?

அடி வயிற்றில் எதுவோ குபுக்கென்று உருண்டு திரண்டு மேலெழுந்து அவர் தொண்டையை அடைத்துக் கொள்கிற மாதிரி இருந்தது.

அமானுஷ்யமான ஏதோவொன்று தன்னை இங்கே இழுத்து வந்திருக்கிறது! அச்சம் உள்ளத்தைக் கவ்விய அதே வேளையில் அவர் உடல் திடுமென விறைத்தது.

அந்த மணம்!

அந்தச் சுருட்டு மணம்!

செத்துச் சாம்பலாகிவிட்ட சோமு உபயோகித்த அதே சுருட்டின் மணம்.

எங்கேயிருந்து வருகிறது? எங்கேயிருந்து வருகிறது? எந்த உருவமும் தென்படாத இந்த வெட்ட வெளியில்?

கூர்ந்து பார்த்தார். அவருக்கு எதிரில் சில கெஜ தூரத்தில் ஒரு மெல்லிய புகை அந்தரத்தில் சுழன்று கொண்டிருந்தது.

## 12

முதலில் எல்லாமே வெறும் பிரமை என்று தன்னுள் சொல்லிக் கொண்டார் ஜமீந்தார் துரை சிங்கம். ஆனால் அப்படித் தன்னை ஏமாற்றிக் கொண்டுவிட முடியாது என்பதை அவருடைய வயதும் அனுபவமும் உணர்த்தின. சிலுசிலுவென்று இரவுப் பூச்சிகள் வட்டமடித்து ஓசை எழுப்பும் இந்த நடுக் காட்டில், அரை நிலாவின் வெளிச்சம் மரங்களையும் புதர்களையும் தழுவியுள்ள இந்த நிசி வேளையில், வெட்ட வெளியில் தான் தன்னந்தனியே நிற்பதும் தனக்கு எதிரே அந்தச் சுருட்டு மணமும் புகை வடிவமும் புலப்படுவதும் உண்மை தான் உண்மைதான் என்று அவருடைய பகுத்தறிவு அடித்துச் சொல்லியது.

இத்தனை வருடங்களில் என்றுமே அனுபவித்திராத ஓர் அச்சம் அவருடைய உச்சி மண்டைக்குள் புகுந்து நரம்புக்

கால்களிலெல்லாம் ஓடியது. எப்படிப்பட்ட அச்சத்தை யும் தாங்கக்கூடிய மனோதிடம் அவருக்கு இருந்ததால் மயங்கிக் கீழே விழாமல் இருந்தார். இருந்ததோடு மட்டு மல்ல. ''யார் நீ? யார், சொல்லு!'' என்று வாய் திறந்து கேட்கவும் செய்தார்.

எந்தப் பதிலும் வரக் காணோம்.

ஆனால் கொஞ்சம் கொஞ்சமாகப் புகையின் அடர்த்தி அதிகரித்தது. சுருட்டின் நாற்றமும் வலுத்தது. கண் கொட் டாமல் பார்த்துக் கொண்டே அசைவற்று நின்றார். தரை யில் கண்ணுக்குத் தெரியாமல் ஒரு தூபக்கால் வைத்திருப் பது போலவும் அதில் யாரோ சாம்பிராணியோ அகிலோ போட்டுப் புகை எழுப்புவது போலவும் தோன்றியது. இதயம் படபடவென்று அடித்துக் கொண்ட அதே நேரத் தில் அவர் கண்கள் கூர்மையாயின.

திகீரென்றது.

சிறிது சிறிதாக அந்தப் புகைக்கு ஒரு வடிவம் ஏற்பட லாயிற்று.

ஒரு மனித வடிவம்.

கை கால் கண் மூக்கு என்று தெள்ளத் தெளிவான ஓரங்கள் ஏற்படாவிட்டாலும், அது ஓர் இளைஞனின் உருவம் என்பது நன்கு தெரிந்தது. அவருக்கு நன்கு தெரிந்த இளைஞன்—அவருடைய அந்தரங்க வேலைக்காரன் சோமு!

அத்தனை பயத்துக்கும் நடுவே அவருடைய மூளை யும் வேலை செய்தது. ''யார் நீ? சொல்லப் போகிறாயா இல்லையா?'' என்று அதட்டியபடியே துப்பாக்கியை

உயர்த்தினார் அந்த உருவத்தை நோக்கி. 'பாயின்ட் பிளங்க்'காக ஒரே தோட்டாவில் சுருண்டு விழக் கூடிய இடைவெளிதான் இருந்தது அவருக்கும் அந்த உருவத்துக்கும்.

அது நகரவில்லை. அங்குலம்கூட நகரவில்லை.

துரைசிங்கத்தின் விரல்கள் நடுங்கின. இருந்தாலும் விசையை அழுத்தினார். துப்பாக்கியிலிருந்து தோட்டா சீறிக் கொண்டு புறப்படும் ஓசை கேட்டது. சோமுவின் உருவத்தை அம்பு போல் துளைத்துக் கொண்டு தாண்டிச் சென்றது. அவ்வளவோடு சரி. மின்னலடிக்கும் நேரம் அந்த வடிவம் கலைந்து சிதறி மறுபடியும் ஒன்று சேர்ந்தது.

கால்களை நகர்த்த முடியாமல் நிலைகுத்தி நின்றார் துரைசிங்கம். விழிகள் தெறித்து விடும் போல் வலித்தன. அதே கணம் ஹாஹஹாஹா என்று ஒரு பயங்கரமான சிரிப்புச் சத்தம் எங்கிருந்தோ ஒலித்தது. எங்கிருந்தோ அல்ல. சோமுவின் புகை வடிவத்துக்குள்ளிருந்துதான்.

'துரைசிங்கம்! விடமாட்டேண்டா உன்னை! ஒரு நாளும் விடமாட்டேன்!'—அப்படி யாராவது சொன்னார் களா? அல்லது சொன்னது போல் தனக்குக் கேட்டதா? அவர் நிதானிக்குமுன்—

துப்பாக்கி வெடித்த சத்தத்தைக் கேட்டு அவருடைய ஆட்கள் அங்கே ஓடி வந்தார்கள். நாய்கள் குரைத்துக் கொண்டே ஓடி வந்து அவரைச் சுற்றிச் சுற்றிக் குதித்தன.

இப்போது அந்த வடிவத்தைக் காணோம்.

''மகாராஜா... என்ன நேர்ந்தது... சிறுத்தை...'' நிலாவின் வெளிச்சத்தில் அவருடைய முகத்தைக் கண்டவர்கள்,

அதிலிருந்த சவக் களையைப் பார்த்ததும் மேற்கொண்டு எதுவும் கேட்காமல் வாயைப் பொத்திக் கொண்டார்கள்.

துரைசிங்கத்தினால் பேச முடியவில்லை. அந்த இடத்திலிருந்து உடனடியாகத் திரும்பிச் செல்ல முடிவு கட்டினார். சாடையிலேயே ஆட்களுக்கு உத்தரவு போட்டு விட்டு அரண்மனைக்குத் திரும்பினார். ஒரு வார காலத்துக்கு அவருடைய தோரணையே மாறிப் போயிருந்தது. இரைந்து பேசவும் அதிகாரமாகக் கட்டளையிடவும் பயந்தவராக, நான்கு சுவர்களுக்குள் பதுங்கியபடி இருந்தார். ஆனால் சோமுவின் ஆவி மேற்கொண்டு எதுவும் செய்யவில்லை. ஆகையால் அன்றைக்குக் காட்டிலே நேர்ந்ததெல்லாம் தானாகச் செய்து கொண்ட கற்பனைகள் என்று எண்ண ஆரம்பித்த சமயம்—

ஒரு நாள் இரவு அவர் தன் அம்சதூளிகா மஞ்சத்தில் நித்திரையில் ஆழ்ந்திருந்த போது, திடீரென்று விழிப்பு ஏற்பட்டது. மனைவி இறந்து பல வருடங்களாகி விட்டிருந்தன. தனியாகத்தான் அவர் படுத்திருப்பது வழக்கம். ஆனால் இப்போது தன் கட்டிலினருகே யாரோ நெருங்கி வருவது போன்ற உணர்வு ஏற்பட்டது. தன் முகத்துக்கு வெகு பக்கத்தில் இன்னொரு முகம் மூச்சு விடுவது போலத் தோன்றியது. அச்சத்துடன் கவனித்த போது, தன் முகத்தை ஒரு சொறசொறப்பான நாக்கு நக்குகிற மாதிரி இருந்தது. ரத்தம் உறைந்து உடம்பு சில்லிட்டது அவருக்கு. நக்குவது ஒரு மனித நாக்கல்ல என்று எதனாலோ அவருக்குப் புரிந்தது. ஏதோ ஒரு மிருகம்—ஓநாய் போன்ற காட்டு விலங்கின் நாக்கு! அதன் முரட்டுத்தனம், ஈரம், உஷ்ணம்—எல்லாவற்றையும் அவரால் உணர முடிந்தது. அந்த நாக்கு நீண்டு

நீண்டு சுழன்று சுழன்று தன் கன்னத்தையும் மோவாயை யும் நெற்றியையும் நாசியையும் நக்கி வருட வருட அவருக்கு மூச்சுத் திணறியது. வீரிட்டலற நினைத்தார். முடியாதபடி தொண்டை அடைத்துக் கொண்டது. வலுக் கொண்ட மட்டும் ஓர் உதறல் உதறினார்; இல்லாததோர் உருவத்தைப் பிடித்துத் தள்ளினார்.

அந்தப் பேய் நாக்கு மறு வினாடி மறைந்து விட்டது. தெப்பமாய் நனைந்து விட்ட தேகத்துடன், ராட்சசத்தன மாய் அடித்துக் கொள்ளும் மார்பை இரு கையாலும் அழுத்திக் கொண்டு இரவு முழுவதும் படுக்கையில் உட்கார்ந்திருந்தார் துரைசிங்கம்.

பொழுது விடிந்த போது அவருக்குப் புத்தி தெளிந் திருந்தது. அநியாயமாய்க் கொலை செய்யப்பட்ட சோமு, தன்னைப் பழி தீர்க்கப் பேயாய் அலைந்து கொண்டிருக் கிறான் என்பதில் அவருக்கு இம்மியத்தனை சந்தேகமும் இல்லாமற் போய் விட்டது. 'உன்னை விடமாட்டேன்' என்று அன்றைக்குக் காட்டில் ஒலித்த சொற்கள் உண்மை தான்!

சோமுவை எப்படியாவது சமாதானப்படுத்தி, சந்தோஷப்படுத்த வேண்டுமென்று நினைத்தார். அதற்கு ஒரு வழி—சோமுவின் இளம் மனைவிக்கு எல்லா வசதி களும் செய்து தருவதுதான். நல்ல உபாயம் கண்டுபிடித்து விட்டோம் என்ற மகிழ்ச்சியுடன் ஆட்களை அனுப்பி அவளை அழைத்து வரச் சொன்னார்.

ஏமாற்றம்தான் மிஞ்சியது.

சோமு இறந்த ஒரு வாரம் வரையில் அவள் இங்கேதான் இருந்தாளாம். பிறகு அவளுடைய பாட்டன் ஒருவன்

வந்து தஞ்சாவூர்ப் பக்கமாக எங்கேயோ அழைத்துப் போய் விட்டானாம். எந்த இடத்தில் அவர்கள் இருக்கிறார்கள் என்பது தெரியவில்லையாம்.

ஜமீந்தார் விட்டுவிடவில்லை. ஜமீன் ஆட்களை அனுப்பித் தேடச் சொன்னார். ஆனால் அவளைக் கண்டு பிடிக்க முடியவில்லை. நாளுக்கு நாள் துரைசிங்கத்தின் அச்சங்கள் அதிகரித்தன. திடீர் திடீரென்று தன்னை யாரோ மோதிக் கொண்டு செல்வதை உணர்ந்தார். யாரோ தனக்குப் பக்கத்தில் நிற்பது போலிருந்தது. திடீரென மூடியிருக் கும் புத்தகங்கள் பிரிந்து காகிதங்கள் படபடத்தன. ஜன்னல் கதவுகள் எந்தக் காற்றுமில்லாத போது மூடி மூடித் திறந்து கொண்டன. மேஜையும் நாற்காலியும் தரதரவென்று இழுக்கப்படும் சத்தங்கள் கேட்டன. இதற்கு மேல் சும்மா இருக்கக் கூடாதென்று ஜமீனிலும் அக்கம் பக்கத் திலும் இருந்த மந்திரவாதிகளை வரவழைத்தார் துரை சிங்கம். பேயோட்டுகிறவர்கள் வந்தார்கள். பூசை நடத்து வதும் கிடா வெட்டுவதும் வேப்பிலை அடிப்பதுமாய்ப் பல நாட்களும் பல ஆயிரம் ரூபாய்களும் செலவழிந்தன.

ஒரு மந்திரவாதி, சோமு வசித்து வந்த குடிசையை இடித்துத் தரை மட்டமாக்கிவிட வேண்டுமென்று சொன் னான். அப்படியே நடக்கட்டும் என்று உத்தரவிட்டார் ஜமீந் தார். ஆனால் எந்த ஆளும் அந்த வேலையைத் தைரியமாக நிறைவேற்ற முன்வரவில்லை. சோமுவின் ஆவியைப் பற்றி அவர்களும் கேள்விப்பட்டிருந்ததே காரணம். ஒரே ஒரு வெளியூர்க்காரன் தான் செய்கிறேன் என்று கடப் பாரையைத் தூக்கி, குடிசையின் சுவரில் ஓர் இடி இடித் தான். மறுநிமிடம் பெருங் கூச்சலுடன் மல்லாந்து விழுந்

தான். அவன் வாயிலிருந்து ரத்தம் கொட்டியது. கடப் பாரையினால் தன் மார்பில் யாரோ ஓங்கி அடித்த மாதிரி இருந்தது என்பதைத் திக்கித் திணறிச் சொல்லி விட்டு இறந்து விட்டான். அதன் பின்னர் சோமுவின் குடிசைக்கு ஒரு மைல் தள்ளியே எல்லாரும் இருக்கலானார்கள்.

இனி அதிக நாள் உயிரோடு இருக்க மாட்டோம் என்று துரைசிங்கத்துக்குத் தோன்றி விட்டது. திடுப்பென்று தனக்கு ஏதாவது நேருமுன் தனது குடும்பத்துக்கு ஆற்ற வேண்டிய கடமைகளை நிறைவேற்றிவிட வேண்டுமென்று ஆசைப்பட்டார்.

அவருக்கு இரண்டே பெண்கள்தான். மூத்த பெண்ணுக்குக் கல்யாணமாகி, ஒரு வயதில் பெண் குழந்தை இருந்தது. இரண்டாவது மகள் ஜெய குமாரி தளதளவென்று கொழித்த இளமையுடன் சொர்ண விக்கிரகமாக வளர்ந்து வந்தாள். அவளுக்குக் கல்யாணம் செய்து வைத்து விட்டால் கடமை முடிந்தது என்று தீர்மானித்தார் ஜமீந்தார். அண்டை அசல் ஜமீன்களிலும் ராஜபரம்பரைகளிலும் தேடி அலசி, சாந்திப்பட்டி ஜமீனின் மூத்த இளவரசரைத் தேர்ந்தெடுத்தார். வேட்டையிலும் சிலம்பத்திலும் கல்வியறிவிலும் அழகிலும் நிகரற்றவனாக இருந்தான் வஜ்ரவேலு.

திருமண ஏற்பாடுகள் கோலாகலமாக நடக்க ஆரம்பித்தன. அந்தக் குதூகலத்தில் சோமுவின் ஆவியைக் கூட ஓரளவு மறந்து போனார் துரைசிங்கம். ஜமீந்தார் கொஞ்ச நாள் சந்தோஷமாக இருக்கட்டும் என்று நினைத்த மாதிரி அதுவும் தலைமறைவாகவே இருந்தது.

திருமண நாளும் வந்தது. வடிவேலன்குடி ஜமீந்தாரின் அரண்மனையின் கல்யாண மண்டபம் எள் விழ இடமில்

லாமல் நிறைந்திருந்தது. வாத்திய கோஷமும் மந்திர கோஷமும் செவியை நிறைத்தன. விதவிதமான வண்ணங் களை வாரியிறைத்தன விளக்குகள். வெளியே அதிர் வேட்டுகள் முழங்கின. உள்ளே, விஸ்தாரமான மண்ட பத்தில் நூற்றுக்கணக்கான ஆசனங்களில் ஜமீந்தார்களும் வெள்ளைக்கார அதிகாரிகளும் துரைசானிகளும் வீற்றிருந் தார்கள். மேடையில், மணமக்களுக்குப் பின்னே நின்றிருந்த துரைசிங்கம் அந்தக் கண்கொள்ளாக் காட்சியை—

மூச்சு அடைத்தது.

காண்பது உண்மைதானா?

கண்ணைக் கசக்கிவிட்டுக் கொண்டு பார்த்தார்.

ஆம். சந்தேகமில்லை. விருந்தினர்களுக்காகப் போடப் பட்டிருந்த ஆசனங்களில், முன் வரிசையில், கால் மேல் கால் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான் சோமு. அவனுடைய வெறி நிறைந்த பார்வை அவர் மீதே குத்தீட்டி மாதிரி செருகிக் கொண்டு நின்றிருந்தது.

பக்கத்திலிருக்கும் வேறு யார் கண்ணுக்கும் அவன் புலப்படவில்லை. அவர்கள் தங்கள் பாட்டுக்குப் பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் வணக்கம் தெரிவித்துக் கொண்டும் சந்தனத்தை முகர்ந்து கொண்டும் பானங்கள் அருந்திக் கொண்டும் இருந்தார்கள். அசையாமல் முறைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தவன் சோமு ஒருவன்தான்.

திருமணச் சடங்குகள் நடந்து, ஜெய்குமாரியின் கழுத்தில் தாலி கட்டப்படும் வரை சோமு அங்கேயே இருந்தான். எல்லாரும் அட்சதை தூவி ஆசீர்வாதம் செய் ததும் சரேலென மறைந்து விட்டான்.

அப்போதைக்கு நிம்மதிப் பெருமூச்சு விட்டார் துரை சிங்கம். இருந்தாலும் ஏதோவொரு கெட்ட நோக்கத் துடன்தான் சோமுவின் ஆவி இங்கே, இன்றைக்கு, சுற்று கிறது என்பது அவருக்குத் தெரிந்து விட்டது. ... எத்தனை சீக்கிரம் முடிந்து எத்தனை சீக்கிரம் ஜெயகுமாரி தன் கணவனின் ஊருக்குப் போய்ச் சேருகிறாளோ அத்தனைக் கத்தனை நல்லது என்று பரபரத்தார்.

ஆனால் அவருக்கு மறுபடியும் அதிர்ச்சி காத்திருந்தது. சம்பந்தி குடும்பத்தின் வழக்கப்படி, திருமணத்தன்று இரவு பெண்ணின் ஊரிலேயே சாந்தி முகூர்த்தம் வைத்துக் கொள்ள வேண்டுமாம். மறுநாள்தான் மணமக்களை அழைத்துச் செல்வார்களாம்.

இன்றிரவு மகள் ஊரை விட்டுப் போய் விடுவாள், பிறகு ஆபத்து இருக்காது என்று நினைத்திருந்த துரை சிங்கம், கலவரமும் ஏமாற்றமும் அடைந்தார். எனினும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் சாந்தி முகூர்த்தத் துக்கு ஏற்பாடுகள் செய்தார்.

அரண்மனையின் கிழக்குக் கோடியிலிருந்த சயன கிருகம் பிரமாதமாய் அலங்கரிக்கப்பட்டது. மங்கள வாத்தி யங்கள் முழங்க, இரவு பத்து மணி சுமாருக்கு மண மகனையும் மணமகளையும் அந்த அறையில் விட்டு விட்டு உறவினர்கள் திரும்பினார்கள்.

பத்து நிமிடம் ஆகியிருக்காது.

வீலென்று ஓர் அலறல் அரண்மனையையே கிடு கிடுக்க வைத்தது - ஒரு பெண்ணின் குரல் — இளவரசி ஜெயகுமாரியின் குரல்!

தங்கியிருந்தவர்களும் புறப்பட்டுக் கொண்டிருந்தவர் களும் அலறியடித்துக் கொண்டு ஓடிப் போய்ப் பார்த்த போது, ஜெயகுமாரி அரை மயக்கமாகத் தன் கணவனின் தோளில் சாய்ந்திருந்தாள். அவள் முகமெங்கும் முத்து முத்தாய் வியர்த்திருந்தது. வஜ்ரவேலு அவளுக்கு மெல்ல விசிறிக் கொண்டிருந்தான்.

''என்னம்மா? என்ன? என்ன?'' என்று பதறினார்.

ஜெயகுமாரியின் குரல் நடுங்கியது. ''வந்து... யாரோ என்னை... மாப்பிள்ளையிடமிருந்து தள்ளிய மாதிரி இருந்தது அப்பா...''

யாரும் அவளை நம்பவில்லை. ''ஒன்றுமில்லை. என்னவோ பயந்திருக்கிறாள்'' என்றார்கள். சிறிது ஆசு வாசப்படுத்தி விட்டு எல்லாரும் திரும்பினார்கள். ஜமீந் தார் துரைசிங்கத்தின் மனத்துக்கு மட்டும் தெரிந்து விட் டது — மகள் சொன்னது உண்மைதான் என்று. சோமு — சோமு என்ற பேய் — மிக விசித்திரமான, பயங்கரமான முறையில் பழி தீர்க்க ஆரம்பித்திருக்கிறது என்பதை அவ ருடைய பயந்த நெஞ்சு உணர்ந்து விட்டது.

அவர் அப்படி மிரண்டு நடுங்கிக் கொண்டிருந்த அதே சமயம், அங்கே மணமகன் வஜ்ரவேலு தன் புது மனைவியை அணைத்துக் கொஞ்சிக் கொண்டிருந்தான். ''ஜெயா... இதோ பார்... ஏன் அப்படிப் பயந்து கத்தினாய்? என்னைப் பார்த்தாயா?'' என்று வேடிக்கை செய்தபடி இளந்தளிர் போல் துவண்ட அவளுடைய பொன் மேனியைத் தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டான். சிறிது சிறிதாக அவள் மனத்தில் தைரியமூட்டி, பட்டு ஆடைகளையும் கெட்டி ஆபரணங்களையும் ஒவ்வொன்றாய்க் களையலா

னான். அவளுடைய சந்தனச் செழுமை வெளிப்பட வெளிப் பட இளமை வெறி அவனுக்குத் தலைக்கேறியது. அவளைத் தழுவி மஞ்சத்தில் கிடத்திய அதே வினாடி —

பின்னாலிருந்து அவனை எதுவோ இழுத்தது. ஒரு முரட்டுக் கரம் தன் கழுத்தை வளைத்து, மோவாயில் இறுக்கி, குரல்வளையை நெரிப்பது போல் உணர்ந்தான். மூச்சுத் திணறியதால் க்ளக் க்ளக் என்ற ஓசை மட்டுமே அவன் தொண்டையிலிருந்து எழுந்தது.

இப்போது ஜெயகுமாரியின் கண்ணுக்கு எதுவும் தெரியவில்லை. அணைக்க வந்த கணவன் துள்ளிப் பின் னால் விழுவதைக் கண்டாள். கோர விலங்காக மென்னியை நெரிக்கும் அருவமான கைகளைத் தன் கைகளால் விலக்கு வதற்காக அவன் ஜீவ மரணப் போராட்டம் நடத்துவதைக் கண்டாள். அவன் கண்கள் பிதுங்கி வெளியே வரத் துடிப் பதையும் நாசியிலிருந்தும் வாயிலிருந்தும் நீர் கொட்டு வதையும் கண்டாள். ''என்னை விட்டுவிடு, விட்டு விடு'' என்று மன்றாடுவது போல அவன் கைகளை உயர்த்திக் கும்பிட முயலுவதைக் கண்டாள்.

## 13

கழுத்து நெரிபடுகிற மாதிரி கணவன் க்ளக் க்ளக் என்று முனகுவதையும், கழுத்தைப் பிடித்து இறுக்குகிற கண்ணுக்குத் தெரியாத கரத்தை விலக்கித் தள்ள அசுரத்தனமாய்ப் போராடுவதையும் கண்ட ஜெயகுமாரிக்கு எதுவுமே புரியவில்லை. இன்னும் இரண்டு வார்த்தை கூடப் பேசிப் பழகியிராத புதுக் கணவனிடம் என்ன பேசுவது, எப்படிப் பேசுவது என்று தெரியாதவளாக அவள் தவித்தாள். வகை வகையான தின்பண்டங்களும் பழங்களும் பாலும் காத்திருக்க, சுகந்தமான ஊதுவத்திகளின்

மணம் காற்றை நிறைத்திருக்க, பளபளக்கும் பட்டு மெத்தை வாவாவென்று அழைக்கும் அந்த இனிய முதலிரவின் முதல் சில வினாடிகளுக்குள் இப்படியோர் அதிர்ச்சியா என்று அவளுக்குத் தேகம் படபடத்தது. அவ்வளவு அச்சத் திடையேயும் ஒன்று புரிந்தது அவளுக்கு. சில நிமிடங் களுக்கு முன் தன்னை எந்தக் கெட்ட சக்தி கணவனின் மார்பில் சேர விடாமல் பிடித்துப் பின்னுக்குத் தள்ளி யதோ, அதுவேதான் இப்போது தன் கணவனைப் பேய்த்தன மாகத் தள்ளி விடுகிறது என்பதை ஊகித்துக் கொண்டாள். அச்சம் அவள் ரத்தத்தை உறைய வைத்தது. இருந்தாலும் வீரமான பரம்பரையில் வந்தவளாகையால், ''என்னங்க ... என்னங்க...'' என்று அவனைத் தொட்டுக் கேட்க முனைந் தாள்.

''என்னை... யாரோ... கழுத்தை...'' என்று அவன் சொல்வது மட்டுமே அவளுக்குக் கேட்டது. அதற்குள் ளேயே வேறு யாரோ ஒரு மூன்றாவது மனிதன் தன்னைத் தன் கணவனிடம் நெருங்க முடியாமல் பிரித்து விடுவதைக் கண்டாள். ஆனால் இருவருக்கும் நடுவில் அப்படி யாரும் இருப்பதாகக் கண்ணுக்குத் தெரியவில்லை. இருப்பதை உணர மட்டும் முடிந்தது.

தள்ளப்பட்டு மல்லாந்து விழுந்தாள். ''அப்பா! அப்பா!'' என்று அலறி, தாளிடப்பட்டிருந்த கதவை வெறி யுடன் படபடவெனத் தட்டினாள்.

முதல் அமர்க்களம் ஓய்ந்து கொஞ்சம் கண்ணயர விருந்த விருந்தாளிகளும் சரி, ஜமீந்தார் துரைசிங்கமும் சரி, இந்த இரண்டாவது அலறலில் பதறிப் போனார்கள். ''என்னம்மா? என்ன?'' என்று முதலில் ஓடி வந்தவர் துரைசிங்கம்தான்.

அதற்குள் தரையில் தள்ளப்பட்டு அலங்கோலமாகக் கிடந்தான் மணமகன் வஜ்ரவேலு. ''மாப்பிள்ளை... மாப் பிள்ளை...'' என்று அணைத்து அவனைத் தூக்கும் போதே —

எல்லாம் முடிந்து விட்டது என்று உணர்த்தி விட்டது அந்தச் சில்லிப்பு.

''யார்? யார் வந்து மாப்பிள்ளையை அடித்தார்கள்? எப்படி நேர்ந்தது?'' என்று பதை பதைக்கும் உறவினர் களிடமும், புதுக் கணவனின் உயிரற்ற உடல் மீது விழுந்து புரண்டு அலறும் ஜெயகுமாரியிடமும் என்ன சொல்வது என்று தெரியாதவராக விக்கித்துப் போனார் ஜமீந்தார் துரைசிங்கம். 'பழி வாங்காமல் விடமாட்டேன்' — என்று அன்றொரு நாள் புகை வடிவத்தில் சொன்ன சோமுவின் ஆவி அவர் கண்ணெதிரே வந்து நின்றது.

எவனோ ஜமீந்தாரின் எதிரி மறைந்திருந்து இந்தக் கொலையைச் செய்திருக்கிறான் என்று விருந்தாளிகள் பேசிக் கொண்டார்கள். வடிவேலன்குடி ஜமீனின் பரம்பரை விரோதிகளான இன்னின்ன ஜமீனைச் சேர்ந்தவர்கள் இப்படிச் செய்திருக்கலாம் என்று ஆளுக்கு ஒரு விதமாகப் பேசி னார்கள். துரைசிங்கம் எதையும் மறுக்கவில்லை. அவ ருடைய உள்மனத்துக்கு மட்டும் புரிந்து விட்டது. எந்த இன்பத்தை அன்று அந்தப் புதுத் தம்பதி பெற முடியாமல் சுட்டு வீழ்த்தித் தடை செய்தாரோ அதே இன்பத்தை அவருடைய மகள் அடைய முடியாமல் பழிவாங்கி விட் டது சோமுவின் ஆவி என்று கண்டு கொண்டார்.

இந்தப் பழி வாங்கும் அத்தியாயம் இத்துடன் முடி யுமா அல்லது மேலும் மேலும் தொடருமா என்பதுதான்

அவருடைய ஒரே திகிலாக இருந்தது. நாளாக நாளாக அந்தத் திகிலும் அருமை மகளின் விதவைக் கோலமும் அவரை வாட்டி நடைப்பிணமாகப் பண்ணி விட்டன. அவருடைய வேட்டை ஆர்வம், அட்டகாசம், கொண் டாட்டம், கேளிக்கைகள் எல்லாம் ஒவ்வொன்றாக மடிந்து மறைந்தன.

பன்னிரண்டு நீண்ட ஆண்டுகள் கழிந்தன. நம்ப முடியாத வண்ணம் தன் வாழ்க்கையில் நிகழ்ந்த சம்ப வங்களைச் சிறிது சிறிதாக மறந்து வரலானார் துரைசிங்கம்.

அப்போதுதான் சோமுவின் ஆவி மறுபடியும் அவ ருடைய வாழ்வில் குறுக்கிட்டது.

முதல் மகளின் பெண் குழந்தை காந்திமதி வளர்ந்து பெரியவளாகி, செல்வக் குடியினருக்கே உரிய செழுமை யும் வனப்புமாக இருந்தாள். விசேட நாட்களில் சர்வாலங் காரங்களுடன் வெளியே வந்தால் நவரத்தின கலசங்களுடன் தங்கத் தேர் பவனி வருவது போல் கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். சுற்று வட்டாரத்து ஜமீன் குடும் பங்கள் மொத்தத்திலிருந்தும் அவளைக் கைப்பிடிக்க இளைஞர்கள் துடித்துக் கொண்டு காத்திருந்தார்கள்.

யாரை அவளுக்கு மணமுடிக்கலாம் என்று பாட்ட னார் துரைசிங்கம் அலசிக் கொண்டிருந்த போது —

திடீரென்று ஒரு நாள் நள்ளிரவு அவருக்கு விழிப்புக் கண்டது. எங்கேயோ ஒரு மெல்லிய ஓசை — என்ன சத்தம் என்று கவனித்தார். வேட்டைக்காரராகையால் எது எப்படி ஓசைப்படுத்தும் என்று அவருக்குத் தெரிந்திருந்தது. இந்தச் சத்தம் ஆந்தையின் அலறல் என்று கண்டு கொண்டார்.

காற்றோட்டமான, வெளிச்சம் நிறைந்த அறைகளும் வெராந்தாக்களும் உள்ள இந்த மாளிகையில் ஓர் ஆந்தை எப்படிக் குடியேறியிருக்க முடியும் என்று யோசித்தார். ஆனால் அது ஆந்தையின் கூவல்தான் என்று நிச்சயமாகத் தெரிந்தது. எவ்வளவோ கொடிய காட்டு விலங்குகளை யெல்லாம் துரும்பெனப் பாவித்துப் பழக்கப்பட்டிருந்த துரைசிங்கம், இந்த இரவுப் பறவையின் கூவலைக் கேட்டு மெய் நடுங்கினார். அது எங்கே உட்கார்ந்திருக்கிறது, எங்கேயிருந்து கூவுகிறது என்பது புரியாததால் அவருடைய பயம் இன்னும் அதிகரித்தது. விரைவிலேயே அவருடைய சந்தேகம் தீரும் வகையில், அவர் படுத்திருந்த இரட்டைக் கட்டிலின் நுனியிலேயே ஓர் ஆந்தையின் உருவம் மெல்ல மெல்லக் கண்ணுக்குப் புலப்பட்டது. அதன் உருண்டைக் கண்கள் தன்னையே வெறித்துக் கொண்டிருப்பதாக உணர்ந்தார். 'சூ! சூ!' என்று சத்தம் போட்டார். அது அசையவில்லை. கையை வீசினார். வெறும் காற்றை வெட்டுகிற மாதிரி இருந்ததே தவிர, எதையும் அடித்த மாதிரியான உணர்வு அவருக்கு ஏற்படவில்லை.

கட்டிலின் நுனியில் அவரையே பார்த்தபடி வெகு நேரம் உட்கார்ந்திருந்த ஆந்தை, போதுமான அளவு அவரைப் பயமுறுத்தியாகி விட்டது என்று திருப்திப்பட்டது போலத் தானாகவே மறைந்து விட்டது.

ஜமீந்தார் துரைசிங்கம், சோமுவின் 'விளையாட்டு' மறுபடி ஆரம்பமாகி விட்டது என்று புரிந்து கொண்டார்.

அதிலே அவருக்குக் கொஞ்ச நஞ்ச சந்தேகம் இருந்திருந்தாலும் இன்னொரு நிகழ்ச்சி அதைப் போக்கி விட்டது.

அரண்மனை மேல் தளத்தில் அவருடைய சயன அறை இருந்தது. அங்கிருந்து சாளரத்தின் வழியே பார்த்தால் தொலைவில் ஒரு சிறிய மலையருவி தெரியும். பகல் நேரங்களில் அதன் உருக்கி விட்ட வெள்ளி மாதிரி தெள்ளிய நீர் தெரியும். பௌர்ணமி இரவுகளில் அந்த அருவியின் அழகோடு சலங்கையொலி போன்ற சல சலப்பும் கேட்பதுண்டு.

தூக்கத்தையும் மன நிம்மதியையும் இழந்து, அழகுப் பதுமையாக வளர்ந்து கொண்டிருக்கும் பேத்திக்கு என்ன இன்னல்கள் ஏற்படுமோ என்று எண்ணியெண்ணிக் கலங்கிக் கொண்டிருந்த துரைசிங்கம் அந்த அருவியை நோக்கியவாறு சாளரத்தினருகே நின்றிருந்தார். அது பகல் நேரமுமல்ல. பௌர்ணமி இரவும் அல்ல. தொலைவில் அருவி ஓடுகின்ற சத்தம் மட்டுமே தெளிவில்லாமல் கேட்டுக் கொண்டிருந்த போது —

அருவியின் நீரில் ஓர் அகல் விளக்கு எரிந்தபடி மிதந்து வருவது போலத் தோன்றியது. பக்கத்துக் கிராமத் தில் ஏதாவது திருவிழா நடக்கிறதோ என்று யோசித்தார். ஆனால் ஜமீந்தாருக்குத் தெரிவிக்காமல் எந்தத் திருவிழா வும் நடைபெறுவது கிடையாது என்பதோடு, எந்தத் திரு விழாவாக இருந்தாலும் இம்மாதிரி அகல் விளக்கு மிதக்க விடும் வழக்கமும் கிடையாது. பின்னே இது என்னவாக இருக்கும் என்று அவர் யோசித்துக் கொண்டிருக்கையி லேயே, ஒரு விளக்கு இரண்டு விளக்காகி, இரண்டு நாலாகி, நாலு எட்டாகி —

திடீரென்று ஆயிரக்கணக்கான விளக்குகள் தன் கண் முன்னே மிதந்து மிதந்து தன்னை நோக்கி வருவதைப் போல உணர்ந்தார். சில வினாடிகளில் அவ்வளவு விளக்கு,

களும் ஒன்று சேர்ந்து ஒரு பெரும் தீயாக அருவியே தகதகவென்று எரிவது போல இருந்தது.

அதுவரைதான் அவருக்கு நினைவு இருந்தது. தன் வாழ்வில் மீண்டும் அமானுஷ்ய சக்திகள் குறுக்கிட தொடங்கியிருக்கின்றன என்பதை அறிந்ததும் அவருக்குத் தலையைச் சுற்றியது. கண்கள் இருண்டன. தொண்டையைப் பிளந்து கொண்டு புறப்பட்ட ஒரு கூச்சலுடன் மயக்கம் போட்டுக் கீழே விழுந்தார்.

சென்னையிலிருந்தும் உதகமண்டலத்திலிருந்தும் வெள்ளைக்கார டாக்டர்கள் வந்து அவரைப் பரிசோதித்து மருந்து கொடுத்தார்கள். நிறைய ஓய்வு எடுத்துக் கொள் ளும்படி அறிவுரை கூறினார்கள். ஆனால் அவர்கள் சொல் லாமலே கட்டாய ஓய்வுக்குத்தான் அவர் ஆளாகி விட் டார். படுத்த படுக்கையாகக் கிடக்கலானார்.

தான் எப்படித் துன்பப்பட்டாலும் பரவாயில்லை என்று எண்ணினார். தன் மகளுக்கு நேர்ந்த அதே கதி அருமைப் பேத்திக்கும் ஏற்பட்டு விடக் கூடாதே என்பது தான் அவருடைய ஒரே கவலையாக இருந்தது.

''தாத்தா'' என்று அன்போடு கூப்பிட்டபடி கட்டி லினருகே வந்து அமர்ந்தாள் காந்திமதி.

''என்னம்மா?'' என்று அவள் கூந்தலை மெல்லக் கோதினார் துரைசிங்கம்.

''நான் உங்களிடம் ஒன்று சொல்லப் போகிறேன். அதற்கு நீங்கள் மறுப்புச் சொல்லக் கூடாது.''

''என்ன காந்தி, புதிர் போடுகிறாய்?'' என்று சோகத் துடன் புன்னகை செய்து திண்டிலே சாய்ந்து உட்கார்ந்து கொண்டார் கீழ ஜமீந்தார்.

அவள் சிறிது நேரம் தன் பட்டுப் புடவையின் தலைப்பைத் திருகிக் கொண்டு பேசாமலிருந்தாள். பிறகு, ''தாத்தா, உங்கள் மன நோய்க்குக் காரணம் எனக்குத் தெரியும்'' என்றாள்.

''அதைப் பற்றியெல்லாம் உனக்கு ஏனம்மா? நீ பாவம் குழந்தை'' என்றார் அவர்.

''நான் குழந்தையில்லை, தாத்தா. வயதும் அறிவும் வந்தவள். அரண்மனையில் வேலைக்காரர்கள் பேசும் போது கேட்டிருக்கிறேன். அம்மாவிடம் கேட்டேன். அவர் களும் சொன்னார்கள்.''

துரைசிங்கத்துக்குக் கவலை ஏற்பட்டது. இந்தச் சிறுமி யின் மனத்தில் எவர் என்ன பயங்கர எண்ணங்களை விதைத்திருப்பார்களோ என்று அஞ்சினார். ''என்னம்மா சொல்கிறாய்?'' என்றார்.

''சித்திக்குக் கல்யாணம் ஆன தினத்தன்றே விதவை யாகப் போனது ஏன் என்று எனக்குத் தெரியும். சோமு என்ற உங்கள் வேலைக்காரனொருவன் பேயாக அரண்மனை யில் திரிகிறான் என்று தெரியும்...''

ஜமீந்தார் குறுக்கிட்டு, ''யார் உனக்கு இதெல்லாம் சொன்னது? அவர்களுக்கு இப்போதே தண்டனை கொடுக் கிறேன் பார்'' என்று கோபித்தார்.

''கோபப்படாமல் கேளுங்கள் தாத்தா. அந்தச் சோமுவை நீங்கள் சுட்டதிலிருந்து, அவன் இந்தக் குடும் பத்தில் எந்தப் பெண்ணுக்கும் இல்லற சுகம் கிடைக்க அனுமதிப்பதில்லையென்று வெறியாக...''

''காந்தி! எவ்வளவு பெரிய விஷயமெல்லாம் நீ பேசு கிறாய்!'' என்று ஆச்சரியப்பட்டார் துரைசிங்கம்.

''மனிதனால் அடக்கவோ ஆளவோ அறிவினால் கட்டுப்படுத்தவோ முடியாத சக்தி பேய் சக்தி. வீணாக அதனுடன் மோதிப் பார்க்க வேண்டாம் என்று எனக்குத் தோன்றுகிறது தாத்தா'' என்றாள் காந்திமதி.

''நான் எங்கேயம்மா அதனுடன் மோதுகிறேன்? என் பாட்டுக்குத் தானே இருக்கிறேன்'' என்றார் பாட்டனார்.

''எனக்குக் கல்யாணம் செய்து வைக்க முயற்சி செய்கிறீர்களே, அது சோமுவின் ஆவியைச் சவாலுக்கு அழைக்கிற மாதிரிதான் — அதைச் சீண்டுகிற மாதிரி தான். ஆகவே —''

''ஆகவே?''

''எனக்குக் கல்யாணமே வேண்டாம் தாத்தா.''

''காந்தி! என்னம்மா அசடாட்டம் பேசுகிறாய்?'' என்று கடிந்து கொண்டார் துரைசிங்கம்.

ஆனால் காந்திமதி ஒரு முடிவுக்கு வந்து விட்டாள். ''ஆமாம், தாத்தா. எனக்குக் கல்யாணம் செய்து வைப் பானேன்? நானும் சித்தி மாதிரி அவல வாழ்க்கை வாழ் வானேன்? அதைக் காட்டிலும் இப்படியே கன்னியாகவே இருந்து விட்டுப் போகிறேன்...''

''காந்தி!''

''என்னை மன்னியுங்கள், தாத்தா. இதுதான் என் தீர்மானம்'' என்று சொல்லி விட்டுச் சென்று விட்டாள் காந்திமதி.

அடுத்த சில நாட்களுக்கு அவள் அம்மாவும், சித்தி ஜெயகுமாரியும் குடும்பத்துப் பெரியவர்களும், தோழி களும் எவ்வளவோ எடுத்துச் சொல்லிப் பார்த்தார்கள்.

காந்திமதியை அவளுடைய முடிவிலிருந்து கொஞ்சமும் அசைக்க முடியவில்லை.

இரண்டு வருஷம், மூன்று வருஷம் போயிற்று. கண்ணீர் விட்டபடியே உயிரை இழுத்துப் பிடித்துக் கொண்டு படுக்கையில் கிடந்தார் துரைசிங்கம். பேத்தி காந்திமதியைப் பார்க்கப் பார்க்க அவருடைய துக்கம் அதிகரித்தது.

சொல்லி விட்டாளே தவிர, காந்திமதியொன்றும் துறவியல்ல. வயது ஏற ஏற, யௌவனம் முழு ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியது. இளமை நரம்புகள் மோக தாகத் துடன் ஏங்கின. தென்றலில் கொடி அசையும் போது, வானத்தில் நிலா நகரும் போது, வீணையில் நாதம் எழும் போது, இரவுகள் ஆயிரம் ரகசியங்களைக் கிசுகிசுக்கும் போது, ஏதேதோ கிளர்வுகள் அவளுக்குள் உற்பத்தியாகின. ஆயினும் தாத்தாவுக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப் பாற்ற வேண்டியும், தன் வாழ்க்கையைப் பாழடித்துக் கொண்டு விடக் கூடாது என்ற நிஜமான தீர்மானத்தா லும், அலை பாய்ந்த மனத்தைக் கட்டுப்படுத்தி வந்தாள்.

ஆனால் ஒரு நாள் இரவு. இன்னதென்று சொல்ல முடியாத ஒன்று அவளைத் தொட்டு எழுப்பிய மாதிரி இருந்தது. கண்ணைத் திறந்தாள். விடிவிளக்கு அணைந்து போயிருந்தது. அறை முழுதும் இருட்டாக இருந்த போதி லும், சுவரை ஒட்டினாற் போல் ஓர் உருவம் தென்பட்டது. ''யார்... யார் அது?'' என்று கேட்க முயன்று, கேட்க முடியாமல் திக்பிரமையடைந்து, விறைத்த விழிகளுடன் அந்த உருவத்தைப் பார்த்தாள். அவளால் தான் பார்ப்பதை நம்ப முடியவில்லை.

முதலில் ஒரு முகம் தென்பட்டது. இளைஞனின் முகம். அதன் கண்கள் இமைக்காமல் அவளையே பார்த்தன. அதிலிருந்து இரண்டு கிளைகள் முளைத்தன. அவை நீண்டு கால்களாகவும் கைகளாகவும் மாறின. பிறகு மார்பும் விலாவும் தென்பட்டன. உருண்டு திரண்ட தசைகளுடன், வாலிபக் கொழிப்பாக அந்த உருவம் இருந்தது. இம்மி இம்மியாக அதன் பூரண உருவமும் வெளிப்பட்ட போது, எந்தப் பெண்ணின் மனத்தையும் கொள்ளை கொள்ளக் கூடிய கட்டழகனாக அவன் திகழ்வதைக் கண்டாள். 'எழுந்து ஓடி விடு!' என்று எச்சரித்தது உள்ளுணர்வு. 'கத்து! சத்தம் போடு!' என்று குத்தியது அறிவு. ஆனால் எதையும் செய்யச் சக்தியற்றவளாக, ஒரு மோகனாஸ்திரத்துக்குக் கட்டுப்பட்டவள் போல, அடுத்து என்ன நேரப் போகிறது என்று பதைப்பும் ஆர்வமுமாக அவள் காத்துக் கொண்டிருந்தாள்.

சுவரோடு ஒட்டினாற் போலிருந்த அந்த உருவம் அவளுடைய கட்டிலை நோக்கி மெல்ல மெல்ல வந்தது.

## 14

எங்கிருந்து வருகிறது அந்த உருவம்? எதற்காக வருகிறது? என்ன செய்யப் போகிறது?

காந்திமதி அச்சத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். இதயம் படபடவென்று அடித்துக் கொள்வதை அவளால் உணர முடிந்தது. ஆனால் தான் விழித்துக் கொண்டிருக்கிறோமா அல்லது சொப்பனம் கண்டு கொண்டிருக்கிறோமா என்பதை அறிந்து கொள்ள முடியவில்லை. தன்னை நோக்கி வருகிற உருவம் இளமை நிறைந்தது. கட்டழகானது, எந்தப் பெண்ணையும் மயக்கக் கூடிய

வசீகரம் படைத்தது என்பதைத் தவிர அவளால் எதையும் எண்ணிப் பார்க்க முடியவில்லை.

அது கட்டிலின் நுனியில் உட்கார்ந்த போது ஒரு வினோதமான மணம் அவளைச் சூழ்ந்து கொண்டது. சிலீரென்று அச்சத்தின் சில்லிப்பு அவளைத் தாக்குவதற்குப் பதில் ஒரு கதகதப்பான சூடு அவள் உடம்புக்குள் புகுந் தது. இளமையின் எதிர்பார்ப்பினால் தன் நாடி நரம்புகள் மீட்டப்பட்டு, தாகத்துடன் புடைத்துக் கொள்வதை அவள் கண்டாள்.

அன்பான இரண்டு உள்ளங்கைகள் தன் கன்னங் களைக் கோப்பை ஏந்துவது போல் ஏந்துவது தெரிந்தது. ஆசையான பத்து விரல்கள் நெற்றியையும் உச்சியையும் காதுகளையும் புருவங்களையும் மோவாயையும் உதடு களையும் வருடித் தருகின்ற இன்பத்தில் அவள் தன்னை மறந்தாள்.

இருந்தாலும் இது ஏதோ தப்பான காரியம் என் பதைப் பரம்பரைப் பண்பாட்டில் ஊறியுள்ள அவளுடைய பெண்மை எடுத்துக் கூறியது. அதே சமயம், முகத்தைத் தடவிக் கொடுத்த அந்த உருவம் அத்துடன் நிற்காமல் மேலும் மேலும் அத்து மீறலாயிற்று. ஓடி விடலாமா, யாரையாவது கூப்பிடலாமா என்ற எண்ணத்துடன் அவள் எழுந்து கொள்ள ஒரு பலவீனமான முயற்சி செய்து பார்த் தாள். அது அவளை உடனே கீழே தள்ளியது. தோள்களை அழுத்தியது. தன் கைகளையும் கால்களையும் வேறு கை களும் கால்களும் அழுத்திக் கொள்வதை உணர்ந்தாள். இப் போது அவளுடைய எதிர்ப்புகள் கொஞ்சம் கொஞ்சமாக மங்கின. தேகத்தின் ஆசை தன்னைத் தோற்கடிப்பதைக்

கண்டாள். அந்த உருவத்தைத் தள்ள வேண்டும், விலக்க வேண்டும் என்று எண்ணியது போய், அதை இறுக்கமாகச் சேர்த்து அணைத்துக் கொள்ளத் தானே முனைந்தாள். ஒரு விசித்திரம் என்னவென்றால், ரத்தமும் சதையும் உள்ள ஒரு மனித உடம்பு தன் மீது படர்வதை அதனுடைய கனத்தினாலும் ஸ்பரிசத்தினாலும் அறிய முடிந்ததேயொழிய, கையால் துழாவிய போது முப்பரிமாணமுள்ள எதையும் அவளால் தொட முடியவில்லை.

மெய்ம்மறந்த இன்ப நுகர்ச்சி அவள் உடம்பினுள் புகுந்து பரவி, சில வினாடிகளில் முற்றுப் பெற்றது. திடீ ரென்று அவளுக்குக் களைப்பு ஏற்பட்டது.

கண் விழித்த போது வெளியே இளஞ் சூரியனின் கதிர்களில் மலர்ச் செடிகள் சிரித்துக் கொண்டிருந்தன. மிகுந்த அசதியும் ஓய்ச்சலும் ஏற்பட்டு அப்படியே இன்னும் வெகு நேரம் படுத்திருக்கலாம் போலிருந்தது. முந்தின இரவு கிடைத்த சுகம் ஞாபகம் வந்தது. அவள் உள்ளம் பூரித்து, உடல் சிலிர்த்தது.

அதை அவள் கனவு என்றுதான் முதலில் நினைத்தாள். ஆனால் மறுநாளைய பகல் கழியக் கழிய, ராத்திரி நெருங்க நெருங்க, அதே அனுபவம் மறுபடி கிடைக்குமா என்று ஏங்கலானாள்.

அன்று இரவும், ஊர் உறங்கிய வேளையில், அந்த அருவமான இளைஞன் எங்கிருந்தோ வந்தான். தொட்டான். கொஞ்சினான். சரசமாடினான். போய் விட்டான். பொழுது விடிந்த போது, சொல்ல முடியாததொரு சோர்வு அவளைத் துவள வைத்திருந்தது. மாலையில் அந்தச் சோர்வு நீங்கும் போது, இரவு மீண்டும் அந்த இன்பத்துக்காகத் தவித்தாள். கிடைத்தது. அனுபவித்தாள்.

இப்படியே ஒரு வாரம் — முழுசாக ஏழு இரவுகள் — அந்த உருவம் அவளைத் தன் வசப்படுத்திக் கொண் டிருந்தது. தினத்துக்குத் தினம் அவளிடம் பலவீனமும் அசதியும் அதிகரிக்கத் தொடங்கிய போது —

பெண்களின் மாறுதல்களைப் பெண்களால்தான் உணர முடியும் என்பதை மெய்ப்பிப்பது போல —

''என்ன காந்தி, ஏன் கொஞ்ச நாளாய் என்னவோ போலிருக்கிறாய்? எதனால் இப்படிச் சுறுசுறுப்பில்லா மல், ஒரு தள்ளாட்டத்துடன் இருக்கிறாய்?'' என்று அவ ளுடைய சித்தி ஜெயகுமாரி ஒரு நாள் கேட்டாள்.

''ஒன்றுமில்லையே... நான் எப்போதும் போல்தான் இருக்கிறேன்'' என்று காந்திமதி மழுப்பினாள்.

ஜெயகுமாரி விடவில்லை. காந்திமதியின் விழிகளில் தென்பட்ட செருகலும், கண்களின் கீழே காணப்பட்ட களைப்பும், இந்தப் பெண்ணுக்கு என்னமோ ஏற்பட் டிருக்கிறது என்று நம்ப வைத்தன. அக்கா மகளை அன்பு டன் அணைத்துக் கொண்டு, ''எதுவானாலும் என்னிடம் சொல்லு காந்தி'' என்றாள்.

தயங்கித் தயங்கிக் காந்திமதி சொல்லி முடித்த போது அவள் திகைத்துப் போனாள். என்றைக்குத் தந்தை துரை சிங்கம் அந்த வேலைக்கார சோமுவைச் சுட்டுக் கொன் றாரோ அன்று முதல் இந்தக் குடும்பத்தை ஆட்டி வருகின்ற அமானுஷ்ய சக்தியின் இன்னொரு பேய் வடிவம்தான் இது என்று அவளுக்குப் புலப்பட்டு விட்டது. வயதுப் பிள்ளைகள் திறந்த வெளியில் தனியாகப் படுத்திருந்தால் மோகினிப் பெண் கவர்ந்து செல்வாள் என்று பாட்டி மார்கள் சொல்லக் கேள்விப் பட்டிருந்தாள். ஆனால் இளம்

பெண்களை மயக்கும் மோகனப் பேய் இருக்கும் என்று கேள்விப்பட்டதில்லை.

''காந்தி, நான் எவ்வளவோ சொன்னேன், கேட்டாயா?''

''என்ன சித்தி?''

''கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன் என்றாயே, அதன் விளைவுதான் இது. உன் மனசுக்கு இருக்கிற உறுதி உன் உடலுக்கு இல்லை. அது உன்னை எதிர்த்து வேலை செய்கிறது.'' காந்திமதியின் கலங்கிய கண்களை ஆதர வுடன் துடைத்து விட்டாள். ''சரி, என்னிடம் சொன்னதை வேறு யாரிடமும் சொல்லாதே. இதற்கு நான் ஏற்பாடு செய்கிறேன்.''

அன்றே ரகசியமாக அக்கம் பக்கத்திலிருந்த பேயோட்டு கிறவர்களையும், மந்திரவாதிகளையும் வரவழைத்தாள். ஆனால் ஜமீந்தாரிடம் அதன் காரணத்தைச் சொல்லவில்லை. நோயுடன் மன்றாடிக் கொண்டு படுத்த படுக்கையாகக் கிடக்கும் கிழவரை மேலும் ஏன் துன்புறுத்த வேண்டும் என்று இரக்கப்பட்டே அவரிடமிருந்து உண்மையை மறைத்து விட்டாள். மற்றவர்களிடமும் பொதுவாக ஒரு சாந்தி செய்தால் நல்லது என்றுதான் இந்தக் காரியங்கள் என்று சொல்லி வைத்தாள்.

அரண்மனையெங்கும் வேப்பிலைத் தழைகளும் உடுக்கை முழக்கங்களும் நிறைந்ததுதான் மிச்சமேயொழிய, 'அது' அவளைத் தேடி வருவது நிற்கவில்லை.

காந்திமதி தனியாகப் படுக்க வேண்டாம் என்று கூறித் தன்னிடமே இரவு வேளைகளில் வைத்துக் கொண்டாள். ஆனால் டாண்டாணென்று மணி பன்னிரண்டு அடிக்கும்

போது ஜெயகுமாரிக்கு அவளையும் அறியாமல் ஒரு தூக்கம் கண்ணைச் சுழற்றும் — பக்கத்தில் படுத்துள்ளவளுக்கு என்ன நேருகிறதென்பதை உணராமல் அவள் நித்திரை வசப்பட்டிருக்கும் நேரத்தில் 'அது' காந்திமதியைக் கவருவது வழக்கமாகி விட்டது.

மேலும் பதினைந்து நாள் தாண்டியது.

அன்று காலை முதலே வானம் இருண்டு கருமேகங்கள் சஞ்சரித்துக் கொண்டிருந்தன.

இன்றிரவு எப்படியும் தூங்காமலிருக்க வேண்டு மென்று தன்னுள் வெகு உறுதியாக இருந்த போதிலும் ஜெயகுமாரி வழக்கம் போல் அந்த மாயத் துயிலில் ஆழ்ந்து விட்டாள். காந்திமதியும் கண்ணயர்ந்திருக்கக் கூடும் — 'அது' வந்து அவளை எழுப்பியிராவிட்டால்.

அது அவளை நோக்கி வந்தது. கட்டிலில் உட்கார்ந்தது. அவளை எழுந்திருக்க முடியாமல் அழுத்தியது. அவள் உதடுகளைத் தன் உதடுகளால் கவ்விய சமயம் - இனி இதனிடமிருந்து இன்றிரவு மீள முடியப் போவதில்லை என்று காந்திமதி தீர்மானித்து விட்ட சமயம் — அவ ளுடைய தேகம் மீள முடியாமல் அதனிடம் சரணடைந்து விட்ட சமயம் —

எங்கிருந்தோ வீசிய காற்றில் பொத்தென்று அவள் மார்பின் மீது ஒரு சின்னப் புத்தகம் விழுந்தது.

அதே வினாடி அவள் மார்பின் மீதும் தொடையின் மீதும் கைகளின் மீதும் கால்களின் மீதும் இருந்த சுமை பொட்டென்று விலகியது.

சென்ற ஒரு மாத காலமாய் அவள் ஒரு விஷயத்தைக் கவனித்து வந்திருந்தாள்.

அறையின் மூலையில் ஓர் மேஜையொன்று இருக்கிறது. தினம் அங்கே ஒரு மெழுகுவர்த்தி கொளுத்தி வைக்கப்படுவது வழக்கம். 'அது' அறைக்குள் வருகிற போது அந்த மெழுகுவர்த்தியின் ஜுவாலை கொஞ்சம் கொஞ்சமாக உயர்ந்து நீளும். மெழுகுவர்த்தியின் உயரத்தைக் காட்டிலும் அதன் சுடர் உயரமாக இருக்கும். அது மட்டுமல்ல. தீச்சுடரின் சிவப்பு நிறம் மாறி, கண்ணைப் பறிக்கும் நீல நிறத்தில் ஒளிர ஆரம்பிக்கும். 'அது' வெளியேறியவுடன் கொஞ்சம் கொஞ்சமாக ஜுவாலை அடங்கி, இயல்பான அளவுக்கு வரும். சுடரின் நிறமும் எப்போதும் போல் சிவப்பாகி விடும்.

இப்போது அவள் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே, சுடர் குறைந்து, நிறம் மாறி, 'அது' வெளியேறி விட்டது என்பதைச் சந்தேகமற வெளிப்படுத்தியது. அதன் பிறகே அவள் தன் மார்பின் மீது வந்து விழுந்த புத்தகத்தைக் கையிலெடுத்தாள்.

படித்த இடத்தின் அடையாளத்துக்காக யாரோ குப்புறக் கவிழ்த்து வைத்திருந்த மாதிரி அதன் நடுப்பகுதி பிரிந்து அவள் மார்பின் மீது கிடந்தது. அதை எடுத்து, பிரித்திருந்த புத்தகத்தைப் பார்த்த போது, அவளுடைய சித்தி ஜெயகுமாரியும் சரேலெனத் தன் தூக்கத்திலிருந்து விடுபட்டாள்.

''சித்தி... இந்தப் புத்தகம்... என்மீது விழுந்ததும் அது போய் விட்டது...'' என்று காந்திமதி சொல்ல, இருவருமாக மெழுகுவர்த்தியின் வெளிச்சத்தில் அந்தப் பாகத்தைப் பார்த்தார்கள்.

'...பில்லி சூனியம் பெரும்பகை அகல, வல்ல
பூதம் வலாஷ்டிகப் பேய்கள், அல்லற் படுத்தும்

அடங்கா முனியும், பிள்ளைகள் தின்னும் புழக்கடை முனியும், கொள்ளிவாய்ப் பேய்களும் குறளைப் பேய்களும், பெண்களைத் தொடரும் பிரம்ம ராட்ச தரும், அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட, இரிசி காட்டேரி இத்துன்ப சேனையும், எல்லிலும் இருட்டிலும் எதிர்ப்படும் அன்னரும், கனபூசை கொள்ளும் காளியோடனைவரும், விட்டாங்காரரும் மிகுபல பேய்களும், தண்டியக்காரரும் சண்டாளர் களும், என் பெயர் சொல்லவும் இடி விழுந்தோடிட...'

*என்ன புத்தகம் அது என்று அட்டையைப் பார்த் தார்கள். 'தேவராய சுவாமிகள் அருளிய கந்தர் சஷ்டி கவசம்' என்று போட்டிருந்தது.*

*''காந்தி'' என்று அக்கா மகளைக் கட்டிக் கொண் டாள் ஜெயகுமாரி. ''இந்தப் பாசுரத்துக்கு ஏதோ மகிமை இருக்கிறது. அதனால்தான் அது ஓடிவிட்டது. இனிமேல் வரவே வராது பார்'' என்றாள்.*

*தன்னை அழுத்திய கனம் திடீரென விலகி விட்டா லும், தொடர்ந்து அப்படி இருக்குமா என்று காந்தி மதிக்குக் கொஞ்சம் சந்தேகம் இருந்தது. இரண்டு நாள், மூன்று நாள், ஒரு வாரம், பத்து நாள் — ஊகூம். அது வரவேயில்லை.*

*''சித்தி! நீங்கள் சொன்னது உண்மைதான். ஆமாம்! நான் பிழைத்து விட்டேன்'' என்று மனம் மகிழ்ந்தாள் காந்திமதி. அது அற்ப சந்தோஷம்தான் என்பதை அப் போது அவள் உணரவில்லை.*

*இரண்டு மாதம் பொறுத்து ஒரு நாள் அவளுக்கு வயிற்றைக் குமட்டிக் கொண்டு வந்தது. வாந்தியெடுத்*

தாள். தலை சுற்றுகிறது என்று சொல்லிப் படுத்துக் கொண்டாள்.

திகீரென்றது அந்த விபரீதமான அறிகுறிகளைப் பார்த்து. யாருக்கும் தெரியாமல் நாட்டு வைத்தியரொரு வரை வரவழைத்தாள். அவர் காந்திமதியின் நாடியைப் பார்த்து விட்டு —

அவள் வயிற்றில் மூன்று மாதச் சிசு வளர்ந் திருக்கிறது என்றார்.

''சீ, உளறாதீர்!'' என்று ஒரு சீறலுடன் அவரை அனுப்பி விட்டார்களே தவிர —

இருவருக்கும் திகில் பிடித்துக் கொண்டது. அப்படிக் கூட இருக்க முடியுமா? அருவமாக வந்து கொஞ்சிய பேய், மனித உடம்புக்குள் ஓர் உயிரை உற்பத்தி பண்ணி யிருக்க முடியுமா? நம்ப முடியவில்லை, நம்ப முடிய வில்லை என்று ஆயிரம் முறை சொல்லிக் கொண்டாலும் அந்தப் பயங்கரமான உண்மையை இல்லை என்று மறைக்க முடியவில்லை. தாய்மையின் அடையாளங்கள் நாளுக்கு நாள் காந்திமதியிடம் அதிகரிக்க ஆரம்பித்தன. நாட்டு வைத்தியரைச் சரிக்கட்டி வைக்காத காரணத்தால், தானறிந்த ரகசியத்தை அவர் சாடை மாடையாக எல்லாரிடமும் பரப்பி விட்டார்.

கடைசியில் ஜமீந்தார் துரைசிங்கத்தின் காதுக்கு இந்தச் செய்தி எட்டிய போது, மரணப் படுக்கையில் கிடந்த கிழவர் ரோஷத்துடன் சீறியெழுந்து உறுமி, அரண்மனையைக் கிடுகிடுக்க வைத்தார். தினம் தினம் 'அது' காந்திமதியிடம் வந்தது பற்றி முன்பே சொல்லாமல் மறைத்திருந்ததால்,

இப்போது அவரை நம்ப வைப்பது மேலும் கடினமா யிருந்தது. அரண்மனைக்குள்தான் எவனோ இந்தத் துரோ கத்தைச் செய்திருக்க வேண்டுமென்று நினைத்து, இரண்டு வேலைக்காரர்களைச் சுட்டுத் தீர்த்தார். ஐந்தாறு பேரை ஜமீனை விட்டு வெளியே துரத்தினார். கடைசியில் மதறாசி லிருந்து ஒரு வெள்ளைக்கார டாக்டரை தருவித்தார். கருச் சிதைவுக்கு வசதிகள் இல்லாத காலம் அது. ''ஏதாவது செய்தால் தாயின் உயிருக்கு அபாயமாகி விடும்'' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார் அந்த டாக்டர்.

அண்டை அயல் ஜமீன்களிலும் உறவினர்கள் மத்தி யிலும் காந்திமதியின் கதை பரவத் தொடங்கியது.

காந்திமதிக்கு அவமானம் ஒரு பக்கம். ஆனால் அதைக் காட்டிலும் அச்சம் ஆயிரம் மடங்கு இருந்தது.

பேய்க்குப் பிறக்கும் குழந்தை எப்படி இருக்குமோ? கண்ணும் மூக்கும் தலையும் வாயும் என்னென்ன கோர வடிவத்தில் இருக்குமோ!

அருவருப்பும் அச்சமும் அவமானமும் துரத்த அவள் ஒரு முடிவுக்கு வந்தாள் — தற்கொலை செய்து கொள்வதென்று.

## 15

கல்யாணமாகாமலே கர்ப்பமாவது என்பது ஒரு பெண்ணின் வாழ்க்கையில் எத்தனை கொடிய அவமானம் என்பதைக் காந்திமதி தெரிந்து வைத் திருந்தாள். ஆனால் அதைக் காட்டிலும், அந்த அவமானத் தினால் தன் பாட்டனாரும் சித்தியும் எவ்வளவு துடித்துத் துன்பப்படுகிறார்கள் என்பதையே பெரிதாக நினைத்தாள்.

அந்தத் துன்பத்துக்கு முடிவு, தற்கொலைதான் என்று நிச்சயித்தாள். தன் வைர அட்டிகையில் ஒரு கல்லைப் பெயர்த்து, பொடி செய்து வைத்துக் கொண்டாள். ஒரு டம்ளரில் பாலும் எடுத்துக் கொண்டாள்.

பாலில் வைரப் பொடியைக் கரைக்க நினைத்த வேளையில் --

ஏதோவொரு வினோதமான சத்தம் அவள் கவனத்தைக் கலைத்தது. அந்த அறையில் யாரோ ஒருவர் தன்னைக் கவனித்துக் கொண்டிருப்பது போன்ற பிரமை ஏற்பட்டது. எங்கிருந்தோ சுருட்டுப் புகையும் மணமும் வருகிறாற் போல் தோன்றியது.

ராத்திரி வேளையானாலும் எவனோ வேலைக்காரன் ஒருத்தன் விழித்துக் கொண்டிருக்கிறான் என்று அவள் எண்ணினாள். அதையொட்டி இன்னோர் எண்ணமும் உதித்தது. விஷத்தைக் குடித்த கொஞ்ச நேரத்துக்குள் தன்னை யாரேனும் கண்டு விட்டால்? குற்றுயிரும் குலையுயிருமாக இருக்கும் போது பார்த்து அவளைக் காப்பாற்றி விட்டால்? அதன் பின் தற்கொலை செய்து கொள்ளச் சந்தர்ப்பமே கிடைக்காது. இரவும் பகலும் காவலிருந்து அவள் உயிர் வாழும்படி பண்ணி விடுவார்களே!

கூடாது; இந்த அரண்மனைக்குள் தற்கொலை முயற்சி செய்யக் கூடாது என்ற முடிவுக்கு வந்தாள் அவள்.

வைரப் பொடியைப் பொட்டலம் கட்டி இடுப்பில் செருகிக் கொண்டாள். பால் டம்ளரை எடுத்துக் கொண்டாள். எவருக்கும் தெரியாமல் அரண்மனையிலிருந்து நழுவினாள்.

*வெளியே பால் நிலா பரவிக் கொண்டிருந்தது. யாரும் அதிகமாய்ப் போகாத சுனையை நோக்கி நடந்தாள்.*

*ஆனால் தன் பின்னால் ஒரு காலடியோசை கேட்கிற மாதிரியே இருந்தது. யாரோ பெருமூச்சு விடுகிற மாதிரியும் அழுகிற மாதிரியும் நடுநடுவே கேட்டது. சாகத் துணிந்தபின் இதற்கெல்லாம் ஏன் பயப்பட வேண்டும் என்று தைரியமாக மேலே நடந்தாள். எவரும் வராத இடம் என்று ஒரு சுனைப் பகுதியை அவள் தேர்ந்தெடுத்த போது —*

*கப்பென்று ஒரு முரட்டுக் கரம் அவள் கையைப் பிடித்தது. அரண்மனை வேலைக்காரன்தான் எவனோ பின் தொடர்ந்து வந்திருக்கிறான் என்றெண்ணியவளாகத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். ஆனால் யாரையும் காணவில்லை. கையைப் பிடித்திருந்த பிடியை மட்டும் அவளால் உணர முடிந்தது. தைரியத்துடன் உதறப் பார்த்தாள். அந்தப் பிடி அவளை விடவில்லை. 'விடு! விடு என்னை!' என்று கூவினாள். பலன் கிடைக்கவில்லை. மாறாக, அந்தக் கை தன்னை எங்கேயோ இழுப்பதை உணர்ந்தாள். 'வா, வா' என்று சொல்லி, ஒரு குறிப்பிட்ட வழியில் இழுக்கிற மாதிரி தோன்றியது.*

*அந்தப் பிடி இழுக்கும் திசையில் நடந்தவள், இடிந்து சரிந்து கிடந்த ஒரு குடிசையைக் கண்டாள். அதே வினாடி அவளைப் பிடித்திருந்த பிடி விலகியது. காலடியோசை திரும்பிச் சென்று மறைந்து விட்டது.*

*திகைப்புடன் நின்றிருந்த போது அவள் செவியில் ஒரு முனகல் சத்தம் கேட்டது. அந்தத் தீனமான சத்தம் குடிசைக்குள்ளிருந்து வருகிறதென்பதை அறிந்தாள். இப்*

போது அவளுடைய பயம் விலகி, ஆவல் ஏற்பட்டிருந்தது.

மெல்லக் குடிசையை நெருங்கி, உள்ளே எட்டிப் பார்த்தாள். முதலில் இருட்டில் எதுவும் தெரியவில்லை. பிறகு சிறிது சிறிதாக ஓர் உருவம் புலப்பட்டது. ஒரு கிழவி — எலும்பும் தோலுமாக, நோய் வாய்ப்பட்டு முனகிக் கொண்டிருந்தாள்.

''பாட்டி... யார்... நீங்க... இங்கே பாருங்க...'' என்று அருகில் உட்கார்ந்து விசாரித்தாள். கையில் பால் டம்ளர் அப்படியே இருந்தது. அதை மெல்ல அவள் வாயில் ஊற்றினாள்.

கிழவி மெதுவே கண்ணைத் திறந்தாள். அவளுக்கு உயிர் வந்து விட்டது என்பது தெரிந்தது. ஆனால் அது ஆச்சரியமில்லை.

திடீரென்று தன் அடி வயிற்றில் கனம் குறைகிற மாதிரியான உணர்வு ஏற்பட்டது காந்திமதிக்கு. எழுந்து நின்று தன் வயிற்றைப் பார்த்துக் கொண்டாள். அதன் சுற்றளவு கம்மியாயிருக்கிறாற் போல் தோன்றியது.

அவளால் நம்பவும் முடியவில்லை. நம்பாமலிருக்கவும் முடியவில்லை.

கிழவி அவள் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். தட்டுத் தடுமாறி, ''யாரும் இல்லாம, அனாதை மாதிரி கிடக்கிறேன் இங்கே. கடவுள் போல நீ வந்து காப்பாற்றினேம்மா...'' என்று முனகினாள்.

காந்திமதி யோசித்தாள். இந்தக் கிழவியைக் காப்பாற்றும்படி ஏதோவொரு சக்தி தன்னைப் பணித்திருக்

கிறது என்பது அவளுக்குப் புரிந்தது. அதிலே பலனும் விளைந்திருக்கிறது. இனியும் தற்கொலையைப் பற்றி எண்ணுவதில் அர்த்தமில்லை.

''வா, பாட்டி. போகலாம்'' என்று கிழவியை அழைத்துக் கொண்டு அரண்மனைக்குத் திரும்பி நடந்தாள்.

அடுத்த ஒரு வாரத்துக்குள் கிழவி தெம்புடன் நடமாடத் தொடங்கினாள். அது மட்டுமல்ல. காந்திமதியின் வயிறு நாளுக்கு நாள் சுருங்கிக் கொண்டே வந்து, கடைசியில் கல்யாணமாகாத இளம் பெண்ணுக்கு இருப்பதைப் போலச் சாதாரணமாகி விட்டது. மதறாசிலிருந்து வந்து பார்த்த டாக்டர், கர்ப்பத்தின் அறிகுறி துளிக்கூட இல்லையென்று சொல்லி விட்டார்.

தனது பேய்க் கர்ப்பம் நீங்கியதற்கும் இந்தக் கிழவிக்கும் சம்பந்தம் என்ன என்று ரொம்ப நாள் வரை காந்திமதிக்குப் புரியாமலிருந்தது. கடைசியில் அதுவும் ஒரு நாள் விளங்கியது.

''ரொம்ப வருஷங்களுக்கு முன்னாலே என் புருசன் இதே அரண்மனையில் தாம்மா வேலை செய்தான்'' என்றாள் கிழவி ஒரு நாள்.

''அவன் பெயர் என்ன?'' என்று கேட்டாள் காந்திமதி.

''சோமு'' என்று சொல்லிக் கண்ணைத் துடைத்துக் கொண்டாள் கிழவி.

காந்திமதிக்கு எல்லாம் விளங்கியது.

தன் வாழ்க்கையைப் பறித்ததற்காக ஜமீந்தாரின் குடும்பத்திடம் பழி தீர்த்துக் கொண்டு வந்த சோமு — அல்லது

அவன் ஆவி — தன் மனைவியைக் காப்பாற்றியதற்காகப் பரிகாரமும் செய்து விட்டது!

நரீஷ் கதையைச் சொல்லி முடிக்கவும் எங்கள் கட்டை வண்டி மந்திராலயத்தை அடையவும் சரியா யிருந்தது. சிறிய கிராமம். சின்னத் தெருக்கள். மைதானத் தில் ஒரே ஒரு பஸ் நின்றிருந்தது. இருநூறு முன்னூறு பேர் ஒரே சமயத்தில் அதற்குள் நுழையப் போராடிக் கொண்டிருந்தார்கள். சன்னல் பக்கமாகச் சிலர் ஏறிப் பஸ்ஸினுள் குதித்துக் கொண்டிருந்தார்கள். பெட்டிகளும் சாக்கு மூட்டைகளும் அந்தரத்தில் பறந்து கொண்டிருந்தன.

அந்த அமளியைப் பார்க்கையில் எனக்குக் குலை நடுக்கம் ஏற்பட்டது. ''நரீஷ், எப்படித்தான் நாம் திரும்பிப் போகப் போகிறோமோ! நினைக்கவே பயமாயிருக்கிறது'' என்றேன்.

''இதோ பார். எப்படியோ மந்திராலயத்துக்கு வந்தாகி விட்டது. திரும்புவது கடவுள் பொறுப்பு. இனி ராக வேந்திர சுவாமிகளைத் தவிர வேறு எந்த நினைப்பும் உன் மனசில் இருக்கக் கூடாது'' என்று நரீஷ் கண்டித்தான்.

''உண்மைதான். நான் எதற்காக இங்கே வந்திருக் கிறேனென்றால்...''

மறுபடியும் என்னை அவன் தடுத்தான். ''உன் கவலையை மனிதர்களிடம் சொல்லக் கூடாது. ராகவேந்திர சுவாமிகளிடம் மட்டும்தான் சொல்ல வேண்டும்.''

அப்போது பஸ்ஸைப் பிடிப்பதற்காக ஓர் ஆள் என்னைத் தள்ளி விட்டு ஓடினான். அவன் கையில் கத்தி ஏதாவது இருந்ததோ அல்லது நகம் அப்படிப்பட்டதோ

— என் முழங்கையில் ஒரு சிறு கீறல் ஏற்பட்டது. இரண்டு பொட்டு ரத்தத் துளி பளீரெனச் சிவந்தது. நான் அதையே வெறித்துப் பார்த்தேன்.

''பயப்படாதே. மனிதனால் ஏற்பட்ட கீறல்தான். பிசாசின் பல் பட்டு விடவில்லை'' என்று சொல்லி நரீஷ் தன் அடுத்த கதைக்குத் தாவினான்.

## இறக்காமல் இருக்க வழி

திடீரென்று ஏழெட்டு வருட காலத்திற்குள் கிடுகிடு வென முன்னேறியவர் தொழிலதிபர் சுப்புராமன். குற்றா லத்து அருவி முதுகில் தபதபவென்று அடிக்கிற மாதிரி அதிர்ஷ்டம் அவருடைய தலையிலும் முதுகிலும் படபட வென்று அறைந்து, பணத்தைக் கொட்டோ கொட்டென்று கொட்டியது. சிறு வயது முதல் அவரை அறிந்திருந்த வர்கள், என்ன பண்ணி இந்த ஆள் இப்படித் திடீர்க் கோடீசு வரனாக ஆனான் என்று பிரமித்து வாயடைத்து நின்றார்கள்.

அவர்கள் மட்டுமல்ல. சுப்புராமனே கூடத் தன் வளர்ச்சியைப் பற்றித் தானே ஆச்சரியப்பட்டார். வெற்றி யைத் தொடர்ந்து வெற்றிதான் வரும். வேறொன்றும் வராது. அந்த நியதிப்படி, அவர் ஆச்சரியப்பட்டுக் கொண் டிருக்கும்போதே அவருடைய சாம்ராஜ்யம் மேலும் பெரிதாயிற்று. நொடித்து போய், உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருந்த பல நிறுவனங்களும் தொழிற் சாலைகளும் அரை விலைக்கும் கால் விலைக்கும் அவ ருக்குச் சொந்தமாகி, அவருடைய பெயரைச் சம்பந்தப் படுத்திக் கொண்டதும் ஓகோ என்று துளிர் விட்டு வளர்ந்து உயர்ந்தன.

அவரை மானேஜிங் டைரக்டராகக் கொண்ட நிறுவனங்கள் அம்பத்தூரில் பாதியை அடைத்துக் கொண்டிருந்தன. நுங்கம்பாக்கத்திலும் ராஜா அண்ணாமலைபுரத்திலும் ஒரு டஜன் பங்களாக்களை வாங்கிப் போட்டிருந்தார். வெள்ளையும் கறுப்புமாகத் தன் அண்ணாநகர் மாளிகையில் நோட்டுக் கற்றைகளை அடைத்து வைத்தார். வைரமும் தங்கமுமாக மாட்டி, மனைவி பாக்கியலக்ஷ்மியின் எடையை இரு மடங்கு அதிகரிக்கச் செய்தார். குழந்தைகளுடன் வருடத்துக்கு நாலு தடவை ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கும் உல்லாசப் பிரயாணங்கள் சென்று வந்தார்.

எல்லாம் இந்த ஏழெட்டு வருட காலமாகத்தான். அதற்கு முன் அவர் படாத கஷ்டம் கிடையாது. நன்னிலம் அவர் சொந்த ஊர். ஓர் ஏழைப் புரோகிதரின் மூத்த பிள்ளை. அவருக்குக் கீழே தம்பியும் தங்கையுமாக ஏழு பேர் உண்டு. பாதி நாள் வெறும் தண்ணீர் கொடுத்துக் குழந்தைகளைத் தூங்கப் பண்ணுவாள் அவர் அம்மா.

'ஏண்டா இந்தப் பாவியின் வயிற்றில் வந்து பிறந்தீர்கள்?' என்று குழந்தைகளைக் கட்டிக் கொண்டு அழுது கண்ணீர் விடுவாள். அப்பா, தான் புரோகிதம் செய்யும் வீடுகளுக்கு, கல்யாணமானாலும் வேறொன்றானாலும், குழந்தைகளை அழைத்துக் கொண்டு போவார்.

'என்னடா சேஷா, உன் பட்டாளத்தை அழைத்துக் கொண்டு வந்து விட்டாயாக்கும்!' என்று மற்றவர்கள் செய்யும் பரிகாசத்தைப் பொறுத்துக் கொண்டு ஓசிச் சாப்பாடு சாப்பிட வைப்பார். அவமானம் தாங்காமல் சுப்புராமன் எவ்வளவோ சமயங்களில் அழுது கொண்டே சாப்பிட்டிருக்கிறார்.

ஒரு வழியாய்ப் படிப்பு முடிந்து, சென்னை வந்து ஒரு கார் ரிப்பேர் கடையில் வேலைக்கு அமர்ந்தார். பாக்கியலக்ஷ்மியை மணந்து கொண்டார். வேலையை விட்டு விட்டு ஸ்பேர் பார்ட்டுகள் கடை வைத்தார். அது நஷ்டம். பிறகு ரேடியோ கடை வைத்தார். மறுபடி நஷ்டம். கொத்தவால் சாவடியில் கமிஷன் ஏஜெண்டாக ஆனார். கொஞ்சம் தலை தூக்குகிற மாதிரி இருந்து அதிலும் நஷ்டம். இப்படியே நாற்பத்தெட்டு வயது வரை வறுமையும் பசியும் பட்டினியும் கடனும் கஷ்டமுமாக வாழ்க்கையை ஓட்டினார்.

பிறகுதான் ஒரு சிறிய பிளாஸ்டிக் ஏஜென்ஸி சூடு பிடித்தது. முன்னேற ஆரம்பித்தார். அதன் பிறகு அவர் திரும்பிப் பார்க்கவேயில்லை. வெற்றி, வெற்றி, வெற்றி தான்.

இப்போது சுப்புராமனுக்கு வயது ஐம்பத்தாறு. வெற்றி ஏணியின் உச்சப் படிக்கு வந்து விட்டார். அடுத்து என்ன என்று அவரே வியப்புடன் எதிர்பார்த்துக் கொண் டிருந்த சமயம் —

மனித வாழ்க்கையின் கசப்பான உண்மை அவரை உலுக்கிக் குலுக்கியது.

நண்பர்களுடன் கிளப்பில் பிலியர்ட்ஸ் ஆடிக் கொண்டிருந்தார். திடீரென மார்பைப் பிடித்துக் கொண் டார். கீழே விழுந்தார். நூறு டன் இரும்புக் குண்டினால் இருதயத்தை யாரோ அடிக்கிற மாதிரி வலியினால் துடித்துப் போய் மயக்கமடைந்தார்.

சென்னையிலேயே தலை சிறந்த நர்ஸிங்ஹோமில் அவர் கண் விழித்த போது, சென்னையிலேயே தலைசிறந்த

ஹார்ட் ஸ்பெஷலிஸ்ட் அவரை நோக்கிப் புன்னகை செய்து கொண்டிருந்தார்.

''ஹார்ட் அட்டாக் ஏற்பட்டு, நல்ல வேளை பிழைத்து விட்டீர்கள். ஆனால் இன்னும் ஆறு மாத காலம் உங்கள் வேலைகளை நிறுத்தி வைத்துக் கொள்ள வேண்டும். படுக்கையில் கட்டாய ரெஸ்ட்'' என்று எச்சரித்தார் டாக்டர்.

தன் பிஸினஸ் அலுவல்களைப் பிள்ளைகளிடம் ஒப்படைத்தார் சுப்புராமன். மனைவியும் வேலையாட்களும் நர்ஸ்களும் பணிவிடை செய்ய, வேண்டா வெறுப்பாக ஓய்வு எடுத்துக் கொண்டார்.

கை கால்களை அசைக்காமல் படுத்திருந்தாரே தவிர அவருடைய மனம் ஓய்வில்லாமல் சிந்தித்துக் கொண்டிருந்தது.

இரண்டாவது அட்டாக்கோ, மூன்றாவது அட்டாக்கோ வந்தால் தன் வாழ்வு அவ்வளவுதான் என்பது அவருக்குத் தெரிந்திருந்தது. 'என்ன அநியாயம் இது!' என்று விதியைச் சபித்தார். கிட்டத்தட்ட ஐம்பது வருட காலம் சோற்றுக்கும் துணிக்கும் லாட்டரி அடித்தாயிற்று. சென்ற ஐந்து வருடமாகத்தான் சுகங்களைத் துய்க்க ஆரம்பித்திருக்கிறார். அதற்குள் முற்றுப்புள்ளியா! அக்கிரமம். இன்னும் பத்து வருடம், இருபது வருடம் உயிரோடு இருக்க முடியாதா என்று சிந்திக்க ஆரம்பித்தவர், ஏன், இறக்காமலே இருக்க முடியாதா என்ற ஆராய்ச்சியில் இறங்கினார். மனிதனாகப் பிறந்தவன் சாகாமல் இருப்பதற்கு வழி இருக்குமா என்று எண்ணலானார்.

அதற்கான புத்தகங்களையும் ஓலைச் சுவடிகளையும் வரவழைத்துப் படிக்கத் தொடங்கினார்.



சுப்புராமனின் மூன்று பிள்ளைகளில் மூத்தவனும் கடைசிப் பையனும் அவரோடு வசித்து, அவருடைய பிஸினஸ்களைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். நடுப் பிள்ளையான மாதவன் ஆரம்பத்தில் கொஞ்ச நாள் அவருடன் இருந்தான். போகப் போக அப்பாவின் நடவடிக்கைகள் அவனுக்குப் பிடிக்கவில்லை. இப்படிச் செய்வது நியாயமில்லை, அப்படிப் பண்ணினால் இன்கம்டாக்ஸை ஏமாற்றுவதாகும் என்றெல்லாம் நேர்மையான புத்திமதிகளைச் சொல்லத் தொடங்கினான். முன்னேற வேண்டுமானால் எந்தக் குறுக்கு வழியையும் பின்பற்றலாம் என்ற கொள்கையுடைய சுப்புராமன், பிள்ளையா பிஸினஸா என்று யோசித்தார். பின்னதே முக்கியம் என்ற முடிவுக்கு வந்தவராக, மாதவனுக்கு விடை கொடுத்தனுப்பி விட்டார்.

மாதவன் அவன் மனைவியுடனும் மூன்று வயதுக் குழந்தை பாபுவுடனும் தாம்பரத்தில் தனியே வசித்துக் கொண்டிருந்தான். வண்டலூர் கார் தொழிற்சாலையில் அவனுக்குச் சுமாரான வேலை கிடைத்திருந்தது. தன் மானம் முக்கியம் என்று கருதியவனாகையால் அசௌகரியங்களை அவன் அலட்சியம் செய்தான். அவன் மனைவி கல்பனாவும் அவனுக்கு ஏற்றவளாகவே குடித்தனம் நடத்தினாள்.

சுப்புராமன் திடீரென்று ஹார்ட் அட்டாக்கில் படுத்தவுடன் அவனுக்குச் செய்தி வந்தது. தந்தையிடமிருந்து எட்டி நிற்க வேண்டுமென நினைத்தவனே தவிர, அவனுக்குக் குத்துப் பழி வெட்டுப் பழியான குரோதம் இருக்கவில்லை. அம்மா பாக்கியலக்ஷ்மியும் அவனைப் பதைப்புடன்

கூப்பிட்டனுப்பியதால், சரி பார்த்து விட்டு வரலாம் என்று சுப்புராமனின் பங்களாவுக்கு வந்து சேர்ந்தான். ஆனால் அவனுடைய நல்ல மனசை யாரும் புரிந்து கொள்ள வில்லை. தகப்பனாருக்கு ஒன்று கிடக்க ஒன்று நேர்ந்தால் சொத்தில் பங்கு இல்லாமல் போய்விடப் போகிறதே என்கிற எச்சரிக்கையினால்தான் முன்கூட்டியே வந்து ஒட்டிக் கொள்கிறான் என்று எண்ணினார்கள். சுப்புராமன்கூட அப்படித்தான் நினைத்தார்.

எல்லாரும் ஏனோதானோ என்று பழகியதால் இன்னும் இரண்டொரு நாளில் புறப்பட்டு விடலாம் என்று மாதவன் தீர்மானித்திருந்தான். அந்தச் சமயத்தில்தான் எதிர்பாராத ஒன்று நடந்தது.

சுப்புராமனும் உலக வாழ்க்கையை முடித்துக் கொள்ள கடுகத்தனையும் விரும்பவில்லை. அனுபவிக்க வேண்டி யது இன்னும் எவ்வளவோ பாக்கி இருக்கையில் இறந்து விடக் கூடாது என்று வெகு ஆசையாக உயிரைப் பிடித்துக் கொண்டிருந்தார். சொல்லிக் கொண்டு வருபவனின் பெயர் காலனல்ல என்பது புரியாமல் ஏதேதோ புத்தகங்களை யும் ஏடுகளையும் சுவடிகளையும் படித்து, சாகா வரம் பெற வழி இருக்கிறதா என்று ஆராய்ந்து கொண்டிருந் தார். சிறிது சிறிதாக அவருடைய படுக்கையறையில் அல மாரி நிறையப் புத்தகங்களும் பெட்டிகள் திணற நூல் களும் இடத்தை அடைத்துக் கொள்ளத் தொடங்கின.

'சிரஞ்சீவியாகத் திகழ வழி' என்ற புத்தகத்தை அன்று மாலை அவர் படித்துக் கொண்டிருந்தார்.

''...இலவங்கப் பட்டையை அரைத்து சனிக்கிழமை யன்றும் புதன்கிழமையன்றும் உடம்பு பூரா பூசிக்

கொள்ளவும்... மஞ்சள் கிழங்கு, சிவப்பு ரோஜாவின் இதழ்கள், சந்தன மரத்தின் வேர், படிகாரம் ஆகிய வற்றைக் கலந்து, ரோஜா எண்ணெயும் வெள்ளை மெழுகும் கலந்த திரவத்தில் கொதிக்க வைத்து, தினம் அதை நெற்றியில் பற்றுப் போட்டுக் கொள்ளவும். இந்தப் பற்று பகல் பூரா ஈயப் பாத்திரத்தில் வைத்திருக்கப்பட வேண் டும். பண்ணையில் பதினாறு கோழிக் குஞ்சுகளை வளர்த்து வரவும். முதலில் அவைகளுக்கு இனிப்பு நீர் மட்டுமே கொடுத்து வரவும். பட்டினியில் இளைத்து, கிட்டத்தட்டச் சாகும் நிலைக்கு அவை வந்த பின்னர், புளித்த காடியில் கோதுமையும் பட்டாணியும் கலந்து வேக வைத்து இரண்டு மாத காலத்துக்கு அவைகளுக்கு உணவு கொடுக்கவும். பிறகு தினத்துக்கு ஒன்றாகப் பதினாறு கோழிக் குஞ்சு களையும் தக்கபடி சமைத்துத் தின்று வந்தால்...''

இதைப் படித்துக் கொண்டிருந்த போது, சுப்புராம னுக்குத் திடீரென கண்கள் இருண்டு வருகிற மாதிரி இருந்தது. கண்களைத் தேய்த்து விட்டுக் கொண்டார். புத்த கத்தின் எழுத்துக்கள் மேலும் மேலும் மங்கத் தொடங் கின. தலையைச் சுற்றுகிறாற் போல் இருந்தது. மார்பில் நம நமவென்று ஒரு வலி புறப்படுவதை உணர்ந்தார்.

தலை கிறுகிறுப்பாகவோ மார்பு வேதனையாகவோ இருப்பதாகத் தோன்றினால் உடனே சாப்பிடும்படி டாக்டர் ஒரு காப்ஸ்யூல் கொடுத்திருந்தார். அதில் ஒன்றை எப் போதும் சட்டைப் பையிலேயே வைத்திருப்பது சுப்பு ராமனின் வழக்கம். சட்டெனப் பையைப் பார்த்தார். காப்ஸ்யூஸ் இருக்கவில்லை. மேஜை மீது காப்ஸ்யூல் புட்டி இருந்தது. திரும்பினார்.

மேஜைக்கும் அவர் இருந்த இடத்தக்கும் இருபதடி தூரம் இருந்தது. யாரையாவது கூப்பிட்டு எடுத்துத் தரச் சொல்லலாம். ஆனால் உரத்துக் கூவ முடியாமல் நெஞ்சை மரண வலி வலித்தது. வாயைத் திறந்த போது வெறும் காற்று மட்டுமே வெளி வந்தது. எழுந்து நிற்க முடிய வில்லை. கால்கள் இரும்புக் குண்டாகக் கனத்தன. பெரும் பிரயாசை செய்து ஒவ்வொரு காலையும் இழுத்து இழுத்து, தவழ்கிற மாதிரி மேஜையை நோக்கி நகர்ந்தார்.

அந்தச் சமயம் பார்த்து, அவருடைய பேரன் பாபு — மாதவனின் மூன்று வயதுக் குழந்தை — உள்ளே வந்தது. ''தாத்தா! என்ன தாத்தா?'' என்று குனிந்து அவர் முகத்தை அதிசயமாய்ப் பார்த்தது.

தாத்தாவின் உயிர் வினாடிக்கு வினாடி தேய்ந்து கொண்டிருக்கிறது என்பது அந்தக் குழந்தைக்கு எப்படித் தெரியும்? குனிந்து தவழ்ந்திருக்கும் தாத்தா மீது யானை விளையாட்டு விளையாடுகிற மாதிரி முதுகில் ஏறி அவரை மேலும் மூச்சுத் திணறச் செய்தது. அவர் முனகவே கீழே இறங்கியது. நாற்காலியில் ஏறி, மேஜை மீது தாவிக் கொண்டது.

திணறித் திணறிச் சுப்புராமன் மேஜையை அங்குலம் அங்குலமாக நெருங்கிக் கொண்டிருந்தார். அவர் கண்ணி லிருந்தும் மூக்கிலிருந்தும் வாயிலிருந்தும் நீர் ஒழுகி வழிந்தது.

அதே சமயம் மேஜை மீது ஏறிக் கொண்ட குழந்தை யின் கண்ணில் அந்தக் காப்ஸ்யூஸ் புட்டி பட்டது. பளபள வென்ற அதன் லேபிள் ஆசையைத் தூண்ட, கையிலெடுத்து, மூடியை வாயினால் கடித்தது.

சுப்புராமனுக்கு நினைவு தப்பிக் கொண்டே வந்தது. இருந்தாலும் பேரனின் கையில் அந்தப் புட்டி இருப் பதை மட்டும் உணர முடிந்தது. ''கொ... கொடு அதை ...'' என்று கையை நீட்டினார். தெய்வம்தான் இந்த வேளை பார்த்துக் குழந்தையை அனுப்பி வைத்திருக்கிறது ...

ஆனால், மூன்று வயதுக் குழந்தைகளுக்கே உரிய விளையாட்டுப் புத்தியும் பிடிவாதமும் பாபுவினிடம் பூரணமாக இருந்தன. ''மாட்டேன்... கொடுக்க மாட் டேன்...'' என்று முதுகின் பின்னால் மறைத்துக் கொண் டது மாத்திரைப் புட்டியை.

சுப்புராமன் அதிர்ச்சியுற்றார். குழந்தையை ஓடிப் பிடித்துப் புட்டியைப் பறிக்கும் நிலையில் அவர் இல் லையே! மேஜையின் கால்களைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு எழுந்திருக்க முயன்றார். முடியவில்லை. குழந்தையின் கையிலிருந்த புட்டியை நோக்கி அவர் கண்கள் கெஞ்சின. மார்புக்குள் சுவாசம் அடைத்துக் கொண்டு வெளியே வர மறுத்தது.

பேரக் குழந்தை அவர் கண்களுக்கு எமனாகத் தோன்றியது. சிரஞ்சீவியாக வாழ வேண்டுமென்று அவர் பட்ட வெறியென்ன, அரை வாழ்வு கூட வாழ விடாமல் இந்தக் குழந்தை செய்து விட்ட சதி என்ன! அவர் கை களில் மட்டும் சக்தி இருந்தால் அதன் கழுத்தை நெரித்துக் கொலை செய்திருப்பார். அப்படிப்பட்ட ஆங்கார உணர்வு அவர் நெஞ்சில் கொந்தளித்தது. பல்லைக் கடித்தார். விழி களை உருட்டினார். உதட்டைக் கடித்தார். மூச்சு முட்டி யது. நெஞ்சு அடைத்தது.

''கொடு! கொடு...!'' என்று பலமனைத்தையும் திரட்டி ஒரு கூச்சல் போட்டார் — போட நினைத்தார். முடியவில்லை. பேரப் பிள்ளையின் மீது ஆத்திரம் அப் படியே மனத்தில் நிற்க, கண்களில் கொலை வெறி அப் படியே மின்ன —

கீழே சாய்ந்தார்.

அப்புறம்தான் பாபுவுக்குத் தான் ஏதோ தப்பு செய்து விட்டோம் என்று புரிந்தது. தாத்தா திடீரென்று கீழே விழுந்ததும், அதுவும் தடாலென்று புட்டியைக் கீழே போட்டது. கண்ணாடிப் புட்டி தரையில் மோதி, சிவப்பு வண்ணக் காப்ஸ்யூல்கள் அறையெங்கும் சிதறின. குழந்தை பயந்து அழுது கொண்டே வெளியே ஓடிவிட்டது.

கால்மணி நேரம் கழித்து அவருக்குக் காபி எடுத்து வந்த சமையல்காரன்தான் முதல் முதல் அந்த அலங்கோல நிலையைக் கண்டான். அதற்குள் எல்லாம் முடிந்து விட் டது.

நண்பர்களும் உறவினர்களும் நூற்றுக்கணக்கில் குழுமி யிருக்க, சுப்புராமனைத் தகனம் செய்தார்கள். மருந்துப் புட்டியை எடுத்துக் காப்ஸ்யூலை விழுங்குவதற்குள் அவர் இறக்க நேரிட்ட பரிதாபத்தைப் பற்றிப் பேசி ஆச்சரியப் பட்டார்கள்.

தந்தையின் சடங்குகள் முடிகிற வரை, பத்துப் பதி னைந்து நாட்களுக்கு மாதவன் தன் மனைவி, குழந்தை யுடன் அங்கே தங்கியிருந்தான். இப்போது எல்லாரும் அவ னிடம் பிரியமாகவே இருந்தார்கள். இருந்தாலும் அவன் அங்கே நிரந்தரமாகத் தங்கியிருக்கப் பிரியப்படவில்லை.

''நான் புறப்படலாம் என்றிருக்கிறேன் அம்மா'' என்று அவன் விடைபெற்ற போது பாக்கியலக்ஷ்மி அழுது விட்டாள்.

''உன் அப்பா போனது முதல் எனக்கு என்னவோ பயமாகவே இருக்கிறது, மாதவா. வீடு நிறைய மனிதர்கள் இருந்தால்கூட எங்கேயோ ரொம்ப இருட்டான இடத்தில் தன்னந்தனியாய் இருக்கிற மாதிரி திக் திக்கென்று இருக்கிறது. என்னை விட்டு விட்டு எங்கேயும் போகாதேப்பா'' என்று கெஞ்சினாள்.

''நான் வெளியூருக்காம்மா போகிறேன்? இதே மெட்றாசில்தானே இருப்பேன்? வாரம் ஒரு முறை வருகிறேன். பயப்படாமல் இரு'' என்று அவன் சொன்னது பாக்கியலக்ஷ்மிக்குச் சமாதானமாக இருக்கவில்லை. ''ஏம்மா, நீ சொல்லக் கூடாதா அவனுக்கு?'' என்று மருமகளின் கையைப் பிடித்துக் கொண்டாள்.

கல்பனாவுக்கும் பாவமாயிருந்தது. ஏற்கெனவே இவ்வளவு பெரிய பங்களாவையும் வசதிகளையும் ஆள் படை அதிகாரங்களையும் சென்ற பத்துப் பதினைந்து நாட்களாகப் பழகிப் போனதில், இது நமக்கு உரிமை உள்ள இடம்தானே என்ற எண்ணம் அவள் மனத்தில் உதித்திருந்தது. ''அம்மா இவ்வளவு தூரம் சொல்கிறப்போ இருந்துதான் பார்ப்போமே?'' என்றாள்.

ஒரு பெருமூச்சுடன் இணங்கினான் மாதவன். ''நீயே ஏன் இப்படிச் சொன்னோம் என்று ஒரு நாள் வருத்தப்படப் போகிறாய் பார்!'' என்று மட்டுமே சொல்லி விட்டு, பெட்டி படுக்கைகளை உள்ளே கொண்டு போய் வைத்தான்.

சகோதரர்கள் தன்னிடம் நட்புறவாகவே இருப்பது தெரிந்த போதிலும் மாதவன் வேலையைவிட்டு விட வில்லை. பங்களாவில் வசித்தபடியே தன்னுடைய வண்ட லூர் உத்தியோகத்துக்குத் தொடர்ந்து போய் வந்து கொண் டிருந்தான்.

ஒரு மாதம் ஓடியது.

தனக்குள் என்னவோ திக்திக்கென்று இருப்பதாகப் பாக்கியலக்ஷ்மி கூறியது வெறும் அலங்கார வார்த்தை யல்ல. உண்மையிலேயே நாளுக்கு நாள் அவள் இருதயத் தில் இனம் தெரியாத பீதியொன்று உருவாயிற்று. சுவாமி படங்கள் மாட்டி வைத்திருக்கும் பூஜையறையொன்றைத் தவிர வேறு எங்கு போனாலும் — தனியாகப் படித்துக் கொண்டிருந்தாலும் சரி, பேரக் குழந்தைகளுடன் விளை யாடிக் கொண்டிருந்தாலும் சரி — வேறு யாரோ ஒருத்தர் தன் அருகிலே நிற்கிற மாதிரியான உணர்ச்சி ஏற்படலா யிற்று. எங்கே போனாலும் அந்த உருவமில்லாத ஒன்று தன் பின்னாலேயே வருகிற மாதிரி தோன்றியது.

கணவனின் அறைக்குள் நுழைகிற போதெல்லாம் அந்த உணர்வு பலமடைந்து அவளை மூச்சுத் திணற அழுத்து கிற மாதிரி இருந்தது. அர்த்தமில்லாத இந்த உணர்ச்சி களைப் பற்றி யாரிடம் சொல்வது? என்னவென்று சொல் வது? தனக்குள் தவித்துக் கொண்டிருந்த போது, ஒரு நாள் —

இரவு அரைத் தூக்கமும் கால் தூக்கமுமாக அவள் புரண்டு கொண்டிருந்தாள். அருகில் யாரோ நடந்து போகிற மாதிரி சத்தம் கேட்டது. கண்ணை அகல விழித்துப் பார்த் தாள். எதையும் காணவில்லை. ஏதோ பிரமை என்

றெண்ணியவளாகத் திரும்பப் படுக்கப் போனவள், சுவரைப் பார்த்துத் திடுக்கிட்டாள்.

ஒரு மனித உருவம் நடந்து சென்றால் விளக்கு வெளிச்சத்தில் எப்படி நிழல் விழுமோ, அது போலச் சுவரில் ஒரு நிழல் நகர்ந்தது. சரேலென இந்தப் பக்கம் பார்த்தாள். எந்த உருவமும் இல்லை. நிழல் மட்டும் நகர்ந்தது. கதவு வரை சென்று அறைக்கு வெளியே போய் விட்ட மாதிரி மறைந்து விட்டது. மார்பு படபடக்க எழுந்து பெரிய விளக்கைப் போட்டாள். எதுவும் தெரியவில்லை. அறைக்கு வெளியே எட்டிப் பார்த்தாள். எவரையும் காணோம்.

தலைமாட்டில் வைத்திருந்த கூஜாவிலிருந்து மடக் மடக்கென்று நாலு வாய் தண்ணீர் குடித்து விட்டுத் திரும்பப் படுத்தாள். மின்சார விசிறி முழு வேகமாய்ச் சுழன்ற போதிலும், தொப்பலாய் உடம்பு நனைந்திருந்தது. வியர்வையில் பலவந்தமாய்க் கண்களை இறுக்கி மூடிக் கொண்ட அதே வினாடி —

சமையலறையில் ஒரு டம்ளர் விழுகிற சத்தம் கேட்டது. இவ்வளவு காற்றும் வெளிச்சமுமாய் இருக்கிற பங்களாவில்கூட எலி விளையாடுகிறதே என்று அவள் நினைத்துக் கொண்டிருக்கும் போதே தொடர்ந்து இன்னொரு பாத்திரம் விழுகிற சத்தம் கேட்டது.

மறுபடியும் எழுந்து உட்கார்ந்தாள். இன்னொரு பாத்திரம், இன்னுமொரு பாத்திரம் - மற்றுமொன்று, அடுத்து ஒன்று - கடகடகடவென்று மேலும் மேலும் பெரிதான பித்தளைப் பாத்திரங்கள், எவர்சில்வர் சாமான்கள், இரும்புப் பொருள்கள் -

சமையலறையில் ஒரு பூகம்பமே நிகழ்வது போன்ற ஓசைகள் அவள் காதைச் செவிடு படுத்தின. உலோகம் தரையில் மோதிய பின்னர் ஏற்படும் ரீங்காரம் அடுத் தடுத்துத் தொடர்ந்து நீண்ட விசில் போலக் கேட்டது. நள்ளிரவின் நிசப்தத்துக்கு நடுவே இந்தப் பயங்கர ஓசையைக் கேட்டும் ஏன் ஒருவர்கூடத் தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்ளவில்லை என்று பாக்கியலக்ஷ்மிக்குத் திகைப்பேற்பட்டது.

சத்தம் வரவரப் பொறுக்க முடியாமல் போகவே எழுந்து வெளியே வந்தாள். அவள் ஒருத்தியைத் தவிர வீடு முழுவதும் நித்திரையில் ஆழ்ந்திருந்தது. வழியெல் லாம் விளக்குகளைப் போட்டபடியே சமையல்கட்டை நெருங்கினாள். அறைக்குக் கிட்டத்தில் செல்லச் செல்லப் பாத்திரங்கள் கீழே எறியப்படுகிற ஓசை பன்மடங்கு விசுவ ரூபம் எடுத்தது. இரு காதுகளையும் பொத்திக் கொண்டு அறை வாசலை அடைந்தாள்.

சமையல்காரன் நிம்மதியாகப் படுத்துக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தான். ''பரசு! ஏய் பரசு!'' என்று அவனைத் தலையணையால் படபடவென்று தட்டினாள் பாக்கியலக்ஷ்மி.

''என்ன... என்னம்மா...'' என்று வாரிச் சுருட்டிக் கொண்டு அவன் எழுந்திருந்தான். ஆனால் உள்ளிருந்து வந்த இரைச்சலில் அவன் சொல்வது அவள் காதுக்குக் கேட்கவில்லை. ''இவ்வளவு சத்தத்துக்கு நடுவே எப்ப டிடா நீ தூங்குகிறாய்?'' என்றாள்.

''சத்தமா... என்ன சத்தம்?'' எழுந்து கண்களைத் தேய்த்து விட்டுக் கொண்டான் அவன்.

அதற்குள் அவனைத் தள்ளிக் கொண்டு சென்று சமையலறையின் விளக்கைப் போட்டாள். உள்ளே பார்த்தாள்.

கப்பென்று ஓசைகள் நின்று விட்டன. அது மட்டு மல்ல. கீழே தரையில் ஒரு சின்ன ஸ்பூன்கூட விழுந் திருக்கவில்லை. எல்லாம் ஷெல்பில் பளீரென இருந்தன. படுக்கு முன் சமையல்காரன் கழுவிவிட்ட ஈரம் இன்னும் முழுதும் உலராமல் அங்கங்கே சிறு திட்டுக்களுடன் அமைதியின் வடிவாகத் திகழ்ந்தது அறை. பாக்கிய லக்ஷ்மிக்குத் திகைப்பினால் மார்பை அடைத்தது.

''நீ... நீ எல்லாவற்றையும் திரும்ப எடுத்து வைத் தாயா என்ன...'' என்று திணறினாள்.

அவன் விழித்தான். ''எதை... எதைத் திரும்ப வைச்சியான்னு கேட்கிறீங்க?''

''பாத்திரங்களை... ஏகப்பட்டது... கடமுடாவென்று விழுந்ததே...''

விளக்குகள் போடப்பட்டதால் தூக்கம் விழித்து விட்ட மாதவனும் அவன் மனைவியும் எழுந்து வந்தார்கள். மாதவனின் தோளில் குழந்தை பாபு இருந்தான், அரைத் தூக்கத்துடன்.

''என்னம்மா? என்ன விஷயம்? ஏன் எழுந்து வந்தீங்க?'' என்றான் மாதவன்.

பாக்கியலக்ஷ்மிக்குச் சொல்லத் தெரியவில்லை. சமையல்காரன் முந்திக் கொண்டு, ''என்னமோ பாத்தி ரங்கள் கீழே விழுந்ததே, திருப்பி எடுத்து வைத்தாயான்னு கேட்கிறாங்க... எதுவும் விழவில்லை. நான் தூங்கிக்கிட்டு இருந்தேன்...'' என்றான்.

*தாயின் தோளை மெல்ல அணைத்துக் கொண்டு திருப்பி அழைத்துச் சென்றான் மாதவன். ''அப்பா போன திலிருந்து நீங்க ரொம்பப் பயந்த மாதிரி ஆகிட்டீங்க, அம்மா. நான் லீவு எடுக்கிறேன். கொஞ்ச நாள் வெளி யூருக்குப் போய் விட்டு வரலாம்...''*

*''இல்லை, இல்லை. பயம் இல்லை. நிஜமாகவே சத்தம் கேட்டது. பெரிய பெரிய பாத்திரங்கள் அடுத்தடுத்து விழுந்து... அப்பப்பா! என்ன ஓசை!'' இரண்டு காதுகளை யும் திகிலுடன் பொத்திக் கொண்டாள் பாக்கியலக்ஷ்மி. தன்னை இவர்கள் நம்ப மறுக்கிறார்களே என்ற கோபத் தில் உரக்கக் கத்தினாள். அந்தச் சத்தம் கேட்டு மற்றப் பிள்ளைகளும் மருமகள்களும் எழுந்து வந்தார்கள். எல்லா ருக்கும் விளக்கிச் சொல்வதிலும் மறுத்துச் சொல்வதி லும் அவள் பதற்றம் அதிகரித்தது. மேலும் மேலும் ஹிஸ்டீரிகலாகப் பேசலானாள்.*

*பொழுது விடிந்ததும் டாக்டர் வந்து பார்த்து 'ஸெடேஷ னில் இருக்கட்டும்' என்று கூறித் தூக்க மாத்திரை தந்தார்.*

*அந்த வாரத்தின் கடைசியில் பாக்கியலக்ஷ்மி அம்மாள் அரை உயிராக ஆகிவிட்டாள். கண்கள் பஞ்சடைந்து முகம் வெளுத்துப் போயிற்று. யாரோ அங்குமிங்கும் போகிறவர் களைக் கவனிக்கிற மாதிரி அவள் விழிகள் பலவீனமாக அசைந்து கொண்டிருந்தன. ஒரு வேலைக்காரி அவள் கூடவே துணைக்குப் படுத்திருந்த போதிலும் அவள் பேச்சில் ஒரு மிரட்சியும் துன்பமும் தென்படலாயின. பேரக் குழந்தைகள் அவளிடம் நெருங்கி வரப் பயப் பட்டன. ஒரு நாள் பாபு மட்டும் மெதுவே வந்து அவள் மடியில் உட்கார்ந்தான். மறு கணமே யாரோ அவனைப்*

பிடித்து இழுத்துத் தள்ளிய மாதிரி வெளியே விழுந்தான். ''பாட்டி பிடிச்சுத் தள்ளிட்டாங்க...'' என்று அவன் கண்ணைக் கசக்கிக் கொண்டு அழுத போது மாதவனும் அவன் மனைவியும் திகைத்தார்கள். ''நான் தள்ளவில்லை... தள்ளவில்லை...'' என்று பாக்கியலக்ஷ்மி எவ்வளவு சொல்லி யும் அவர்களால் நம்ப முடியவில்லை.

அன்று வேலைக்காரி சிறிது நேரம் வெளியே போயிருந்தாள். மாலை மங்கி இருள் பிரவேசித்துக் கொண் டிருந்த நேரம். என்ன தோன்றியதோ பாக்கியலக்ஷ்மி தன் கணவனின் அறைக்குச் சென்றாள். சுப்புராமன் கடைசி யாக இருந்த போது எப்படி இருந்ததோ அப்படியே அந்த அறையை வைத்திருந்தார்கள். சில்லென்று காற்று வீச, அமானுஷ்யமான மௌனம் நிலவ, அலமாரிகளில் வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங்களை வெறித்துப் பார்த்தபடி நின்றிருந்தாள் பாக்கியலக்ஷ்மி. அவள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே, உயரத்தில் இருந்த ஒரு பெட்டி தானாக அசைந்தது. நகர்ந்தது. தடாலென்று கீழே விழுந்து, மூடி திறந்து, அதனுள்ளிருந்து பல புத்த கங்கள் அறையெங்கும் சிதறின.

அவள் நடுக்கத்துடன் அந்தப் பெட்டியை நெருங்கி னாள். கண்கள் இருள, அந்தப் புத்தகங்களை ஒவ்வொன் றாய்ப் பார்த்தாள். சாகாமலிருப்பது எப்படி - இறப்புக்கு மறுப்பு - சவப் பெட்டிக்குள் ஜீவிதம் - மரணத்தை வெல்லு வோம் -

இப்படியே பல தலைப்பில் பல புத்தகங்கள். அவை களைப் புரட்டுகையிலேயே தலை கிறுகிறுத்தது. கீழே சாய்ந்தாள்.

வெகு நேரம் கழித்து அவள் கண்ணைத் திறந்த போது உற்றாரும் உறவினரும் அவளைச் சுற்றிக் கூடியிருந்தனர். மாதவன் தன் மடியில் அவள் தலையை வைத்துக் கொண்டு, ''என்னம்மா... என்ன ஆச்சு? எதற்காக உங்கள் ரூமை விட்டு இங்கே வந்தீர்கள்?'' என்று கேட்டான்.

''மாதவா... இனிமேல் நான் அதிக நாளைக்கு இருக்க மாட்டேன்...'' என்றாள் பாக்கியலக்ஷ்மி. ஆனால் அவளுடைய குரலில் பெண்மையின் மென்மை தெரிய வில்லை. கரகரத்த ஆண் குரலாக இருந்தது. பலவீனத் தால் அப்படி இருக்கிறது என்று எண்ணிய மாதவன், ''கண்டபடி பேசாதீங்க அம்மா. உங்களுக்கு ஒன்றும் நேராது...'' என்றான்.

''எனக்காக ஒன்று செய்'' என்றாள் பாக்கியலக்ஷ்மி.

''என்ன செய்யணும்... சொல்லுங்கம்மா...''

''நான் செத்துப் போனதும் என்னைத் தகனம் செய்யக் கூடாது. புதைத்துவிடு...'' என்றாள் அவள்.

## 17

சுற்றியிருந்தவர்களுக்கு ஒன்றும் புரிய வில்லை. 'என்னைத் தகனம் செய்ய வேண்டாம், புதைத்து விடு' என்று எதற்காகச் சொல்கிறாள் பாக்கியலக்ஷ்மி? அதையும் அவள்தான் சொல்கிறாளா? அது அவள் குரல்தானா?

மாதவன் குனிந்து, அம்மாவின் தலையை மெதுவே வருடியபடி, ''என்னம்மா அசட்டுப் பிசட்டென்று பேச றீங்க?'' என்று மறுபடியும் கேட்டான்.

பாக்கியலக்ஷ்மியின் கண்கள் மேலே மேலே செருகிக் கொண்டன. அவளால் தொடர்ந்து பேச முடியவில்லை.

மாதவனின் சகோதரர்களும் அண்ணிகளும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை.

சில நிமிடங்களுக்கெல்லாம் டாக்டர் வந்து பரி சோதித்தார். ஊசி போட்டார். கொஞ்ச நாள் ஓய்வு எடுத்துக் கொண்டால் சரியாகக் கூடுமென்றும், ஆனால் வயதாகி விட்டதால் எதையும் நிச்சயமாகச் சொல்ல முடியா தென்றும் தெரிவித்து விட்டுப் போனார்.

மாதவனும் கல்பனாவும் தாங்கள் திரும்பிச் செல்லும் எண்ணத்தை மேலும் கொஞ்ச நாள் ஒத்திப் போட்டார் கள். பாக்கியலக்ஷ்மி பாதி நினைவும் பாதி மயக்கமு மாகப் படுத்திருந்தாள். திடீர் திடீரென்று யாரோ வருவது போலவும் அவளுடன் பேசுவது போலவும் அடிக்கடி அவளுக்குப் பிரமைகள் எழுந்தன. சில ராத்திரிகளில் திடீ ரென்று வீரிட்டாள்.

ஒரு நாள், ''பாக்கியலக்ஷ்மி, நான் சொல்லித் தந்த படியே சொன்னாய். ரொம்ப கரெக்ட்'' என்று யாரோ தன் னிடம் சொல்வது போலிருந்தது அவளுக்கு.

''யார்... யார் நீ?'' என்று கத்தினாள். நடு ராத்திரி நேரம். பங்களா மொத்தத்திலிருந்தும் அங்கங்கே தூங்கிக் கொண்டிருந்தவர்கள் வாரிச் சுருட்டிக் கொண்டு ஓடி வந்தார்கள். பாக்கியலக்ஷ்மி யாரிடமோ பேசிக் கொண் டிருக்கிற மாதிரி - கத்திக் கொண்டிருக்கிற மாதிரி - தோன்றி யதே தவிர, அருகில் யார் இருக்கிறார்கள் என்பது அவர்கள் கண்ணுக்குத் தெரியவில்லை. பாக்கியலக்ஷ்மி தான் ஏதோ உளறுகிற மாதிரி தெரிந்தது. இன்னொரு குரல் அவர்களுக்குக் கேட்கவில்லை. ஆனால் பாக்கியலக்ஷ்மிக் குக் கேட்டது.

''பாக்கியலக்ஷ்மி, உன்னை வைத்துத்தான் நான் என் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ளப் போகிறேன். நீ என்ன செய்யணும் தெரியுமா?''

''என்ன செய்யணும்? என்ன செய்யணும்?'' பாக்கிய லக்ஷ்மிக்கு வாய் குழறியது.

''அன்னிக்குச் சொன்னாயே, அதையே விடாப் பிடி யாகச் சொல்லணும். நீ செத்துப் போனவுடன் தகனம் செய்வார்கள். அதற்கு இடம் கொடுக்காதே. புதைக்கணும் என்று சொல்லு. புரிகிறதா? புதைக்கணும் என்று சொல்லு...''

''புதைக்கணும்... என்னைத் தகனம் பண்ணக் கூடாது. புதைக்கணும். என்னைத் தகனம் பண்ணக் கூடாது...'' என்று அவள் சொல்வது சூழ்ந்திருந்த எல்லோருக்கும் தெளிவாகக் கேட்டது. அப்படிச் சொல்லிக் கொண்டிருக் கும் போதே அவள் மூச்சு நின்று விட்டது.

''அம்மா... அம்மா...'' என்று மாதவன் தாயைப் பிடித்து உலுக்கினான். எவ்வித அசைவும் தென்பட வில்லை. அவள் இறந்து விட்டாள் என்று சந்தேகமில் லாமல் தெரிந்தது.

எல்லாரும் அழுது ஓய்ந்த போது, மூத்த பிள்ளை புரோகிதரை வரவழைத்தான். இறுதிச் சடங்குக்கு ஏற் பாடுகள் செய்தான்.

மாதவன் அப்போது குறுக்கிட்டு, ''அண்ணா... அம்மா கடைசியாய்ச் சொன்னதை மறந்து விடாதே'' என்றான்.

''என்னது?''

''தகனம் பண்ணக் கூடாது என்றார்கள். புதைக்க ணும் என்றார்கள்...''

''அதெல்லாம் என்னவோ ஜன்னியில் உளறியது'' என்று அலட்சியமாகக் கூறினான் பெரியவன்.

''இல்லை அண்ணா. அதுதான் அம்மாவின் கடைசி வேண்டுகோள். கடைசி ஆசை. அதற்கு நாம் மதிப்புக் கொடுத்தாக வேண்டும்...''

''புதைக்கிறதாவது! உளறாதே! நாம் இந்துக்கள். அதெல்லாம் வழக்கமில்லை.''

ஆனால் புரோகிதர், ''தாயாருடைய கடைசி ஆசையை நிறைவேற்ற வேண்டியது குழந்தைகளின் கடமை. இதிலே ஒன்றும் தப்பில்லை. இந்து மதத்திலும் சில பிரிவுகளில் புதைப்பது உண்டு. அப்படியே செய்யலாம்'' என்றார்.

சுப்புராமனின் பங்களா பிரம்மாண்டமான தோட்டத் துடன் இருந்தது. அதன் ஒரு மூலையில் பாக்கிய லக்ஷ்மியைப் புதைப்பது என்று தீர்மானித்தார்கள்.

தனிப்பட்டவருக்குச் சொந்தமான இடத்தில் புதைப்ப தற்காகக் கார்ப்பரேஷனிடம் விசேட அனுமதி பெற் றார்கள். ஒரு சவப் பெட்டி தயாரித்து, பாக்கியலக்ஷ்மியை அதில் வைத்து, தோட்டத்தின் கிழக்குக் கோடியில், தண்ணீர்த் தொட்டியருகே புதைத்தார்கள். அந்த இடத் தில் மாதவன் ஒரு ரோஜாச் செடி நட்டு வைத்தான்.

ஏறத்தாழ ஒரு மாதம் சென்றபின், ஒரு நாள் மாதவன் அலுவலகத்துக்குப் புறப்படும் சமயம், ''என்னங்க, உங்க கிட்டே ஒரு விஷயம், பேசணும்'' என்றாள் கல்பனா.

''என்ன?'' என்று அவன் ஆச்சரியத்துடன் நின்றான்.

''நாம் இங்கே தங்கியிருந்தது போதும். நம்முடைய பழைய இடத்துக்கே போய் விடலாம் என்று நினைக் கிறேன்.''

மனைவியின் முகத்தைக் கூர்ந்து கவனித்தான் மாதவன். சரியான தூக்கமில்லாததாலும் கவலைகளினாலும் இமைகளின் கீழே கரு வளையம் கட்டியிருப்பது தெரிந்தது. அவளுடைய செப்பு இதழ்களில் குழப்பத்தின் வெடிப்புப் பரவியிருந்தது.

''என்ன கல்பனா, யாராவது ஏதாவது சொன்னார்களா?'' என்றான்.

''சே, சே! எல்லாரும் பிரியமாகத்தான் இருக்கிறார்கள். இந்த வீட்டில் சம உரிமை உண்டு என்று தெரிந்து கொண்டிருப்பதால் மரியாதையும் மதிப்பும் குறைவில்லாமல் கிடைக்கிறது...''

''பின்னே என்ன?''

''என் மனசுக்குத்தான் என்னவோ ஒரு படபடப்பாக இருக்கிறது. எப்போதும் யாரோ ஒருத்தர் என் பக்கத்திலேயே நின்று கொண்டிருக்கிற மாதிரி தோன்றுகிறது...''

அவள் சொல்லிக் கொண்டிருந்த போது அவர்கள் குழந்தை பாபு நின்றிருந்தான். ''போய் விளையாடிக் கொண்டிரு. போ'' என்று அவனை வெளியே அனுப்பினாள். ''என்னைப் பற்றிக்கூடப் பரவாயில்லை. பாபுவுக்காகத்தான் முக்கியமாய்...''

''என்ன அவனுக்கு?''

''திடுதிப்பென்று யாராவது உள்ளே நுழைந்தால் நாம் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்ப்போமில்லையா - அது போலத் திடீர் திடீரென்று வாசல் பக்கத்தைப் பார்க்கிறான். 'என்ன பாபு?' என்று கேட்டால் 'யாரோ வந்தாங்கம்மா' என்கிறான். நேற்று, 'பாட்டி அதோ நிற்கிறாங்

கம்மா... என்னைக் கூப்பிடறாங்கம்மா' என்றான். 'சீ, உளறாதே' என்று திட்டினேன். 'இல்லேம்மா... அதோ பார். தோட்டத்துக்குப் போறாங்க' என்றான். எனக்கு யாரை யும் தெரியவில்லை. ஆனால் குழந்தைகள் பொய் பேசாது ...''

மாதவனின் முகத்திலும் சிந்தனைகள் படர்ந்தன. ஆனால் அவன் பயப்படவில்லை. மனைவியைப் பயப் படுத்தவும் விரும்பவில்லை. ''இதெல்லாம் வெறும் பிரமை தான். இருந்தாலும் கொஞ்ச நாளில் நம் வீட்டுக்குப் போய் விடலாம். மனசை அலட்டிக் கொள்ளாமல் இரு'' என்று சொல்லி விட்டு ஆபீசுக்குப் புறப்பட்டான்.

அடுத்த ஆறு நாட்கள் எவ்வித சம்பவமும் இல்லா மல் நகர்ந்தன. ஏழாம் நாள் ராத்திரி -

கல்பனா தன் குழந்தையுடன் கணவனருகே கட்டி லில் படுத்திருந்தாள். மின்சார விசிறி சுழன்ற போதிலும் அறைக்குள் ஏனோ வெக்கையும் புழுக்கமுமாய் இருப்பதை உணர்ந்து, வெளியே ஹாலில் போய்ப் படுத்துக் கொண் டாள். அடுத்து இருந்த வெராந்தாவில் வேலைக்காரி மரகத மும் அவள் குழந்தையும் தூங்கிக் கொண்டிருந்ததால் தனிமையைப் பற்றி அவளுக்குப் பயம் ஏற்படவில்லை. ஹாலில் மின்சார விசிறியைப் போட்டுக் கொண்டு கவலையற்றுப் படுத்தாள்.

கொஞ்ச நேரம்தான் தூங்கியிருப்பாள். கண்ணை விழித்தவள், பக்கத்தில் பாபு எழுந்து உட்கார்ந்து கொண்டு மிரள மிரள விழிப்பதைக் கண்டாள். ''ஏண்டா பாபு, ஏன்? பாத்ரூம் போகணுமா? ஏன் உட்கார்ந்திருக்கிறாய்?'' என்றாள்.

''இல்லேம்மா... யாரோ என்னைத் தட்டினாங்களே ... தொட்ட மாதிரி இருந்தது...'' என்று அவன் சொன்னதும் அவளைப் பீதி பிடித்துக் கொண்டது. குழந்தையை அணைத்து எடுத்துக் கொண்டு பழையபடி மாதவனுக்கு அருகிலேயே போய்ப் படுத்துக் கொண்டு விட்டாள். கணவனையும் குழந்தையையும் சேர்த்து அணைத்துக் கொண்ட போது அவளுக்கு உடம்பு வெடவெடவென்று நடுங்கிக் கொண்டிருந்தது. வெகு நேரம் கழித்துத்தான் கண் அயர்ந்தாள்.

காலை ஆறு மணி இருக்கும். தோட்டத்தில் யாரோ பெரும் குரலெடுத்து 'ஐயோ ஐயோ' என்று கதறுவது காதில் விழுந்தது. மாதவனும் கல்பனாவும் அலறி அடித்துக் கொண்டு போய்ப் பார்த்த போது -

வேலைக்காரி மரகதம் தன் குழந்தையை மடியில் போட்டுக் கொண்டு ஓவென்று அழுது கொண்டிருந்தாள். வீட்டிலிருந்த அத்தனை பேரும் அவளைச் சூழ்ந்து நின்றிருந்தார்கள். என்ன ஆறுதல் சொல்லி எப்படித் தேற்றுவது என்று யாருக்கும் தெரியவில்லை.

வேகமாய்க் கூட்டத்தை விலக்கிக் கொண்டு குனிந்து பார்த்தான் மாதவன். உயிர் போய் வெகு நேரமாகி விட்டது என்று தெரிந்தது. ரத்தம் வடிந்த மாதிரி சோகை பரவியிருந்தது. பெண் குழந்தை, நாலு வயதுதான் இருக்கும். ஏழையானாலும் அழகாக இருந்தது. அந்தப் பரிதாபத்தை மற்றவர்களாலேயே தாங்கிக் கொள்ள முடியாத போது பெற்றவளின் வயிறு எப்படி எரிந்திருக்கும்!

''என்னவாம்... திடீரென்று எப்படி இது நேர்ந்தது ...'' என்று அண்ணனைக் கேட்டான் மாதவன்.

''மரகதத்துக்கே தெரியவில்லை. ராத்திரி பக்கத்தில் விட்டுக் கொண்டிருந்த குழந்தையைக் காலையில் காணோமே என்று தேடியிருக்கிறாள். தோட்டத்தில் குழந்தை கையைக் காலைப் பரப்பியபடி கிடந்ததாம். மூன்றாவது வீட்டில் ஒரு டாக்டரம்மா இருக்கிறார். வந்து பார்த்து, குழந்தை இறந்து விட்டது என்று சொன்னார். என்ன காரணம், ஏதாவது பூச்சி பொட்டுக் கடித்திருக்குமா என்று கேட்டேன். 'அப்படி எதுவும் தெரியவில்லை' என்றார்...''

கணவனின் கையைப் பிடித்தபடி கல்பனா நின்றிருந்தாள். அவள் கை நடுங்குவது அவனுக்குத் தெரிந்தது. ''சரி, சரி. எல்லாரும் போங்கள்'' என்று பெண்களை வீட்டுக்குள் அனுப்பினான். மற்ற வேலைக்காரர்களின் உதவியுடன் குழந்தையைச் சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்ல ஏற்பாடுகள் செய்தான்.

மரகதம் கதறக் கதற, அவளுடைய சிசு ஒரு துணியில் சுருட்டி எடுத்துச் செல்லப்பட்டது. வேலைக்காரர்களில் ஒருவன் அதை அணைத்தபடி எடுத்துக் கொண்ட போது, தற்செயலாய் அதைக் கவனித்தான் மாதவன். ''இரு'' என்று சொல்லி இன்னொரு முறை உற்றுப் பார்த்தான்.

கழுத்தின் பின்புறம், குண்டூசியினால் குத்திய மாதிரி இரண்டு சிவப்புப் புள்ளி தெரிந்தது. ரத்தம் உறைந்து போன இரண்டு சிவப்புப் பொட்டு நன்றாகத் தெரிந்தது.

எதுவோ அந்த இடத்தில் கடித்த மாதிரி -

உடலெங்கும் வியர்த்துக் கொட்டுகிற மாதிரி ஒரு கணம் மாதவனுக்கு நடுக்கம் ஏற்பட்டது. ஆனால் வெளியே காட்டிக் கொள்ளாமல் மறுகணமே மறைத்துக் கொண்டான். அவர்களை அனுப்பி வைத்தான்.

அன்று முழுதும் அவன்தான் யோசனையில் ஆழ்ந் திருந்தானென்றால் கல்பனா அவனுக்கு மேல் பீதி வசப் பட்டிருந்தாள். அவளைக் கலவரப்படுத்தக் கூடாதென்று மாதவன் தான் கண்டதை அவளிடம் சொல்லவில்லை. நகக் குறியா, பிராண்டிய குறியா, கடித்த குறியா - என்ன வாக இருக்கும் அந்த ரத்தப் பொட்டுக்குக் காரணம்? அவன் குழம்பிக் கொண்டேயிருந்தான்.

ராத்திரி படுக்க வந்த போது கல்பனா, ''நான் பயப் பட்டது சரியாயிட்டுது. இங்கே ஏதோ ஒரு கெட்ட சூழ் நிலை இருப்பது நிச்சயம்'' என்றாள்.

அவளைப் பாசத்துடன் தட்டிக் கொடுத்தவன், ''தினம் தினம் ஆயிரக் கணக்கான குழந்தைகள் இந்தியா பூராவி லும் இறந்து போகிறது. நம் வீட்டில் ஒரு வேலைக் காரியின் குழந்தை இறந்ததற்கா நீ மிரண்டு போகிறாய்?'' என்றான்.

''அதில்லை... மரகதம் சாயந்தரம் வேறொன்று சொன்னாள்...''

''என்ன?''

''நான் கொஞ்ச நேரம் ஹாலில் படுத்து விட்டு மறு படி உள்ளேயே வந்து விட்டேன் - பாபு ஏதோ பயப்படு கிறான் என்று. மின்சார விசிறியை நிறுத்தாமலே வந்து விட்டேன். கொஞ்ச நேரம் கழித்து மரகதத்துக்குத் தூக்கம் முழித்திருக்கிறது. மின்சார விசிறியைப் பார்த்ததும் அதன் கீழே படுத்துக் கொள்ள ஆசைப்பட்டு, குழந்தையுடன் வந்திருக்கிறாளாம். அங்கேதான் தூங்கினாளாம். திட்டப் போகிறோமே என்று யாரிடமும் சொல்லவில்லையாம்.

சாயந்தரம்தான் என்னிடம் அழுது கொண்டே சொன் னாள்...''

''சரி, அதனாலென்ன?''

''உங்களுக்குப் புரியவில்லையா?'' என்ற போது அவளுடைய குரல் தழுதழுத்தது. ''நம்ம பாபு... அவன் படுத்திருந்த இடத்தில்... கொஞ்சம் தவறியிருந்தால் நம்ம குழந்தைக்கு அந்தக் கதி வந்திருக்கும்...'' அவள் அழுது விட்டாள்.

'எந்தக் கதி?' என்று மாதவன் கேட்கவில்லை. என்னவோ ஓர் அமானுஷ்யமான சக்திதான் மரகதத்தின் குழந்தையைக் கொன்றிருக்கிறது என்பது அவனுக்கும் புரிந்தேயிருந்தது.

அன்று அவனுக்கு ஏற்பட்ட பயங்கர சந்தேகம் வர வர அதிகரிக்கலாயிற்று. அதிகரிக்கும் வண்ணம் மேலும் இரண்டு சாவுகள்!

அவர்களுடைய பங்களாவுக்குப் பின்புறம் ஒரு குடிசைப் பகுதி இருந்தது. பட்டினியும் பஞ்சமும் நோயும் மரணமும் அங்கே சகஜம்தான். ஆகவே அங்கே ஒரு குழந்தை இறந்து போன போது யாரும் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. அதைத் தூக்கிச் செல்கையில் மாதவன் சும்மா வேடிக்கை பார்க்கிற மாதிரி அருகே போய்க் கவனித்தான்.

அந்தக் குழந்தையின் கழுத்திலும் இரண்டு ரத்தப் புள்ளிகள் தெரிந்தன!

தான் கண்டதை அப்போதும் அவன் கல்பனாவிடம் சொல்லவில்லை. பழைய வீட்டைக் காட்டிலும் வசதி யான வேறு புது வீடு பார்த்துக் கொண்டிருப்பதாகவும்,

கிடைத்ததும் புறப்பட்டு விடலாமென்றும் சொல்லி வைத்தான்.

குடிசைப் பகுதியில் மற்றுமொரு குழந்தை அடுத்த வாரம் இறந்தது. வேறு யாரும் கவனிக்காத அதே ரத்தப் புள்ளிகளை மறுபடியும் மாதவன் கண்டான்.

இப்போது அவனுடைய தைரியம் பஞ்சு பஞ்சாய்ப் பறந்து விட்டது. அண்ணன்மார்கள் தகப்பனாரின் பிஸினஸைச் சரியானபடி நிலை நிறுத்துவதில் முழு மூச்சுடன் ஈடுபட்டிருந்தார்களாகையால் அவர்கள் கவனத்தைத் திருப்ப அவன் விரும்பவில்லை.

அவனுடைய திகில் அலுவலகத்தில், அவன் செய்யும் வேலைகளில், வெளிப்பட்டு விட்டது போலும். சந்துரு என்று அவனுடன் வேலை செய்பவன், ''என்னப்பா மாது, ஏன் கொஞ்ச நாளாய் ஆளே மாறி விட்டாய்? என்ன ஆச்சு உனக்கு?'' என்று கேட்டான்.

கான்ட்டீனுக்கு அவனை அழைத்துச் சென்று, தனியாய் உட்கார்த்தி வைத்துக் கொண்டு, காப்பி டம்ளரைக் கைகளில் உருட்டிய வண்ணமே, தன் இதயத்தின் ரகசியங்களையெல்லாம் கொட்டினான் மாதவன்.

பல நிமிட நேரத்துக்கு மௌனமாயிருந்த சந்துரு, ''இதை இப்படியே விடக்கூடாது. எனக்குத் தெரிந்து நாலைந்து பேர் இருக்கிறார்கள். அவர்களை அழைத்து வருகிறேன்'' என்றான்.

''மந்திரவாதிகளா?''

''கிட்டத்தட்ட அந்த மாதிரிதான். ஸைகிக் தன்மை உள்ளவர்கள். ஆவிகளுடன் பேசத் தெரிந்த மீடியம்கள்.

நம்மால் புரிந்து கொள்ள முடியாத, நமக்குத் தெரியாத ரகசியங்களைத் தங்கள் அமானுஷ்ய உணர்வுகளின் மூலம் அறிந்து சொல்லக்கூடிய திறமை படைத்தவர்கள்'' என்றான் சந்துரு.

''சரி, அழைத்து வா'' என்றான் மாதவன். இனம் தெரியாத ஒரு பயம் அவனைப் பிடித்துக் கொண்டது.

## 18

தலையில் கட்டுக் குடுமியும் நெற்றியில் பயங்கரக் குங்குமமும் கழுத்தில் மாலையும் கையில் வேப்பிலையுமாகச் சில பேரைச் சந்துரு அழைத்து வரப் போகிறான் என்றுதான் மாதவன் எதிர் பார்த்திருந்தான். ஆகவே வந்தவர்களைக் கண்டதும் அவ னால் நம்ப முடியவில்லை.

சந்துரு அவர்களை ஆபீசுக்கு அழைத்து வந்திருந்த தால், காபி சாப்பிடலாம் வாருங்கள் என்று கான்ட்டீ னுக்குக் கூப்பிட்டுக் கொண்டு போனான். எல்லாரும் சேர்ந்து உட்கார்ந்து காபி சாப்பிட்டார்கள். அப்போதுதான் மாதவன் அவர்களை ஆராய்ந்தான். அவர்களைப் பற்றித் தெரிந்து கொண்டான்.

மொத்தம் ஐந்து பேர் இருந்தார்கள். முப்பதிலிருந்து நாற்பது வயதுக்குட்பட்டவர்கள். ஒருவர்தான் அசல் சைக்கியாட்ரிஸ்ட். மனநல மருத்துவமனையில் கௌரவ ஆலோசகராக இருக்கும் டாக்டர். மற்றவர்கள் ஏ.ஜி.ஸ் அலுவலகத்திலும் மத்திய பி.டபிள்யூ.டி.யிலும், ஐ.ஸி. எஃப்.பிலும் வேலை பார்ப்பவர்கள். எவர் முகத்திலும் கடுமையோ கொடுமையோ தென்படக் காணோம். சிரித்துப் பேசினார்கள். ஆவிகள் உலவக் கூடிய இடத்துக்குப் போனால் மட்டுமே தங்களுக்குள் ஒரு வைப்ரேஷன்

ஏற்படும் என்றார்கள். இந்தத் தன்மை காரணமாக, பல இடங்களில் ஐந்து பேரும் சேர்ந்து ஆராய்ச்சிகள் நடத்துவதாகச் சொன்னார்கள்.

மாதவனின் வீட்டில் என்ன மாதிரியான கோளாறு என்பதைப் பற்றிச் சந்துரு அவர்களிடம் சொல்லவில்லை. இப்போது காபி சாப்பிடுகையில் மாதவன், ''என் அப்பா இறந்து போனது முதல்...'' என்று ஆரம்பித்ததும் சைக்கி யாட்ரிஸ்ட் 'சொல்ல வேண்டாம்' என்று தடுத்து விட் டார். ''நாங்களாகவே தெரிந்து கொண்டால்தான் எங்கள் ஆராய்ச்சிகளுக்கு உதவியாக இருக்கும். உங்களுக்கும் எங்கள் மீது நம்பிக்கை பிறக்கும்'' என்றார்.

மாதவன் தன் விலாசத்தை மட்டும் சொல்லி விட்டு அடுத்த ஞாயிற்றுக்கிழமை மாலை அங்கே வரும்படி கேட்டுக் கொண்டான்.

இருட்டிய பிறகு வருவதாகப் புன்சிரிப்புடன் தெரி வித்தார் சைக்கியாட்ரிஸ்ட். நன்றி சொல்லி அவர்களுக்கு விடை கொடுத்தான்.

ஆனால் சனிக்கிழமையன்று, மறுநாள் அவர்கள் வரப் போகிறார்கள் என்று சகோதரர்களிடம் சொன்ன போது அவர்கள் சிறிதுகூட உற்சாகம் காட்டவில்லை. மாறாக, இதெல்லாம் எதற்கு என்று எதிர்த்தார்கள்.

''எப்பேர்ப்பட்ட பங்களா இது! இதைப் பற்றி எல் லாரும் மட்டமாக நினைக்கும்படி ஆகிவிடும்'' என்றான் ஒருவன்.

''நம்ம அப்பா அம்மாவெல்லாம் நல்ல கதி அடை யாமல் பேய் பிசாசாய் அலைகிறார்கள் என்றால் எவ் வளவு அவமானம்!'' என்றான் இன்னொருவன்.

''அவமானம்தான். பேய் பிசாசு அது இது என்று புரளிகள் கிளம்பினால் நாளைக்கு நம் வீட்டோடு யார் சம்பந்தம் வைத்துக் கொள்வார்கள்?'' என்று மூத்த மருமகள் மூக்கைச் சிந்தினாள். கல்யாணத்துக்குப் பெண்ணொருத்தி இருப்பதால் அவள் கவலையெல்லாம் அதைப் பற்றியே இருந்தது.

ஓரகத்திகளின் எதிர்ப்பைக் கேட்ட பின்னர் கல்பனா கூட மாதவனின் கட்சியிலிருந்து விலகி விட்டாள். ''நாம் பாட்டுக்கு நம்ம வேலையைப் பார்த்துக் கொண்டு போகலாமே? உங்களுக்கு ஏன் இந்த வம்பெல்லாம்?'' என்று சொல்லிப் பார்த்தாள்.

மாதவன் கேட்கவில்லை. பிடிவாதமாக இருந்தான். ''இப்போதே இதைத் தடுக்க நாம் ஏதாவது செய்தாக வேண்டும். இல்லாவிட்டால் விபரீதமாகி விடும். அக்கம் பக்கத்தில் உள்ள குடிசைக்காரர்கள் நம்மை அடித்துக் கொன்று விடுவார்கள்'' என்றான். அவன் குரலிலிருந்த தீவிரத்தைக் கண்டதும் எல்லாரும் தணிந்து விட்டார்கள்.

ஞாயிற்றுக்கிழமை மாலை அவர்கள் ஒரு டாக்ஸியில் வந்தார்கள். கையில் ஒரு டேப் ரெக்கார்டர் மட்டுமே இருந்தது. அவர்களுக்குத் துணையாகச் சந்துருவும் வந்திருந்தான்.

வரவேற்பறையில் உட்கார்ந்து காபி சாப்பிட்டு விட்டுச் சில நிமிடங்கள் ஊர் வம்பு பேசிக் கொண்டிருந்தார்கள். இருட்டி விட்டது.

''புறப்படலாம்'' என்று சைக்கியாட்ரிஸ்ட் சொல்ல மற்றவர்கள் எழுந்து கொண்டார்கள்.

மாதவனுக்குப் புரியவில்லை. இங்கேயே உட்கார்ந்து ஏதோ செய்யப் போகிறார்கள் என்றுதான் அவன்

நினைத்திருந்தான். ''எங்கே போக வேண்டும்?'' என்றான் திகைப்புடன்.

''பங்களா மொத்தத்தையும் ஒவ்வோரிடமாகப் பார்க்க வேண்டும்'' என்றார் அவர்.

பெரிய தலைவர்கள் வரும்போது ஜனங்கள் அலை மோதாமல் இருப்பதற்காகப் போலீஸ்காரர்கள் வேலி கட்டுவார்களே, அதுபோல அவர்கள் ஒருவர் கையை ஒருவர், கோத்துக் கொண்டு நடந்தார்கள்.

சமையல்கட்டுக்குச் சென்றார்கள். சில நிமிடம் நின்றார்கள். ''இது இல்லை'' என்று சொல்லிக் கொண்டார்கள். பிறகு நடந்தவர்கள் வெராந்தாவுக்குச் சென்றார்கள். பிறகு அங்கிருந்து மொட்டை மாடிக்குச் சென்றார்கள். பிள்ளைகள், மருமகள்களின் அறைக்குச் சென்றார்கள். ஒவ்வோரிடத்திலும் சென்று, கண்ணை மூடிக் கொண்டு சில நிமிடம் நின்று, இது இல்லை, இது இல்லை என்று சொல்லிக் கொண்டே வந்தார்கள். அங்கெல்லாம் எவ்வித உணர்வு அலையும் அவர்கள் உள்ளத்தில் தாக்கவில்லை என்பதை ஊகித்துக் கொண்டான் மாதவன். அவனுடைய சகோதரர்களுக்கும் இப்போது கோபம் குறைந்து ஒருவகை ஆர்வம் ஏற்பட்டிருந்தது. அவர்களும் அவன் பின்னால் வரலானார்கள்.

கடைசியில் அவர்களுடைய தந்தையின் அறையை அடைந்தார்கள்.

அறை வாசல்படியில் கால் வைத்ததுமே அவர்கள் திக்கென்று நிற்பதையும், அவர்கள் தேகம் சட்டென விறைத்துக் கொள்வதையும் மாதவன் கண்டான். ஒரு வினாடி மௌனத்துக்குப் பின் அவர்கள் உள்ளே நுழைந்தார்கள்.

''இதுதான்'' என்றார் சைக்கியாட்ரிஸ்ட்.

''எஸ்'' என்றார் அடுத்தவர்.

''ஆமாம், இங்கேதான்'' என்றார் மூன்றாமவர்.

''நிச்சயமாய்'' என்றார்கள் நாலாமவரும் ஐந்தாமவரும். அவர்கள் எல்லாருடைய குரலிலும் பரபரப்புத் தென் பட்டது.

சுப்புராமன் இறந்தபின் கொஞ்ச நாள் வரை அவர் அந்த அறையை எப்படியெப்படி வைத்திருந்தாரோ அப் படியே வைத்திருந்தார்கள். பிறகு அவரவர் இஷ்டப்படி வேண்டாத பொருள்களை அங்கே கொண்டு வந்து போட்டார்கள். சில பொருள்களை எடுத்துச் சென்றார் கள். மொத்தத்தில் அது சுப்புராமனின் அறை என்று சொல் லும்படி எதுவும் அங்கே இருக்கவில்லை.

''சரி, நாம் உட்காரலாம்'' என்றார் சைக்கியாட்ரிஸ்ட். பிறகு மாதவனையும் அவனுடைய சகோதரர்களையும் பார்த்து, ''நீங்கள் வெளியே இருக்கலாம். பக்கத்தில் எங்கே யும் விளக்குகள் எரியாமல் அணைத்து வையுங்கள்'' என்றார்.

எல்லா விளக்குகளும் அணைக்கப்பட்டன. வெளியே இருந்து கண்ணாடி ஜன்னல்கள் வழியாகச் சிறு வெளிச்சம் மட்டுமே வந்தது. கும்மிருட்டாக இல்லாமல் முக்கால் இருட்டாக இருக்க வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்கள் போலும். ஜன்னல் வெளிச்சத்தை அடைக் கும்படி சொல்லவில்லை.

''உட்காரலாம்'' என்று சைக்கியாட்ரிஸ்ட் சொன்ன தும் அவர்கள் வட்டமாகத் தரையில் உட்கார்ந்து கொண்

டார்கள். குழந்தைகள் விளையாட்டுப் போல ஒருவர் மற்றவரின் கையைப் பிடித்துக் கொண்டார்கள். டேப் ரெக்கார்டரை ஆன் பண்ணி, பக்கத்தில் வைத்துக் கொண் டார்கள்.

''நாங்கள் பேசிக் கொள்வது என்னவென்று எங்க ளுக்கே தெரியாது. பிற்பாடு ஞாபகப்படுத்திக் கொள்ள வும் முடியாது. ஆகவே டேப் ரெக்கார்டரை ஆன் பண்ணி வைத்திருக்கிறோம். அது சரியாய் ஓடிக் கொண்டிருக் கிறதா என்பதை மட்டும் நடுநடுவே கவனித்துக் கொள் ளுங்கள்'' என்று மாதவனிடம் சொன்னார் சைக்கியாட் ரிஸ்ட்.

அறை வாசல்படிக்கு வெளிப்புறத்தில் அவர்கள் நின்று கொண்டார்கள்.

கிட்டத்தட்டப் பதினைந்து நிமிடத்துக்கு அவர்களிட மிருந்து ஒரு பேச்சும் வெளிவரவில்லை. அந்த இருட்டும் நிசப்தமும் வெளியே காத்திருந்தவர்களின் மனத்தை என்ன வோ செய்தன. உட்கார்ந்திருந்தவர்களுடைய மூச்சுக் காற்று மட்டும் சீராகக் கேட்டது. இந்த மாதிரியான 'கெட்ட காரியங்க'ளின் போது அங்கே இருக்க வேண்டாமென்று தீர்மானித்து எல்லாப் பெண்களும் தங்கள் குழந்தை களுடன் வேறு உறவினர் வீட்டுக்குப் போயிருந்தார்கள். ஆகவே சத்தம் போடக்கூடிய எதுவும் அந்தப் பங்களா வில் அப்போது இல்லை.

உட்கார்ந்திருந்தவர்களில் ஒருவர் தொண்டையைச் செருமிக் கொண்ட போது அதுவே பெரும் சத்தமாக எதி ரொலித்தது.

இனிமேலும் இந்த மௌனத்தைத் தாங்கிக் கொள்ள முடியாது என்று மாதவன் நினைத்த போது ஒரு குரல் கேட்டது: ''எனக்குத் தெரிய ஆரம்பிக்கிறது.''

அதைத் தொடர்ந்து ஒவ்வொருவரும் மாற்றி மாற்றிப் பேசலானார்கள். ஒருவர் கையை மற்றவர் கோத்துக் கொண்டிருப்பதும் கண்களை மூடிக் கொண்டிருப்பதும் மட்டுமே மாதவனுக்குத் தெரிந்தது. அவர்களுடைய முகமோ வாய் அசைவோ தெரியவில்லை. ஆகவே யார் எதைச் சொல்லுகிறார்கள் என்பதைக் கண்டு கொள்ள முடியவில்லை. கனவில் பேசுகிறவர்கள் மாதிரி விட்டு விட்டுப் பேச்சு வெளிப்பட்டது.

''ஆமாம், ஒரு பெரியவர்—ஐம்பது வயதுக்கு மேலிருக்கும் — தெரிகிறார். கட்டிலில் உட்கார்ந்திருக்கிறார்.''

''நோயாளி மாதிரி தோன்றுகிறது. அவர் முகத்தை நான் இதற்கு முன் பார்த்தது கிடையாது. அடையாளம் தெரியவில்லை.''

''எனக்கு அவரை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறது.''

''எனக்குத் தெரிகிறது. இவர் ஒரு தொழிலதிபர். ஒரு விழாவில் நான் பார்த்திருக்கிறேன்.''

''பெஞ்சு மாதிரி ஒன்று...''

''இல்லை. அது கட்டில். படுக்கை. அதில் அவர் உட்கார்ந்திருக்கிறார். இருமுகிறார். மார்பைப் பிடித்துக் கொள்கிறார்.''

''முகம் ரொம்ப வேதனையாக இருக்கிறது. யாரையோ கூப்பிட முயலுகிறார்.''

''யாராவது வருகிற மாதிரி தெரிகிறதா?''

''ஒருவரையும் காணோம்.''

''ரொம்ப வேதனைப்படுகிறார். கட்டிலிலிருந்து இறங்கி நகருகிறார்.''

''வாசலுக்கா?''

''மேஜையை நோக்கி.''

''போக முடியவில்லை. தவிக்கிறார். ஒவ்வோர் அங்குலமாகத் தவழ்கிறார்.''

திடீரென்று அவர்களுடைய பேச்சு நின்றது. தொடர்ச்சியாக அவர்களுக்குத் தெரிந்து கொண்டிருந்த காட்சிகள் தடைபட்டது போலும். மனத்தின் வலுவுக்கும் பலவீனத்துக்கும் ஏற்ற வகையில் காட்சிகள் தெளிவாகவோ மங்கலாகவோ புலப்படுகின்றன என்று மாதவன் ஊகித்துக் கொண்டான்.

''வாசல் பக்கம் நிழலாடுகிறது.''

''யாரோ வருகிறார்கள்.''

''அதை ஊன்றிக் கவனிப்போம். அது முக்கியம். யார் வருவது?''

''அது பெரிய ஆளாகத் தோன்றவில்லை. சின்ன உருவம்.''

''குழந்தை.''

''ஆமாம். குழந்தைதான். பெரியவரை வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்கிறது.''

''கையை நீட்டுகிறது.''

''உள்ளே வருகிறதா? அல்லது வாசலிலேயே நிற்கிறதா?'' ''உள்ளே வருகிற மாதிரிதான் தெரிகிறது.''

''ஆமாம். வருகிறது. மேஜையிடம் போகிறது.''

அவர்கள் எல்லாருக்கும் எல்லாக் காட்சிகளும் ஒரே மாதிரி தெரியவில்லை என்று மாதவனுக்குப் புரிந்தது. அவரவர்களின் சைக்கிக் வலிமையைப் பொறுத்து, கொஞ்சம் தெரிகிறது, அதிகம் தெரிகிறது, எதுவுமே தெரியவில்லை. ஒருவருக்குத் தெரிந்ததை மற்றவருக்குச் சொல்லி இட்டு நிரப்பிக் கொள்கிறார்கள் என்று புரிந்து கொண்டான்.

நிசப்தம் தொடர்ந்தது. மாதவனுக்கு டேப் ரெக்கார்டரைப் பற்றி ஞாபகம் வந்தது. ஓசைப்படுத்தாமல் உள்ளே நுழைந்து, கையிலிருந்த பென்சில் டார்ச்சை அடித்துப் பார்த்தான். டேப் ஓடிக் கொண்டிருப்பது தெரிந்தது. திரும்பி அறைக்கு வெளியே வந்து நின்று கொண்டான்.

ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு உள்ளே உரையாடல் மீண்டும் தொடங்கியது.

''பெரியவர் விழுந்து கிடக்கிறார். உயிர் இருக்கிறதா இல்லையா என்று தெரியவில்லை...''

''இல்லை. இறந்து விட்டார்.''

''குழந்தை?''

''அதை இப்போது காணோம். தரையில் வேர்க்கடலை மாதிரி என்னவோ சிந்திக் கிடக்கிறது.''

''வேர்க்கடலையில்லை. மாத்திரைகள். ஆமாம். பக்கத்தில் ஒரு கண்ணாடி புட்டிகூடக் கவிழ்ந்து கிடக்கிறது.''

மறுபடியும் முன்னைக் காட்டிலும் அதிக நேரத்துக்கு நிசப்தம் நிலவியது. பிறகு ஒருவர், ''ஒரு பெண் மணி படுத்திருக்கிறார். இவரும் நோயாளி மாதிரிதான் தெரிகிறது.''

''தூங்கிக் கொண்டிருக்கிறார்.''

''யாரோ கூப்பிடுகிற மாதிரி எழுந்து உட்கார்ந்து கொள்கிறார்.''

''யார் கூப்பிடுகிறார்கள்? எனக்கு யாரும் தெரிய வில்லையே?''

''எனக்கும் தெரியவில்லை.''

''எனக்கும் தெரியவில்லை.''

''எனக்குச் சிறிது தெரிகிறது. உருவம் தெளிவாக இல்லை.''

''ஆணா, பெண்ணா?''

''ஆண்.''

''வயதானவரா வாலிபமா?''

''வயதானவர்.''

''ஆமாம். இப்போது எனக்கும் கொஞ்சம் கொஞ்சம் தெரிகிறது. படுத்திருக்கிற பெண்மணியிடம் அந்த உருவம் போகிறது.''

''என்னவோ சொல்கிறது. அதட்டுகிறது. மிரட்டு கிறது. அந்த அம்மாள், 'மாட்டேன், முடியாது' என்று சொல் கிற மாதிரி தலையை அசைக்கிறாள். கைகளை ஆட்டு கிறாள்.''

''முகத்தைக் கையில் பொத்திக் கொண்டு அழுகிறாள்.''

''எதற்கு என்று தெரிகிறதா? இருவருக்கும் என்ன நடந்திருக்கிறது?''

''தெரியவில்லை. இந்த இடத்தில் நம்மால் பலமாய்க் கம்யூனிகேஷன் செய்து கொள்ள முடியவில்லை.''

''எனக்கு ஒரு எழுத்து தெரிகிறது.''

''என்ன எழுத்து?''

''யா — என்கிற எழுத்து.''

''யா இல்லை. பா.''

''ஆமாம், பா.''

''அப்புறம்?''

''வேறெதுவும் தெரியவில்லை.''

அவர்களுடைய பேச்சு நின்றது. சற்றைக்கெல்லாம் எழுந்து கொண்டார்கள். மூடிய அறைக்குள் இருந்ததால் அவர்கள் முகத்தில் முத்து முத்தாய் வியர்த்திருந்தது. இரண்டு பேருக்குச் சட்டை தெப்பலாய் நனைந்து முதுகோடு ஒட்டியிருந்தது.

எல்லாரும் ஹாலுக்குத் திரும்பினார்கள். குளிர்ச்சியாய் ஜூஸ் அருந்தினார்கள். டேப் ரெக்கார்டரை முதலிலிருந்து கடைசி வரை போட்டுக் கேட்ட ார் சைக்கியாட்ரிஸ்ட். அவர் முகத்தில் சிந்தனை படர்ந்தது. ''உங்கள் குடும்ப விஷயங்கள் உங்களுக்குத்தான் தெரியும். அமைதியாகக் கேட்டீர்களானால் தொடர்புகள் புலப்படும்'' என்றார்.

''எங்களைப் பொறுத்த மட்டில் எக்ஸ்பரிமெண்ட் வெற்றிகரமாய் வந்து விட்டது'' என்று இன்னொருவர் மகிழ்ச்சி நிறைந்த குரலில் சொன்னார். அவர்கள் ஒரு

வரை ஒருவர் கைகுலுக்கிப் பாராட்டிக் கொண்டார்கள். விடைபெற்றுக் கொண்டார்கள்.

இரவு படுக்கப் போகுமுன் மாதவன் மறுபடியும் ஒரு முறை டேக் ரெக்கார்டரை இயக்கினான். அமைதி யாக, சம்பாஷணைகள் மொத்தத்தையும் கேட்டான். அப் போது கல்பனாவும் அவனருகே இருந்தாள்.

மாதவன் ஒரு பெருமூச்சுடன் ''எனக்குப் புரிகிறது'' என்று கூறியதும் அவனை ஆச்சரியத்துடன் நோக்கினாள்.

''என்ன புரிகிறது?''

''அப்பா இறந்து போனதற்குக் காரணம் நம் குழந்தை பாபு. மாத்திரையைச் சாப்பிட அவர் தவித்துக் கொண் டிருந்த போது புட்டியை இவன் உடைத்து விட்டான். அந்த ஆத்திரத்தோடு இறந்திருக்கிறார். எல்லாக் குழந்தைகள் மீதும் வெறுப்பு. பழி தீர்க்கிறார். அதற்கு அம்மா கருவி. பா என்ற எழுத்து வேறே யாருமில்லை. பாபு – நம் குழந்தை பாபு.''

கல்பனாவின் கண்களில் பீதி பரவியது. தூங்கிக் கொண்டிருந்த குழந்தையை அள்ளி அணைத்துக் கொண் டாள். ''அம்மாவா...? அம்மா எப்படிப் பழி...,'' அவள் குரல் நடுங்கியது.

''அம்மா அம்மாவாக இல்லை. ரத்தக் காட்டேரி யாக இருக்கிறாள்...'' என்றான் அவன் அமைதியாக.

''என்னங்க இது... என்ன சொல்றீங்க?'' என்று தன்னை மீறிக் கத்தி விட்டாள் கல்பனா. அவள் குரல் அந்த நிசி வேளையில் வீரிட்டு எழுந்து பங்களா சுவர்களில் மோதியது.

# 19

கல்பனாவின் கூச்சலைக் கேட்டு அந்த நள்ளிரவில் வீடு மொத்தமும் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு அவர்களுடைய அறைக்கு ஓடி வந்தது. வந்தவர்கள் எல்லாருடைய முகத்திலும் பீதி எழுதி ஒட்டியிருந்தது. அனாவசியமான, மர்மமான மரணங்களும் விபரீதமான சூழ்நிலைகளும் போதாதென்று மாதவன் அழைத்து வந்திருந்த ஆவி ஆராய்ச்சிக்காரர்கள் வேறே புதிய கிலியை ஏற்படுத்தி விட்டுப் போயிருந்தார்கள். வெறும் நிழலாட்டம் கூடப் பிசாசின் நடமாட்டம் போலவும், வெறும் எலியின் ஓசைகூடப் பேயின் கர்ஜனை போலவும் திகிலான கற்பனைகளை வளர்க்கும் அளவுக்கு அந்த வீட்டிலுள்ளவர்களின் உள்ளங்கள் ஊசி முனையில் புரண்டு கொண்டிருந்தன. ஆகவே கல்பனாவின் கூக்குரல் ஒரு பூகம்பத்தை எழுப்பியதில் ஆச்சரியமில்லை.

''என்ன அண்ணி, என்ன ஆச்சு?'' என்றான் மாதவனின் தம்பி. .

''இவர்... இவர்...'' நடுக்கத்தில் கல்பனாவுககு வாயில் வார்த்தை வரவில்லை. கணவனைச் சுட்டிக் காட்டிக் குழறினாள்.

தன் ஊகங்களைப் பற்றி என்ன சொன்னாலும் இவர்கள் நம்பப் போவதில்லை என்பது மாதவனுக்குத் துல்லியமாக விளங்கியது. வீணாய் இவர்களைக் காபராப் படுத்துவானேன் என்று முடிவு செய்தவனாக, ''ஒன்றுமில்லை. இவள் ஏதோ சொப்பனம் கண்டு பயந்து அலறி விட்டாள். நீங்கள் போங்கள்'' என்று பதில் கூறி அவர்களைத் திருப்பியனுப்பினான்.

கதவைத் தாளிட்டான். ''இதோ பார் கல்பனா. அனாவசிய ஸென்ட்டிமென்ட்ஸ் கூடாது. நான் சொல்வதை மனசில் நன்றாய் வாங்கிக் கொண்டு பிராக்டிகலாக யோசனை பண்ணு'' என்று அதட்டினாற் போன்ற தொனியில் சொன்னான்.

அந்தக் குரலிலிருந்த தீவிரம் அவளைச் சாந்தமடையப் பண்ணியது. ''இருந்தாலும் நீங்கள் அம்மாவைப் பற்றி என்னென்னவோ கன்னாபின்னாவென்று சொல்கிறீர்களே?'' என்றாள் கலங்கிய குரலில்.

''இதிலே கன்னாவும் இல்லை பின்னாவும் இல்லை. உண்மையைச் சொல்கிறேன். உலகத்திலுள்ள அத்தனை குழந்தைகளின் மீதும் அம்மாவுக்கு வெறி ஏற்படுகிற மாதிரி என் அப்பாவின் ஆவி அவளைப் பண்ணி வைத்திருக்கிறது. குறிப்பாக, பாபுவை எப்படியும் பழி தீர்த்துக் கொள்வது என்று தீர்மானமாக இருக்கிறாள். எந்த நிமிடத்திலும் பாபுவிற்கு ஆபத்து வரப் போகிறது. ஸ்! மறுபடியும் கத்தாதே'' என்று அவள் வாயைப் பொத்தினான் அவன்.

கண்கள் தெறித்து விழுந்து விடுகிற மாதிரி கணவனைப் பார்த்தாள் கல்பனா. ''சரி... இனிமேல் என்ன செய்யப் போகிறீர்கள்?''

''பொறுமையாய் இரு. பாபுவையே கண்ணியாக வைத்து அம்மாவின் வெறியை அடக்கப் போகிறேன்.''

பக்கத்தில் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைச் சரேலென அணைத்துக் கொண்டாள் கல்பனா. ''வேண்டாம், வேண்டாம். என் குழந்தையை ஒன்றும் செய்யாதீர்கள்''

என்று மன்றாடினாள். ''என் செல்லம்... என் உயிர்... உங்கள் அர்த்தமில்லாத பரிசோதனைக்காக அவனைப் பலி கொடுக் காதீர்கள். அதற்கு ஒரு நாளும் நான் சம்மதிக்க மாட்டேன்.''

''அமைதியாய் இரு என்று இப்பத்தானே சொன் னேன்?'' பாபுவை அவளிடமிருந்து வாங்கி மெல்லப் படுக்கையில் விட்டான். ''பாபுவுக்கு ஒரு ஆபத்தும் வராதபடி நான் பார்த்துக் கொள்கிறேன். அப்படியே வந்தா லும் பரவாயில்லை. அக்கம் பக்கத்தில் பல குழந்தை களின் உயிரைக் காப்பதற்காக நாம் நம் குழந்தையைத் தியாகம் செய்வோம்.''

கல்பனா புடவை நுனியினால் வாயைப் பொத்திக் கொண்டு விம்மி விம்மி அழுதாள். வெகு நேரம் வரை அப்படியே கட்டிலில் சாய்ந்தபடி இருந்தவள் கொஞ்சம் கொஞ்சமாகச் சரிந்து தூங்கினாள். அவளையே பார்த்த படி உட்கார்ந்திருந்தான் மாதவன். அப்படியே அவனும் தூங்கி விட்டான். எத்தனை நேரம் ஆகியிருக்குமோ தெரி யாது. சட்டெனக் கண் விழித்துப் பார்த்த போது அருகில் கல்பனாவும் இல்லை. பாபுவும் இல்லை. அறைக் கதவு திறந்திருந்தது.

ஓடிப் போய் ஜன்னல் வழியே வெளியே பார்த்தான். பாபு மாதிரி தோன்றிய ஒரு குழந்தையைத் தோளில் சாத்திக் கொண்டு ஓர் உருவம் தோட்டத்தில் போய்க் கொண் டிருப்பது போல் தோன்றியது. பிறை நிலாவின் வெளிச் சத்தில் அந்த உருவத்தின் முகம் சரியே தெரியவில்லை.

மறு நிமிடம் அவனும் தோட்டத்துக்கு ஓடினான். ''யாரது? யார் அங்கே? நில்! நில்!'' என்று குரல் கொடுத் ததும் அந்த உருவம் இன்னும் வேகமாக ஓடியது.

ஆனால் நாலே எட்டில் துரத்திப் பிடித்து விட்டான் அவன். கிட்டத்தில் சென்று பார்த்தவன் —

''கல்பனா! என்ன ஆச்சு உனக்கு? தூக்கத்தில் நடக்கிறாயா?'' மனைவியின் தோள்களைப் பிடித்து உலுக்கினான்.

''என்னை விடுங்கள்! விட்டு விடுங்கள். இங்கே இருந்தால் குழந்தையைப் பலி கொடுத்து விடுவீர்கள். நான் டாக்ஸியோ ஆட்டோவோ பிடித்து என் அம்மாவின் வீட்டுக்குப் போய் விடலாம் என்றுதான் புறப்பட்டேன். நான் போகிறேன். விட்டு விடுங்கள்'' என்று கையெடுத்துக் கும்பிட்டாள் அவள். தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்ட பாபு, பயத்துடன் அம்மாவின் கழுத்தைக் கட்டிக் கொண்டு அழலானான்.

கல்பனாவின் நிலைமையைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது அவனுக்கு. ''வா, போகலாம்'' என்று மனைவியை மெல்ல அணைத்துக் கொண்டு திரும்பினான். ''கல்பனா, இதிலே நான் பலி கொடுப்பதோ கொடுக்காததோ எதுவும் கிடையாது. அம்மாவின் வெறியைப் பற்றிச் சொன்னேன். அவள் இப்போது மனிதப் பிறவியாக இல்லை என்பதை மறந்து விடாதே. அவள் நினைத்தால் உன் அம்மா வீட்டுக்கு அல்ல, எந்தப் பாட்டனார் வீட்டுக்குப் போய் நீ ஒளிந்து கொண்டாலும் துரத்திக் கொண்டு வர முடியும். அவள் இப்போது ஒரு பேய். பிசாசு. எங்கு வேண்டுமானாலும் சஞ்சரிக்கக் கூடிய ரத்தக் காட்டேரி. புரிகிறதா?''

அவள் எதுவும் புரியாமல் தலையாட்டினாள்.

மாதவன் தொடர்ந்தான். ''அதனால்தான் சொல்கிறேன், ஒளிந்து பிரயோசனமில்லை என்று. எதிர்த்து நிற்கப் போகிறேன். உண்டு இல்லை என்று பண்ணிவிடப் போகிறேன்.''

இரண்டாம் முறையாக அன்றிரவு அவள் விசித்துக் கொண்டே கட்டிலில் படுத்தாள். அவள் கன்னத்தில் படிந் திருந்த கண்ணீர்க் கறையை மெல்லத் துடைத்து விட்டுப் பக்கத்திலேயே உட்கார்ந்தான் மாதவன்.

அன்று அவன் தூங்கவில்லை.

அன்று மட்டுமல்ல, மறுநாளும் அதற்கு மறுநாளும் கூட அவன் தூங்கவில்லை. பகல் வேளைகளில் எங்கோ சுற்றி விட்டுத் திரும்பினான்.

ஒரு நாள் அவனுக்கு என்னவோ தோன்றியது. தோட்டப் பக்கம் நடந்தான். கடைசிக் கோடியில் அவனுடைய அம்மாவின் கல்லறை அப்படியே இருந்தது. அதன் தலைமாட்டில் நடப்பட்டிருந்த ரோஜாச் செடியில் ஒரே ஒரு மலர் விரிந்து சிரித்தபடி இருந்தது. சுற்றுமுற்றும் எங்கும் அமைதி தவழ்வதாகவே தோன்றியது. இருந்தாலும் கூட ஏதோவொரு மாறுதல்—சலனம்—அவன் மனத்துக்குப் புலப் பட்டது. வெறும் பிரமை என்று உதறப் பார்த்தான். முடிய வில்லை. அந்த இடத்தில் நிற்க நிற்க அமைதியின்மை அதிகரிப்பதாகத் தோன்றியது. வீட்டுக்குள் திரும்பி விட் டான்.

''ஆவி பேசுகிறது, மீடியம் சொல்கிறது என்று நீ பாட்டுக்கு எல்லாரையும் குலை நடுங்கப் பண்ணியிருக் கிறாய். வேலைக்காரர்கள்கூட ஒருத்தன் மாற்றி ஒருத்தன்

லீவு போடுகிறான் அல்லது வேலையை விட்டே போய் விடுகிறான். கொஞ்ச நாளைக்கு இந்தப் பேச்சையெல் லாம் மூட்டை கட்டி வைத்து விட்டுக் கம்மென்றிரு'' என்று சகோதரர்கள் கண்டிப்புடன் சொன்னார்கள்.

அவர்களுடன் மாதவன் விவாதித்துக் கொண்டிருக்க வில்லை. ஒரு பெரும் பயங்கரம் விரைவில் நிகழப் போகி றது என்று மட்டும் அவனுடைய உள்மனத்துக்குத் தெரிந் தது. அப்படி நேரும்போது தான் ஏமாந்துவிடாமல் விழிப் புடன் இருந்து போராட வேண்டும் என்பதில் மட்டும் உறுதியாக இருந்தான்.

அந்தப் பயங்கரம் எப்போது வரப் போகிறது? என்ன உருவில் வரப் போகிறது? அவனுக்குத் தெரியவில்லை.

ஒரு வார காலம் அவன் இரவு நேரங்களில் கண் கொட்டாமல் இருந்தான். சிறு சலனம் கேட்டால்கூட உஷாராகி டார்ச் அடித்து வீடு முழுதும் சுற்றிப் பார்த்து விட்டுத்தான் திரும்பினான்.

முதல் இரண்டு மூன்று நாட்களுக்குக் கல்பனா தூக்கம் இழந்தவளாக, உதறும் உள்ளத்துடன் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு சிறிது சிறிதாகப் பயம் தெளிந்த வளாகத் தூங்கலானாள்.

அன்று ஞாயிற்றுக் கிழமை. டி.வி.யில் மிக நீளமான தமிழ்ப் படம். ஆங்கிலச் செய்திக்குப் பிறகும் தொடர்ந்து பத்தரை மணி சுமாருக்கு முடிந்தது. ஆனால் படம் சுவாரஸ்ய மாயிருந்ததால் எல்லோரும் விழித்துக் கொண்டு பார்த் தார்கள். அதன் பின்னரும் கால்மணி நேரம் படத்தைப் பற்றி வேடிக்கையாக விமரிசனம் செய்து கொண்டிருந்

தார்கள். மாதவனும் கல்பனாவும்கூடத் தங்கள் பிரசினை களை மறந்து சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். எல் லாரும் அவரவர் அறைகளுக்குப் படுக்கப் போய், விளக்கு கள் அணைந்து வீடு நிசப்தத்தில் ஆழ்ந்த போது மணி கிட்டத்தட்டப் பன்னிரெண்டு ஆகிவிட்டது.

பாபுவை அணைத்துக் கொண்டு படுத்த சில நிமிடங் களுக்கெல்லாம் கல்பனா உறக்கத்தில் ஆழ்ந்து போனாள். வழக்கம் போல் கொஞ்ச நேரம் மாதவன் படித்துக் கொண்டிருந்தான். டயரி எழுதி முடித்தான். மேஜை விளக்கை நிறுத்தலாம் என்று எண்ணிய போது—

ஸ்விட்சில் அவன் கை வைக்கவேயில்லை. அதற்குள் டக்கென்று ஓசை கேட்டது—யாரோ அவனுக்காக ஸ்விட்சை அணைத்தது போல. அறையில் இருள் சூழ்ந்து கொண்ட அதே சமயம், கல்பனாவையும் பாபுவையும் தன்னையும் தவிர இன்னொரு நாலாவது நபர் அங்கே நிற்பது போன்ற உணர்வு அவனுக்கு ஏற்பட்டது. மேலே சுழன்று கொண்டிருந்த மின்சார விசிறி நின்று விட்டது. மின்சாரத் தடை ஏற்பட்டிருக்குமோ என்று நினைத்தவனாக, எப்போதும் தலைமாட்டில் வைத்திருக்கும் டார்ச் விளக்கை எடுத்தான். விசையை அழுத்தினான். எரியக் காணோம். செல் தீர்ந்திருக்கும் என்று சொல்ல முடியாது. இரண்டு நாள் முந்திதான் புது செல் வாங்கிப் போட்டிருந்தான்.

நல்ல கோடைக் காலமாக இருந்தும், மின்சார விசிறி அடியோடு நின்றிருந்த நிலையிலும், அவனுக்கு ஒரு சிலீரென்ற குளிர் ஏற்பட்டது. உறை நிலையில் உள்ள பிரேதக் கிடங்கின் நடுவே நிற்பது போன்ற சில்லிப்பு அவன் ரத்தக் குழாய்களினுள் பிரவேசித்தது.

''யார்? யாரங்கே நிற்பது?'' என்று ஓங்கிய குரலில் வினவினான்.

எவ்வித பதிலும் வரவில்லை.

ஆனால் யாரோ தன்னைக் கவனித்துக் கொண்டு வேண்டுமென்றே மௌனமாக இருக்கிற மாதிரி இருந்தது. ''யார் நீ? சொல்லு! யார் நீ?'' என்று இன்னும் பலமாகக் கேட்டான்.

பிறகுதான் இன்னொரு திகைப்பு அவனுக்கு ஏற் பட்டது. முணுக் என்ற ஓசைக்குக்கூட எழுந்து விடும் வழக்கமுள்ள கல்பனா அவன் இவ்வளவு உரக்கச் சத்த மிட்ட பிறகுகூட எழுந்திராமல் படுத்திருப்பது அவனுக்கு வியப்பேற்படுத்தியது. ''கல்பனா! கல்பனா!'' என்று அவளை மெதுவே தட்டிப் பார்த்தான். சுவாசம் சீராக வந்து கொண்டிருந்தது. மிக ஆழமான நித்திரையில் அவள் மூழ்கியிருப்பது புரிந்தது. குழந்தையைப் பார்த்தான். பாபு வும் நன்றாய்த் தூங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது.

பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவனுக்குள் ஒரு கிறுகிறுப்புத் தாக்கியது. ஸ்லோவாக அணைகிற ட்யூப் விளக்குப் போல அவன் பார்வை கொஞ்சம் கொஞ்ச மாக இருளடைந்தது. வேறு ஏதோவொரு சக்தி தன் காது களையும் கண்களையும் வாயையும் பொத்துகிற மாதிரி புலன்கள் மங்கின. வலுக்கட்டாயமாகத் தன்னைத் தானே உதறிக் கொண்டு விழித்திருக்க முயன்றான்.

தோட்டத்துப் பக்கம் பார்த்திருந்த ஜன்னல் திறந்தே யிருந்தது. தொலை வானத்தில் நட்சத்திரங்களின் கண் சிமிட் டல் தவிர மொத்த உலகமும் நிசப்தத்தில் ஆழ்ந்திருக்க,

மிகக் குறைவான வெளிச்சம்தான் அறையினுள் பரவி யிருந்தது. உணர்வுகள் அடங்கிக் கொண்டே வந்த போதி லும் உடம்பைச் சிலிர்க்க வைக்கும் ஒரு தோற்றத்தை அவனால் காண முடிந்தது. வாசற் கதவைத் திறந்து கொண்டு புகை போன்றதோர் உருவம் உள்ளே நுழைவதைக் கண் டான். அது மானிட உருவம் போல இருந்தது. சிதைந்த கோலம் போல இடுப்புக்குக் கீழே கலைந்திருந்தது. மேல் புறம் தோளும் புஜங்களும் தெளிவற்று இருந்தன. ஆணா பெண்ணா என்று இனம் கண்டு கொள்ள முடியவில்லை. அதன் கால்கள் தரையில் ஊன்றியிருக்கவில்லை. அந்தி மயங்கும் வேளையில் வயல் வெளியில் காற்றுப் பரவும் போது நாற்றுக்களின் நுனிகளில் ஒரு சிலிர்ப்புப் பரவுமே அது போல ஒரு காற்றின் விசும்பலை அவன் பார்த்தான். யாரோ இழுத்து வருகிற மாதிரி அது வளைந்து நெளிந்து காற்றில் மிதந்து வந்தது. தலை மயிர்கள் துடைப்பக் குச்சிகள் போல விறைத்துக் கொண்டு நின்றன. முகத்தின் மற்ற அம்சங்கள் தெரியாவிட்டாலும் கண்கள் வெகு தீட்சண்ணிய மாக, கொள்ளிக் கட்டையின் சிவப்புடன் எரிந்தன. வாயில் உதடுகளைச் சுற்றி அடர்த்தியாக ரத்தம் தெரிந்தது.

மந்திரத்துக்குக் கட்டுப்பட்டவன் போல மாதவன் ஆடாமல் அசையாமல் பார்த்துக் கொண்டேயிருந்தான். எந்த வினாடியும் பூரண மயக்கமடைந்து கீழே விழுந்து விடப் போகிறோம் என்பது அவனுக்குச் சந்தேகமறப் புலப்பட்டது. அப்படி விழுந்தபின் என்ன விபரீதம் வேண்டுமானாலும் இங்கே நடக்கக் கூடும் என்பதையும் உணர்ந்தான். கடைசிச் சில உணர்வுகள் மிஞ்சியிருக்கும் போதே ஏதாவது செய்துவிட வேண்டுமென்று நினைத்தான்.

அப்படி அவன் நினைத்துக் கொண்டிருக்கும் போதே படுக்கையில் பாபு புரளுவதைக் கண்டான். அவனாகப் புரளவில்லை—யாரோ புரட்டுகிறார்கள்.

புரட்டுவது கல்பனா அல்ல. அவள் மறுபுறமாய்த் திரும்பிப் படுத்திருந்தாள். ''கல்பனா! கல்பனா!'' என்று மீண்டும் கூப்பிட்டுப் பார்த்தான். அவள் எழுந்திருக்க வில்லை. இன்னும் அந்த விந்தை மயக்கத்திலே சிக்கி யிருந்தாள்.

மேலும் மேலும் மாதவனின் கண்கள் பஞ்சடைந்து கொண்டிருந்தன. ஓர் அசுர முயற்சியுடன்தான் அவனால் பார்க்க முடிந்தது.

இப்போது பாபு துவண்ட மாதிரி எழுந்தான். அந்தக் கோர உருவம் குழந்தைக்கு மேலே கவிழ்ந்த மாதிரி நின் றிருந்தது. அதன் கைகள் கண்ணுக்குத் தெரியவில்லையே தவிர, யாரேனும் குழந்தையை இடுப்பைச் சுற்றி அணைத்துத் தூக்கினால் எப்படி வளையுமோ அதுபோல பாபு துவளுவதைப் பார்த்தான். குழந்தையின் முதுகை மட்டுமே ஒரு கை தாங்கிக் கொண்டிருக்கிற மாதிரி தலை பின்புறம் தொங்கிக் கொண்டிருந்தது. வெய்யில் கால மாகையால் குழந்தைக்குச் சட்டை போட்டிருக்கவில்லை. ஆகவே அதன் கழுத்து, மெல்லிய நரம்புகள் ஓடுவது தெரியுமளவுக்கு வாடிய முள்ளங்கித் தண்டாய் வெளுத் திருந்தது.

மல்லாந்து துவண்டிருக்கும் குழந்தையை யாரே னும் முத்தமிடுவதற்காக உயர்த்தினால் எப்படிக் கொஞ்சம் கொஞ்சமாய் உயருமோ அப்படி அதன் தேகம் எழும்பியது.

இன்னும் கண்ணிமைக்கும் நேரம் தாமதித்தாலும் தான் சக்தியற்றுப் போய் விடுவோம் என்பது புரிந்தது மாதவனுக்கு. அவனுடைய கைகளும் கால்களும் அச்சத் தினால் வெடவெடத்தன. காய்ந்த பாறாங்கல் போல நாக்கு வரண்டு உலர்ந்தது. இதயம் ரொம்ப நேரத்துக்கு ஒரு முறைதான் அடித்துக் கொள்கிற மாதிரி இருந்தது. அந்த கோர உருவத்தை மறுபடி நோக்கினான். ஒரு விகார மான இளிப்பு அதன் வாயைச் சுற்றிப் பரவியிருந்தது. கண்கள் திருப்தியுடன் சிரித்துக் கொண்டிருந்தன.

அதன் வாய்ப் புறத்தை நோக்கி அங்குலம் அங்குல மாய்ப் பாபுவின் கழுத்து மேலெழும்பியது. அந்தப் பிஞ்சு கழுத்துக்கும் அந்தக் காட்டேரி வாய்க்கும் மயிரிழை இடைவெளியே இருந்த போது—

மாதவன் தன்னுடைய சக்தியனைத்தையும் திரட்டி, ''அம்மா! நிறுத்து! வேண்டாம் அம்மா! அது உன் பேரன்! உன் பிள்ளையின் பிள்ளை! நிறுத்து!'' என்று கூவினான்.

## 20

குழந்தை அந்தரத்தில் அப்படியே நின்றது. கண்ணுக்குத் தெரியாத கையொன்று அதைத் தூக்கி எடுக்க நினைக்கையில் மாதவனின் குரல் கேட்டுத் தயங்கி நிற்கிற மாதிரி தோன்றியது. முழுதும் படுக்காமல், முழுதும் எழுந்திருக்காமல் ஈஸி சேரில் சாய்ந்திருக்கிறாற் போல் அது வினோதமான நிலையில் அப்படியே தூங்கிக் கொண்டிருந்தது. தலை துவண்டு சரிந் திருந்தது.

''அம்மா!'' என்று அதட்டியதற்குப் பலன் இருப்பதை உணர்ந்தான் அவன். அந்தப் பயங்கரமான சூழ்நிலையிலும்

அவன் மனத்தில் கடுகத்தனை மகிழ்ச்சி ஏற்பட்டது. பக்கத்தில் படுத்திருக்கும் கல்பனாவைப் பார்த்தான். அவள் அதே விந்தை மயக்கத்தில் கண்ணைத் திறவாமல் கிடந்தாள். நல்ல வேளை, குழந்தை பாபு படும் பாட்டைப் பார்த்திருந்தால் அவளுக்கு மாரடைப்பு ஏற்பட்டிருக்கும் என்று ஒரு வினாடி எண்ணியவனாக, மறுபடியும் பாபுவைப் பார்த்தான்.

அவன் கவனம் சற்றே சிதறியதாலோ என்னவோ, குழந்தையின் முகம் இம்மியளவு உயர்த்தப்படுவது மாதிரி இருந்தது. அந்தக் கோர உருவத்தின் முகத்தில் மீண்டும் இளிப்பு பரவியது.

''அம்மா! ஒரு நிமிஷம் நில். நான் சொல்வதைக் கேள்!'' என்று இரண்டாம் முறையாக அதட்டினான் அவன்.

'அது' தன் கொள்ளிக் கண்ணால் அவனையே பார்த்து —பார்ப்பது போல் அவனுக்குத் தோன்றியது.

''அம்மா! உன்னை என் அம்மா என்று சொல்லிக் கொள்ளவே எனக்கு வெட்கமாக, அருவருப்பாக இருக்கிறது. மனிதப் பிறவியாக உயிருடன் இருந்த போது பாசமும் அன்புமாக இருந்த அம்மாவா நீ! ஒரு நாளும் இல்லை. நீ பேய்! பிசாசு! ரத்தக் காட்டேரி! குழந்தைகளின் ரத்தத்தைக் குடித்து அவர்களைச் சாகடிக்கும் ரத்தக் காட்டேரி! அம்மா! ரத்தக் காட்டேரியாக யார் மாறுவார்கள் தெரியுமா? நான் படித்திருக்கிறேன் அதைப் பற்றி. கெட்ட ஒழுக்கத்தில் திரியும் ஆணுக்கும் பெண்ணுக்கும் பிறந்து, தானும் கெட்ட ஒழுக்கத்தில் யார் மிதக்கிறார்களோ அவர்கள்தான் இறந்த பின்னர் ரத்தக் காட்டேரியாக உலாவுவார்களாம். நீ அப்படிப்பட்டவளா அம்மா? சொல்லு.

என் தாத்தாவும் பாட்டியும் திருட்டு வாழ்க்கை நடத்திய வர்களா? சொல்லு!''

பாபு இப்போது மெல்ல மெல்லத் தரையை நோக்கித் தாழ்ந்தான். அதே கண்ணுக்குத் தெரியாத கரம் அவனைப் படுக்கையில் மெதுவே கிடத்தியது.

எனினும் மாதவன் தன் பேச்சை நிறுத்தவில்லை. ''அம்மா! நீ பேசாமல் எங்கிருந்து வந்தாயோ அங்கேயே போய்விடு. அப்பாவின் பேச்சைக் கேட்காதே. சாகவே விருப்பமில்லாதிருந்த அவர், பாபுவினால் எதிர்பாராத முறையில் இறந்ததால் உலகத்திலுள்ள குழந்தைகள் மேலெல்லாம் வெறுப்பாக இருக்கிறார். உன்னை வைத்துக் குழந்தைகளின் உயிரைக் குடிக்கிறார். நீ அவருக்குக் கருவியாக இருக்காதே...''

பாபு இப்போது முற்றுமாகத் தரையோடு தரையாகப் படுத்து விட்டான். அவன் முகம் தெளிவுடன் இருந்தது. கவலையற்றுத் தூங்கும் குழந்தையின் நிம்மதி அவன் நித்திரையில் தெரிந்தது.

அதற்காக அந்த உருவத்திடம் நன்றி சொல்ல நினைத் தான் மாதவன். அதே சமயம், தடதடவென்ற அந்த அறை பூகம்பத்தில் சிக்கிய மாதிரி ஆடியது. ஊய் ஊயென்று எங்கிருந்தோ பேய்க் காற்று அடித்தது. ஜன்னல் கதவு படாரென்று திறந்து மூடிக் கொண்டது.

பாபுவின் அருகே கவிழ்ந்திருந்த அந்த உருவத்தைக் காணவில்லை. அது வெளியேறும் போது தாங்கவொண் ணாத ஆத்திரத்துடன் அமர்க்களப்படுத்தி விட்டுப் போகிறது என்று ஊகித்தான் மாதவன். அது எங்கே போகிறது என்

பதையும் கண்டு கொள்ள அவனுக்கு ஆவல் ஏற்பட்டது. ஆனால் அச்சமாகவும் இருந்தது.

கல்பனா இன்னும் எழுந்திருக்கவில்லை. வருவது வரட்டும் என்று அறைக் கதவைத் திறந்து கொண்டு தோட்டத்துக்கு ஓடினான் மாதவன். அந்த ஒரு நிமிட தாமதத்துக்குள் ஒரு விபரீதம் நடந்து விடும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

அவன் தோட்டத்தில் நுழையவும் ஒரு பெண் குரல், ''ஐயையோ! என் பிள்ளை! யாரோ அதைத் தூக்கிக் கிட்டுப் போறாங்களே! என் பிள்ளை!'' என்று வீரிடவும் சரியாயிருந்தது.

சில்லென்று காற்று வீசியதே தவிர, தோட்டம் இருளில் ஆழ்ந்திருந்தது. வாசல் கேட்டருகே ஒன்றும், உள்ளே வீட்டருகே ஒன்றுமாக இரண்டு விளக்குகள் உண்டு. இரண்டிலும் விளக்கு எரியவில்லை. கூக்குரல் வந்த திசையை நோக்கி அவன் ஓடிய போது நிலா ஒரு கீற்றாக வெளிப்பட்டு ஓரளவு வெளிச்சம் கிடைத்தது.

ஓடியவன் தடக்கென்று நின்றான். அதோ! சிறிய மூட்டை போலக் கிடப்பது என்ன?

அவனுடைய ரத்த நாளங்கள் உறைந்து போயின. தலை பம்பரத்தைக் காட்டிலும் வேகமாகச் சுழன்றது.

இரண்டு மூன்று வயதுக் குழந்தையொன்று அங்கே அலங்கோலமாகக் கிடந்தது. அயர்ந்து தூங்கிக் கொண் டிருந்த குழந்தையை வெடுக்கென யாரோ பறித்து வீசி யெறிந்த மாதிரி இருந்தது. பார்த்த மாத்திரத்திலேயே மாதவன் புரிந்து கொண்டு விட்டான்—அதன் உடம்பில் உயிர் இல்லையென்பதை.

*யார்? யார் இந்தக் குழந்தை? ஒரு பெண் கூச்சலிட்டாளே...*

*அலறிப் புடைத்துக் கொண்டு தோட்டக்காரனின் மனைவி ஓடிவந்தாள். ''என் பிள்ளை... என் குழந்தை...'' என்று கதறிக் கொண்டு ஓடிவந்தவள், அள்ளியெடுத்துக் கொண்டாள். அணைத்தவுடனேயே அவளுக்கும் புரிந்து விட்டது. முகத்தைப் பார்த்தாள். ''ஐயையோ! என் ராசா!'' என்று அவள் வீரிட்ட கூச்சல் நாடி நரம்புகளைப் பொடித்துத் தூளாக்கி விடும் போல் இருந்தது.*

தோட்டக்காரனும் ஓடிவந்தான். ''என்ன செல்லாயி ... என்ன...''

*பங்களாவுக்குள் இருந்தவர்களும் கண்ணைத் தேய்த்துக் கொண்டு மிரள மிரள வந்தார்கள்.*

''குடிசைக்கு வெளியே ராசாவைக் கட்டிக்கிட்டுப் படுத்திருந்தேனுங்க. யாரோ அதை என் கையிலேருந்து பிடுங்குகிற மாதிரி இருந்திச்சு. தூக்கிக்கிட்டு ஓடினாங்க. துரத்திக்கிட்டு ஓடியாந்தேன். அதுக்குள்ளே என் செல்லம் ... என் ராசா... என் கண்ணு...'' தோட்டக்காரனின் மனைவி துயரத்தை அடக்க முடியாமல் நீளமாய்ப் பிரலாபித்தாள்.

''கொஞ்சம் நகரும்மா...'' என்று அவளை நெருங்கினான் மாதவன். மார்போடு இறுக்கிக் கொண்டிருந்த குழந்தையை அவளிடமிருந்து விலக்கி, உற்று நோக்கினான்.

அந்தப் பிஞ்சுக் கழுத்தில் இரண்டு ரத்தப் பொட்டு தெரிந்தது.

அவனுக்குப் புரிந்தது.

பாபுவை விட்டு விடும்படி கெஞ்சலாயும் அதட்டலாயும் சொன்னதற்கு இணங்கி, ரத்தக் காட்டேரி அவனை விட்டு விட்டது. ஆனால் ஆத்திரம் கட்டுக் கடங்காமல் திரும்பும் போது, வழியில் இருந்த இந்த அப்பாவிக் குழந்தையைப் பார்த்திருக்கிறது. இதன் உயிரைக் குடித்துத் தன் ரத்தப் பசியைத் தணித்துக் கொண்டிருக்கிறது.

மாதவன் திரும்பிப் பார்த்தான். இரண்டு சகோதரர்களும் ஒன்றும் தோன்றாமல் அருகில் நின்றிருந்தார்கள்.

''அண்ணா! என்னுடன் வாருங்கள்'' என்றான்.

அவர்களுடன் மறுகோடியில் இருந்த அம்மாவின் கல்லறையருகே போய் நின்றான் மாதவன்.

யாரோ புரண்டு எழுந்தது போலத் தரையில் மண் கலைந்திருந்தது. கல்லறையின் மீது கல்பனா தினமும் கொண்டு வந்து வைக்கும் பூங்கொத்து தள்ளிப் போய் விழுந்திருந்தது.

ஒரு கணம் அந்த இடத்தை வெறித்துப் பார்த்த மாதவன், ''அண்ணா, ஆட்களைக் கூப்பிடுங்கள்'' என்றான் உறுதியான குரலில்.

''எதற்கு?'' என்ன செய்யப் போகிறாய்?''

''அம்மாவின் சமாதியைத் திறக்க வேண்டும். சவப் பெட்டியை உடைத்தாக வேண்டும்.''

அதிர்ந்து போனார்கள் மாதவனின் சகோதரர்கள். ''உனக்கென்ன, பைத்தியமா பிடித்திருக்கிறது? சமாதி புனிதமானது. அதை ஒருநாளும் திறக்கக் கூடாது. மகா பாவமான காரியம்!'' என்றார் மூத்த அண்ணா.

''அதைத் திறப்பதுதான் நாம் இப்போது செய்யக் கூடிய புண்ணியமான காரியம்! திறக்காமல் விட்டு வைப் பதுதான் பெரும் பாவம்!''

''வேண்டாம், மாதவா! சொல்வதைக் கேள்'' என்று சின்ன அண்ணனும் தடுத்தான்.

''ஆட்கள் வேண்டாம்.. நானே செய்கிறேன்!'' நாலே எட்டில் ஷெட்டுக்குப் போய்க் கடப்பாரை எடுத்துக் கொண்டு திரும்பினான்.

வீட்டிலுள்ள அனைவரும் சூழ்ந்து நின்று பார்ந் திருக்க, கிடுகிடுவென்று சமாதிக் கல்லைப் பெயர்த்தான். அதன் கீழேயிருந்த பூமியைக் கொத்தி மண்ணை அப்புறப் படுத்தினான்.

சவப்பெட்டி தெரிந்தது. ஆனால் அதன் பலகைகள் விலகினாற் போலிருந்தன. ஆணிகள் கழன்று கிடந்தன.

குழிக்குள் இறங்கினான் மாதவன். அவன் மேனி யெங்கும் அச்சம் காரணமாக முத்து முத்தாய் வியர்த்திருந் தது. ரோடு இஞ்சின் மாதிரி தன் இதயம் அடித்துக் கொள் வதை அவனால் உணர முடிந்தது. வினாடி நேரத்துக்குக் கடவுளைத் தியானித்தான். பிறகு மூச்சைப் பிடித்துக் கொண்டு சவப்பெட்டியின் பலகையைச் சரேலென்று அப்புறப்படுத்தினான்.

மாதவனும், பள்ளத்துக்கு மேலே நின்றிருந்த அத்தனை பேரும் குனிந்து பார்த்தார்கள்.

மூன்று மாதங்களுக்கு முன்பு இறந்து போய்ப் புதைக்கப்பட்டிருந்த சடலம், எவ்வளவு கோரமாகச் சிதிலமடைந்திருக்க வேண்டும்? அப்படி இருக்கவில்லை.

சற்று முன்புதான் புதைக்கப்பட்ட மாதிரி புதிதாக இருந்தது. சவத்தின் நாற்றம் சற்றும் தெரியவில்லை. அது மட்டுமல்ல. உடம்பு வெளுக்கவில்லை. தேகத்தில் ரத்த ஓட்டம் இருக்கிற மாதிரி பளபளப்புடன் காணப்பட்டது. தலை முடி முன்னைவிட அதிகமாகவும், நகங்கள் முன்னைக் காட்டிலும் நீளமாகவும் வளர்ந்திருப்பது தெரிந்தது. கண்கள் அகலத் திறந்திருந்தன. ஆனால் விழிகள் அசையவில்லை.

பரபரப்பினால் மார்பு அடைக்க அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கையில், அதன் முகத்தினருகே குனிந்து நோக்கினான் மாதவன். அருவருப்பும் அச்சமும் அவனையும் மீறி வீலென்று கத்த வைத்து விட்டன.

அப்புறம்தான் மற்றவர்களும் கவனித்தார்கள்.

விகாரமாக இளித்திருந்த வாயின் ஓரத்தில் ரத்தக் கறை காணப்பட்டது!

ஒரே தாவலில் மேலேறி வந்தான் மாதவன். ''அண்ணா! இனி ஒரு கணமும் இந்தப் பிணத்தை இப்படி வைத்திருக்கக் கூடாது! உடனே தகனத்துக்கு ஏற்பாடு செய்யுங்கள்!'' என்றான்.

''மாதவா! என்ன, நீ பாட்டுக்குத் தப்புக்கு மேலே தப்பாய்ச் சொல்லிக் கொண்டே போகிறாய்? விளையாட்டில்லை இதெல்லாம்'' என்று மூத்த அண்ணன் கோபித்தான்.

''நானும் விளையாடவில்லை அண்ணா'' என்றான் மாதவன் அமைதியாக. ''இதோ இங்கே கிடப்பது நம் அம்மாவின் புனிதமான உடல் என்று நினைத்து நீங்கள்

பேசுகிறீர்கள். இல்லை. இது ரத்தக் காட்டேரி. கல்லறையிலிருந்து புறப்பட்டு அக்கம் பக்கத்திலுள்ள குழந்தைகளின் ரத்தத்தை உறிஞ்சி, உயிரைக் குடித்து விட்டுத் திரும்புகிற கோரமான பிறவி. இப்படிப் பிறர் ரத்தத்தைக் குடித்துக் குடித்தே தன் சடலத்தைக் காப்பாற்றிக் கொள்கிறது. இதை விடக் கூடாது. நீங்கள் விட்டாலும் நான் விடத் தயாராயில்லை.''

அப்புறமும் அவர்களுக்கு விருப்பமில்லை. ஆனால் அவனுடைய பிடிவாதம் அசைக்க முடியாததாக இருந்தது. தானே புரோகிதர்களையும் மற்ற ஆட்களையும் தருவித்தான். பல்லக்குத் தயாரிக்கச் சொல்லி, சடலத்தை அப்புறப்படுத்தி, சுடுகாட்டுக்கு எடுத்துப் போய்த் தகனம் செய்தான்.

கொள்ளி வைக்கும் வரை அதன் வாயும் இளிப்பும் கண்களும் அப்படியே இருந்தன. நெருப்பின் முதல் சுரீர் தேகத்தில் பட்ட மாத்திரத்தில் ஒரு பெரும் அலறல் கேட்டது. அது மனிதக் குரலாகத் தெரியவில்லை. எங்கிருந்து வருகிறதென்பதும் புரியவில்லை. வரட்டிகளும் கட்டைகளும் சரிந்தன. சிதை தடதடவென்று ஆடியது. சிதையிலிருந்து சவம் எழுந்திருக்க முயலுகிற மாதிரி தோன்றியது. அப்படி ஏதாவது நேரும் என்று எதிர்பார்த்தது போல் மாதவன் அதன் காலையும் ஒரு வேலைக்காரன் அதன் தலையையும் அழுத்திக் கொண்டார்கள். நீல நிறமாய்க் குபீரென்று ஒரு ஜ்வாலை எழுந்து மறைந்தது. பிறகு எல்லாம் ஓய்ந்து விட்டன. பாக்கியலக்ஷ்மி சாம்பலாகி விட்டாள்.

மாதவன் கண்ணைத் துடைத்துக் கொண்டு வீடு திரும்பினான். அதன் பிறகு அவன் குடும்பத்தில் எந்த வித விபரீதமும் நிகழவில்லை.

நரீஷ் சொல்லி முடித்த போது நாங்கள் மந்திராலயம் ராகவேந்திர சுவாமிகளின் கோயிலைக் கடந்து கொண் டிருந்தோம். அழகிய சிறிய கோவில். முன்புறத்தில் இருந்த விஸ்தாரமான திறந்த மேடையில் குழந்தைகளும் பெரியவர்களுமாகக் கும்பல் கும்பலாய் உட்கார்ந்திருந் தார்கள். இடப்புறம் நீளவாட்டில் அமைந்திருந்த பூங்கா விலும் கூட்டம் நிறைந்திருந்தது. அதை ஒட்டினாற் போலக் கார்களும் வேன்களும் நிறுத்தப்பட்டிருந்தன. டணார் டணார் என்று மணியோசை காற்றில் மிதந்து வந்தது.

''முதலில் ஸ்நானம்'' என்றான் நரீஷ். பின்னர்தான் பார்த்தேன்—எதிரில் பல பேர் ஈர வேட்டியும் ஈரப் புடவையுமாகக் குளித்து விட்டு வருவதை.

கோதாவரி நதியில் கொஞ்சமாகத் தண்ணீர் சலசலத்துக் கொண்டிருந்தது. என்ன அகன்ற ஆறு! மென்மையான குளிர்ச்சி காலின் வழியே உடம்பெங்கும் ஏறிப் புத் துணர்ச்சி கொடுத்தது. பைகளை மணற்பரப்பில் வைத்து விட்டு இடுப்பளவு ஆழத்துக்கு இறங்கினோம். கோவில் இருந்த திசையை நோக்கிக் கும்பிட்டேன். மறந்திருந்த என் சொந்தப் பிரச்னைகள் மொத்தமும் குவியலாய் நினைவுக்கு வந்தன.

''நரீஷ். நான் எதற்காக இங்கே வந்தேனென்றால் ...'' என்று ஒரு பெருமூச்சுடன் ஆரம்பித்தேன். சட்டென்று அவன் தடுத்தான். ''என்னிடம் சொல்லாதே என்று எவ் வளவு தடவை உனக்குச் சொல்வது, ராஜா? உன் பிரச் னையை மானிடக் காதில் போடாதே. கோயிலில் வீற்றிருக் கிறாரே, அந்தத் தெய்வத்திடம் மட்டுமே சொல்லு'' என் றான்.

நீரில் முங்கவிருந்தேன். ''இரு, சங்கல்பம் சொல்கி றேன். கையை இப்படி வைத்துக் கொள்'' என்று என் இடது உள்ளங்கையின் மீது வலது உள்ளங்கையைப் பொத்தி இடுப்பின் ஓரமாக வைத்துக் கொள்ளச் சொன்னான்.

**'...ப்ரஸித்த த்ரயம்பகேசுவர ஸன்னிதானாத் ப்ரவாஹ்யமாணாயாம் மகாநத்யாம் அனன்ய ஸத்ருச் யாயாம் கோதாவர்யாம் புண்ய ஸ்னானம் அஹம் கரிஷ்யே...'**

சங்கல்பம் சொல்லி, ஸ்நானத்தை முடித்துக் கொண்டு கரையேறினோம். துவட்டிக் கொண்டு பார்வையை உயர்த்திய அதே வினாடி, தண்ணீருக்குள் மூழ்கியிருந்த ஒரு பெண் குபுக்கென்று தலை நிமிர்ந்து எழுந்து கொண் டாள். அவள் முழுகிய போது பார்க்காமல், மேலே எழுந்து கொண்ட போது மட்டுமே பார்த்ததால் எனக்கும் நரீஷுக் கும் சிரிப்பு வந்தது.

''தண்ணீருக்குள்ளேயிருந்து திடுப்பென்று முளைத்த மாதிரி இல்லை?'' என்றேன்.

''தண்ணீருக்குள்ளேயிருந்து முளைத்து எழுந்த பெண்கள் நிஜமாகவே உண்டு'' என்ற நரீஷ் தன் அடுத்த கதையை விவரிக்கலானான்.

## காணாமற் போன காஞ்சனா

சென்னை—தர்மபுரி சொகுசு பஸ் கிருஷ்ணகிரியை அடைந்த போது, அந்த நேரத்தை விடிகாலம் என்றும் சொல்ல முடியாது, நள்ளிரவு என்றும் சொல்ல முடியாது. ஓட்டலிலிருந்து வந்த ரெக்கார்டு சத்தமும் டிரைவர்

கீழிறங்கும் போது கதவைச் சாத்திய மடார் ஓசையும் விக்ரமை விழிக்க வைத்தன. டீ குடிக்கவும் சிகரெட் பிடிக்கவும் பெரும்பாலோர் எழுந்து போனார்கள். அவன் இறங்கவில்லை. கண் இமைகளில் கல்லைக் கட்டின மாதிரி தூக்கம் அழுத்திக் கொண்டிருந்ததே காரணம்.

பஸ் இஞ்சினின் புர்ருடன் கூடவே, ''சார், கொஞ்சம் ஒத்திக்குங்க'' என்ற கண்டக்டரின் குரலும் கேட்டது. அரைக் கண்ணை விழித்துப் பார்த்தான். பஸ்ஸுக்குள்ளிருந்த மங்கலான வெளிச்சத்தில், ஐம்பது வயது மதிக்கத்தக்க ஓர் அம்மாளும், இருபது வயதில் ஒரு குமரியும் அவன் பக்கத்தில் வந்து உட்காருவதைக் கண்டான்.

பஸ் புறப்பட்டது. விளக்குகள் அணைக்கப்பட்டன. அவனுக்கு அடுத்தாற் போல் பெரியம்மாள் உட்கார்ந்திருந்தாள். அவளையும் தாண்டி அந்தப் பெண்.

சில நிமிடங்களில் ஒரு மெல்லிய கை அவன் தோளை மெல்லத் தட்டியது.

கனவா, நனவா? திடுக்கிட்டுக் கண் விழித்தான். அம்மாளின் முதுகுக்குப் பின்னாக அந்தக் குமரியின் கை அவன் தோளருகே நீண்டிருந்தது. அவள் கையில் ஒரு காகிதத் துண்டு இருந்தது. அதை அவனிடம் ரகசியமாகக் கொடுக்க அவள் முயலுகிறாள்!

## 21

**வி**க்ரமுக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை. ஜன்னலோர சீட்டில் உட்கார்ந்திருந்ததால், முகத்திலடிக்கும் காற்றில் நன்றாய்த் தூங்கி விட்டோம் என்று எண்ணிக் கொண்டான். அந்தத் தூக்கத்தின் நடுவே இப்படி ஒரு சொப்பனம் போலிருக்கிறது என்று நினைத்தான்.

ஆனால் நீண்டு வந்து அவன் தோளைத் தொட்ட கை அப்படியே இருந்தது. பஸ்ஸின் நீல விளக்கில் அந்தக் கையின் பொன் நிறமும் வளையலும் உருட்சியும் திரட்சியும் அப்படியே இருந்தன. ஆட்காட்டி விரலுக்கும் நடு விரலுக்கும் நடுவே அவள் பிடித்திருந்த காகிதத் துண்டு அப்படியே இருந்தது.

அவன் செயலற்று இருப்பதைக் கண்டு அவள் தன் கையைப் பின்வாங்கி விடவில்லை. மறுபடியும் மறுபடியும் அவன் தோள்களைத் தட்டி—தட்டி என்றுகூடச் சொல்ல முடியாது. விரல் நுனியால் சுரண்டி—அவனை எழுப்பிக் கொண்டிருந்தாள்.

இருட்டில் அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். இரண்டு பெரிய விழிகள் தன்னைக் கெஞ்சலாகப் பார்த்துக் கொண்டிருப்பதை உணர முடிந்தது. பஸ்ஸின் காற்றில் படபடத்த அவளுடைய கூந்தலின் இழைகள், வாங்கிக் கொள், வாங்கிக் கொள் என்று அவனை வற்புறுத்துகிற மாதிரி இருந்தது.

தன்னை ஒட்டினாற் போல—தனக்கும் அந்தப் பெண்ணுக்கும் நடுவே—உட்கார்ந்திருக்கிற பெண்மணியைக் கவனித்தான். அவள் தலை ஆழ்ந்த தூக்கத்தில் ஆடிக் கொண்டிருந்தது. கறுப்பு நிறம் என்பது தெரிந்தது. லட்சணமான முகமல்ல. ஒருவிதக் கண்டிப்பும் கடுமையும் தெரிந்தன.

அக்கம் பக்கம் பார்த்துக் கொண்டான். ஓடுகிற பஸ்ஸுக்குள் அந்த விடியற்காலை சிலுசிலுப்பில் இப்படியொரு ரகசிய நாடகம் அரங்கேறிக் கொண்டிருப்பதை யாரும் கவனிப்பதாகத் தெரியவில்லை. எதிரே வரும் லாரிகளின் விளக்குகள் மின்னலடிக்கிறாற் போல் வீசுகின்ற

வெளிச்சத்தையும், பஸ் டிரைவர் கியர் மாற்றும் போது உண்டாகும் சுருதி மாற்றத்தையும் தவிர உலகமே சலன மற்று, நிசப்தமாகத் துயின்று கொண்டிருக்கையில், தனக்கு மட்டும் இந்த விசித்திர அனுபவம் நேர வேண்டுமா என்று அவன் வியந்து கொண்டிருந்த போதே, மறுபடி யும் அந்தப் பூ விரல்கள் அவனைத் தட்டின.

தயங்கிக் கொண்டே அதைப் பெற்றுக் கொண்டான். தாங்க்ஸ் என்று சொல்லுகிற மாதிரி, தன் ஆறுதலைத் தெரிவித்துக் கொள்கிற மாதிரி, அவளுடைய இரண்டு விரல்களும் அவன் தோள் புறத்தை ஒரு முறை அழுத்தி விட்டுப் பிரிந்தன. அழுத்திய இடத்தில் பன்னீரையும் சந்தனத்தையும் தெளித்து விட்டாற் போன்ற குளுமை பரவி அவன் இதயத்தில் ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்தியது.

வாங்கிக் கொண்டு விட்டானே தவிர, அடுத்து என்ன செய்வது என்று புரியவில்லை. பிரித்துப் பார்த்தான். ஏதோ எழுதியிருக்கிற மாதிரி இருந்தது.

முகங்களையே சரியாகப் பார்க்க முடியாத இந்த இருட்டில் ஒரு காகிதத் துண்டில் என்ன எழுதியிருக்கிறது என்று எப்படிப் படிப்பது? ஏதாவது ஊரின் வழியே பஸ் ஓடும் போது, அழுது வடியும் சாலை விளக்குக் கடுகத்தனை வெளிச்சம் கொடுக்கும். காகிதத்தை ஜன்னலுக்கு வெளியே நீட்டிப் பார்ப்பான். பென்ஸிலால் எழுதியிருப்பதும் 'ஆ' என்ற முதல் எழுத்தும் புலப்படும். அதற்குள் பஸ் அந்த வெளிச்சத்தைத் தாண்டி விடும். எதிரே வரும் வண்டி களின் ஒளியும் அதே வேகத்தில் மறைந்து விடும்.

குனிந்து அவள் பக்கம் திரும்பி நோக்கினான். அவள் அவனைப் பார்த்துக் கொண்டிருக்கவில்லை. தன் எண்ணம்

நிறைவேறி விட்டாற் போல அவள் முகத்தில் ஒரு திருப்தி பரவியிருந்தது. அந்தத் திருப்தியுடன் கண்களை மூடி யிருந்தாள்.

கடிதத்தைப் பெறுமுன் இருந்த குறுகுறுப்பு இப் போது பத்து மடங்காகப் பெருகியிருந்தது. அந்தக் கடிதத் தில் ஏதோ எழுதியிருக்கிறாள்—'ஆ' என்று ஆரம்பிக்கிறது. என்ன 'ஆ'?

விக்ரமுக்கு மண்டையைக் குடைந்தது. அவள் என்ன தான் எழுதியிருப்பாள் என்பது மட்டுமல்ல. அதெப்படி பஸ்ஸில் இவன் வருவான் என்று அவளுக்குத் தெரியும்? அவள் பஸ் ஏறிய பிறகு, பஸ் ஓடிக் கொண்டிருக்கும் போது எதுவும் எழுதியிருக்க முடியாது. அதுவும் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவளுக்குத் தெரியாமல் எழுதுவது என்பது நடக்கவே நடக்காத சங்கதி. முன்னதாகவே எழுதி எடுத்து வந்திருந்தாள் என்றால், நம்மையும் நமது வருகை யையும் பற்றி இவளுக்குத் தெரிந்திருக்கவே முடியாதே? வேறு யாரிடமோ தர வேண்டிய கடிதத்தை இருட்டில் ஆள் பிசகாக நம்மிடம் தந்து விட்டாளோ?

நல்ல வேளை குழப்பத்தில் அவன் தலை வெடித்துப் போகு முன்னர் பஸ்ஸின் வேகம் குறையத் தொடங்கியது. மறுபடியும் பஸ் நின்றது. குழல் விளக்குகள் போட்ட கடைகள் சாலையோரத்தில் தெரிந்தன. பல லாரிகள் அங்கே நின்றிருந்தன. கடைகளில், தோசைக் கல்லைத் துடுப்புக் கொண்டு டங்டங்கும் டீ கிளாஸ்களை ஸ்பூன்கள் குடைந் தெடுக்கும் கடகடாக்களும் துல்லியமாய்க் கேட்டன.

பஸ் நின்றது.

''அஞ்சு நிமிஷம் நிற்கும் சார். காபி சாப்பிடறவங்க சாப்பிடலாம்'' என்று தூக்கக் கலக்கப் பிரயாணிகளுக்கு அறிவித்து விட்டு இந்தப் பக்கம் கண்டக்டர் இறங்கினார். அந்தப் பக்கம் டமாலென்று கதவைச் சாத்தி விட்டு டிரைவர் குதித்தார்.

சட்டென்று அவள் எழுந்து கொள்ள முனைந்தாள். அதற்குள் அந்த அம்மாள், ''குணா, காபி சாப்பிட்டு விட்டு வரலாம் வா'' என்று தன் அருகிலிருந்த பெண்ணைத் தொடையில் தட்டி எழுப்பினாள்.

குணா! அழகான பெயர். குணவதி என்கிற பெயரின் சுருக்கமாக இருக்குமோ? கண்ணைக் கசக்கி விட்டுக் கொண்டு எழுந்து கொள்ளும் அவளைப் பார்த்தான். அவன் முகத்தையும் அவன் கையிலிருக்கும் காகிதத் துண்டையும் இமைக்கிற நேரம் மாறி மாறிப் பார்த்து விட்டுப் பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள் அவள். பஸ்ஸுக்குள்ளும் விளக்குகள் போடப்பட்டு விட்டதால் குணா என்ற அந்தக் குமரியின் முழு யௌவனத்தையும் அவனால் காண முடிந்தது. நல்ல சிவப்பு நிறம். காதிலும் கழுத்திலும் கையிலும் சிம்பிளாக அணிந்திருந்த போதிலும் அதில் ஒரு டேஸ்ட் தென்பட்டது. படித்தவள் என்பது முகத்தில் எழுதி ஒட்டியிருந்தது. மெல்லிய உதடுகளின் ஓரத்தில் ஒரு சோகம் தென்பட்டது. கண்கள் துன்பத்தினால் தோண்டப் பட்ட மாதிரி ஆழமாக இருந்தன.

அவர்களை ஒட்டினாற் போலவே அவனும் விரைவாகப் பின்தொடர்ந்தான். பஸ்ஸின் படிக்கட்டை நெருங்கிய போது குணா தன் புடவையைத் திருத்திக் கொள்கிற சாக்கில் ஒரு வினாடி தாமதித்து, அந்த அம்மாளை முன்னே

செல்லும்படி செய்து, தான் பின் தங்கினாள். புடவை நுனிகளை நீவி விட்டுக் கொள்கிற மாதிரி குனிந்து விழி களை உயர்த்தி அவனைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் ஒரு தீனமான மன்றாடல் புலப்பட்டது. 'என்னை அவ ளிடம் காட்டி விடாதே' என்று விண்ணப்பிக்கிறாற் போல் அவள் விழிகள் நகர்ந்தன. அரை வினாடி கூட இருக்காது. அவள் இறங்கிச் சென்று பெரியவளுடன் சேர்ந்து கொண்டு விட்டாள்.

அவன், கூட்டமில்லாத ஒரு டீக்கடையைத் தேர்ந் தெடுத்தான். ஒரு டீ போடும்படி சொல்லி விட்டு, பக்கத் தில் யாருமில்லையென்று நிச்சயம் செய்து கொண்ட பின் அந்தக் காகிதத்தைப் பிரித்தான்.

பென்ஸிலால் தான் எழுதியிருந்தது. முதல் எழுத்து 'ஆ' தான். அதுவரை அவன் ஊகித்தது சரியே. முழு வாக்கியம்—

''ஆபத்தில் சிக்கியிருக்கிறேன். காப்பாற்றுங்கள்.''

ஒவ்வொரு எழுத்தையும் திரும்பத் திரும்பப் பார்த் தான். அதேதான். 'ஆபத்தில் சிக்கியிருக்கிறேன். காப்பாற் றுங்கள்.'

அவனுள் ஒரு படபடப்பு எழுந்து வினாடிக்கு வினாடி அதிகரித்தது. இந்த மாதிரி ஏதோ இருக்கும் என்பது அவன் எதிர்பார்த்ததுதான் என்றாலும், இந்த மன்றாடல் அவனைக் குழப்பியது. அவர்கள் எங்கே நிற்கிறார்கள் என்று பார்க்க முயன்றான். கண்ணில் படவில்லை.

ஆபத்து! என்ன மாதிரியான ஆபத்து? யாரிடமிருந்து? எப்படி அவளைக் காப்பாற்றுவது?

ஒன்று புரிந்தது. பஸ்ஸில் யாரிடமாவது கொடுக்கலாம் என்று முன்கூட்டியே எழுதி எடுத்து வந்திருக்கிறாள்.

தன்னிடம் அவள் வைத்திருக்கும் அந்த நம்பிக்கையைக் கண்டு அவனுக்கு ஒருவகை அகங்காரம் ஏற்பட்டது. அதே சமயம், கடிதம் எழுதி வைத்துக் கொள்ளும் அளவுக்கு முன் யோசனையுள்ளவள், படித்த பெண், தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ள வேண்டியதுதானே என்ற எண்ணமும் ஏற்பட்டது அவனுக்கு. முன்பின் தெரியாத எவனோ ஒருவனிடம் ஏன் உதவி கேட்கிறாள்? யோசிக்க யோசிக்க, வேண்டாம் இந்த அனாவசிய வம்பு என்று அவனுக்குத் தோன்றியது.

அவனுக்கு இருபத்தைந்து வயதுதான் ஆகிறதென்றாலும் பெண்களின் வலைகளைப் பற்றி ஓரளவு தெரிந்தவன். நண்பர்கள் பல பேர் புத்தியில்லாமல் சிக்கிக் கொண்ட அனுபவங்களை அறிவான். ஆகவே இப்போது இவள் விஷயத்தில் தலையிட்டுச் சிக்கலில் மாட்டிக் கொள்ள அவனுக்கு அச்சமாக இருந்தது. ஒரு வேளை இவள் பைத்தியமாக இருந்தாலும் இருக்கலாம். ஏதாவது தலையிடப் போய், மொத்த பஸ்ஸும் நம்மைப் பார்த்துச் சிரிக்கிற மாதிரி பண்ணிவிடக் கூடாது என்று உறுதி செய்து கொண்டான். டீயை அவசரமாகக் குடித்து விட்டு பஸ்ஸினுள் ஏறிக் கொண்டான்.

தன் இருக்கையை அடைந்து உட்காரவிருந்த சமயம், இரண்டு வரிசை பின்னாலிருந்து ஒருவர் கையை நீட்டி அவனைத் தட்டினார். ஐம்பது வயது இருக்கக் கூடிய பெரியவர், அடர்த்தியான நரைத் தலையுடன், வெள்ளை முழுக் கை ஷர்ட்டும் வேட்டியும் அணிந்திருந்தார். கிராமத்துக்காரர். ஆனாலும் சுமாரான வசதியும் படிப்பும் உள்ளவர் போலத் தோன்றினார். அவர் கூப்பிடுவது தன்னைத்

தானா, வேறு யாரையேனுமா? திரும்பிப் பார்த்தான். அவனைத்தான். ''இப்படி வாருங்கள்'' என்று வாய் விட்டே அவனைக் கூப்பிட்டார்.

அவன் திகைப்புடன் அவரிடம் சென்றதும், ''லக்கேஜ் ஏதாவது அங்கே இருக்கிறதா?'' என்றார்.

மேலும் திகைத்தவனாக, ''வெறும் ப்ரீப்கேஸ் தான். ஸீட்டில் வைத்திருக்கிறேன்'' என்றான்.

''அதையும் எடுத்துக் கொண்டு வந்து விடுங்கள். அந்த இடம் வேண்டாம்'' என்றார்.

அவருடைய பேச்சில் இருந்த தீவிரம் அவனைத் தயங்க முடியாதபடி செய்தது. தன் இருக்கைக்குச் சென்று ப்ரீப்கேஸை எடுத்துக் கொண்டு திரும்பினான். ''இங்கே உட்காருங்கள். அந்தப் பெண்பிள்ளையின் பக்கத்தில் இருக்க வேண்டாம்'' என்றார் அந்த மனிதர்.

என்ன இதெல்லாம், புதுப் புது அனுபவங்கள்! எது நேரப் போகிறது இன்றைக்கு? குழப்பமும் அச்சமும் வாட்ட அந்த நரை மனிதரின் பக்கத்தில் அமர்ந்தான். ப்ரீஃப் கேஸை மடியில் எடுத்து வைத்துக் கொண்டான்.

''என் பெயர் பன்னீர்செல்வம். இந்த வட்டாரத்தில் நிறைய மாந்தோப்பு இருக்கிறது சொந்தத்தில். மெட்றாஸ் கொத்தவால் சாவடிக்கு அனுப்புகிறேன்'' என்று தன்னைப் பற்றிக் கூறிக் கொண்டார்.

இறங்கியவர்கள் ஏறிக் கொண்டார்கள். பஸ் புறப் பட்டது. குணாவும் அந்தப் பெரியம்மாளும்கூட வந்து விட்டார்கள். மூன்று பேர் உட்காரும் அந்த சீட்டில் ஓரிடம் காலியாயிருக்கிறது என்பதைப் பெரியவள் கவனித்ததாகத்

தெரியவில்லை. ஆனால் குணா கவனிப்பதும், எங்கே அவன் என்று தேடுகிற மாதிரி பின்புறம் திரும்பிப் பார்ப்பதும் அவனுக்குத் தெரிந்தது. அவனைக் கண்டதும், நிமிட நேரம் பார்வை நிலைத்து நின்று, 'என் வேண்டுகோளை நிறைவேற்றுவாயா?' என்று மௌனமாக ஞாபகப்படுத்தி விட்டுத் திரும்பியது.

வழியில் பல பிரயாணிகள் பல இடங்களில் இறங்கியிருக்க வேண்டும். முந்தின இரவு புறப்பட்ட போது கசகசவென்று கூட்டமாயிருந்த பஸ் இப்போது தாராளமாகக் காலியாகியிருந்தது. விக்ரமின் வரிசையிலும் பக்கத்து வரிசையிலும் யாருமே இருக்கவில்லை.

''என்ன அந்த அம்மாளிடம்? ஏன் என்னை அங்கே உட்கார வேண்டாம் என்று சொன்னீர்கள்?' என்று அவன் கேட்க நினைத்தான். அதற்குள் பன்னீர்செல்வமே பேசினார்.

''ராத்திரி கிருஷ்ணகிரியில் அவள் ஏறும் போதே எனக்குச் சந்தேகமாயிருந்தது. அவள் மாதிரி இருக்கிறதே என்று நினைத்துக் கொண்டேன். இங்கே வெளிச்சத்தில் பார்த்ததும் நிச்சயமாகி விட்டது'' என்றார்.

''அங்கே இரண்டு பெண்கள் இருக்கிறார்களே? நீங்கள் யாரைச் சொல்லுகிறீர்கள்?'' என்றான் விக்ரம்.

''பெரியவளைத்தான் சொல்கிறேன். கூட வந்திருக்கிற சின்னப் பெண் யாரோ தெரியவில்லை. நான் பார்த்தது கிடையாது.''

''பெரியம்மாள் யார்?''

பன்னீர்செல்வத்தின் முகத்தில் கோபமும் வெறுப்பும் படர்ந்தன. குரலை மிகவும் தாழ்த்திக் கொண்டார்.

''அவள் பெயர் ராதாமணி. கிருஷ்ணகிரிக்குப் பக்கத்தில் அம்மாஞ்சாவடி என்கிற கிராமத்தில் இருந்தாள். அங்கே எனக்குத் தோப்பு இருந்ததால் அடிக்கடி போவேன். அவளுக்கு என்னைத் தெரிந்திருக்காது. ஆனால் எனக்கு அவளைத் தெரியும். இன்னும் சொல்லப் போனால், அம்மாஞ்சாவடி ஜனங்கள் அவளைக் கல்லால் அடித்துத் துரத்தின தினத்தன்று நான் அந்தக் கிராமத்தில்தான் இருந்தேன்'' என்றார் பன்னீர்செல்வம்.

விக்ரம் திடுக்கிட்டான். ''கல்லெடுத்து...?''

''ஆமாம். அவள் சூனியக்காரி. அதனால்தான் உங்களை அவள் பக்கத்தில் உட்கார வேண்டாம் என்று சொன்னேன்.''

''சூனியக்காரி என்றால்?''

''கேள்விப்பட்டதில்லையா நீங்கள்? அவர்கள் யாருக்காவது நல்லது சொன்னால் நடக்காது. கெட்டது சொன்னால் அப்படியே நடக்கும். தனக்குப் பிடிக்காதவர்களை அவளால் என்ன வேண்டுமானாலும் செய்ய முடியும். அவள் காட்டம் வைத்தால் ஒருத்தரை நாய் மாதிரி குரைக்க வைப்பாள். பேய் பிடித்த மாதிரி ஆட வைப்பாள். பைத்தியம் பிடித்த மாதிரி துணியைக் கிழித்துக் கொள்ள வைப்பாள். நோயாளியாக்கி மரணப் படுக்கையில் கிடக்க வைப்பாள்.''

''நீங்கள் கண்ணால் அதையெல்லாம் பார்த்திருக்கிறீர்களா?'' என்று விக்ரம் கேட்டான்.

''பார்த்தால்தானா என்ன? மொத்தக் கிராமத்துக்கும் அப்படியொரு ஆத்திரம் காரணமில்லாமல் ஏற்படுமா? அப்பா! பயங்கரம்டாப்பா!'' என்று பெருமூச்செறிந்தவர்,

''அவள் காற்றுக்கூட உங்கள் மீது படவேண்டாமென்று தான் இங்கே கூப்பிட்டேன். உங்களைப் பார்த்தால் நல்ல பிள்ளையாய்த் தோன்றுகிறது'' என்றார்.

விக்ரம் எதுவும் சொல்லவில்லை. ராதாமணி என்ற அந்தக் பெரியம்மாளின் சரித்திரத்தையும் குணா என்ற இந்த இளம் பெண்ணின் மன்றாடலையும் சேர்த்து நினைத்துப் பார்த்தான். அந்தப் பெண் நிஜமாகவே ஏதோ ஆபத்தில் சிக்கியிருக்கிறாள் என்று அவன் உணர்ந்தான். எல்லோ ருக்கும் ஏற்படுவது போன்ற சாதாரண ஆபத்தாக இல் லாமல், இது சூனியக்காரியினால் விளையும் பயங்கர ஆபத்து என்று நினைக்கையில் இன்னும் பரிதாபமாக இருந்தது. ஆனால் அவளை எப்படிக் காப்பாற்ற முடி யும்? காப்பாற்றப் போய், இந்த ராதாமணியின் பகைமை யைச் சம்பாதித்துக் கொள்ள நேரிட்டால்? சூனியக்காரி என்றும் கெட்ட சக்திகள் உள்ளவள் என்றும் இவர் சொல்லு கிறாரே? வேண்டாம், வேண்டாம். அந்தப் பெண்ணுக்குச் சாமர்த்தியம் இருந்தால் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளட் டும். இல்லாவிட்டால் எப்படியோ போகட்டும். நாம் உண்டு, நம் ஆபீஸ் உண்டு.

பஸ் தருமபுரி பஸ் ஸ்டாண்டை அடைந்த போது முழுதாகப் பொழுது விடியவில்லை. இங்கொன்றும் அங்கொன்றுமாக டீக்கடைகளும் வெற்றிலைப் பாக்குக் கடைகளும் திறந்திருந்தன.

அவர்கள் எங்கே போனார்கள் என்றுகூட கவனிக்கக் கூடாதென்று விக்ரம் தீர்மானித்திருந்தான். ஹொகேனக்க லுக்குச் செல்லும் பஸ்ஸில் ஏறிய போதுகூட, அவர்கள் என்ன ஆனார்கள் என்று பார்க்கவில்லை. ஊரை அடைந்த பிறகும்தான். ஆனால்—

சளசளக்கும் காவிரியாற்றின் கரையோடு நடந்து, கெஸ்ட் ஹவுசுக்குப் போன போது, தற்செயலாகத் திரும்பினான். ஒரு பரிசலில் அவர்கள் ஏறிக் கொண்டிருப்பது கண்ணில் பட்டது.

## 22

**சா**லையில் நின்றபடியே அவர்களைக் கவனித்தான் விக்ரம்.

பரிசலில் முதலில் குணா ஏறிக் கொண்டாள். கரையில், மரத்தின் வேர் மீது வைத்திருந்த பெட்டியையும், தோளில் மாட்டிக் கொள்ளும் பிளாஸ்டிக் பையையும் எடுத்துக் கொண்டு தானும் ஏறவிருந்த பெரியம்மாள்—ராதாமணி—அருகிலிருந்த ஒரு கிராமத்தானிடம் என்னவோ கேட்பது தெரிந்தது. அவன் ஆற்றின் சுழிப்பையும் வேகத்தையும் சுட்டிக் காட்டி என்னவோ சொன்னான். இப்போது போக வேண்டாம் என்று கூறினான் போலிருக்கிறது. பரிசலுக்குள் குந்தினாற் போல் உட்கார்ந்திருந்த குணாவை எழுந்திருக்கச் சொன்னாள். அவள் பரிசலை விட்டு இறங்கினாள். இருவரும் சாலைக்கு வரத் தொடங்கினார்கள்.

தன்னை மறந்து ஒரு வினாடி நின்றிருந்த விக்ரம், சுதாரித்துக் கொண்டு கெஸ்ட் ஹவுசை நோக்கி நடையைக் கட்டினான். எதற்காக வீண் வம்பு என்று அவன் எண்ணினானே தவிர, மறுபடி அவளைப் பார்க்கத்தான் போகிறோம் என்று உள்ளுணர்வு சொல்லிக் கொண்டேயிருந்தது.

அப்படியே நடந்தது.

டிபனோ காபியோ சாப்பாடோ எது வேண்டுமானாலும் கெஸ்ட் ஹவுசில் முன்னதாகவே ஆர்டர் கொடுக்க

வேண்டியிருந்தது. ஆனால் அதுவும் ஒரு குறிப்பிட்ட நேரம் வரைதான். விக்ரம் ஹொகேனக்கலை அடைந்த போது எட்டரை மணிக்கு மேல் ஆகிவிட்டதால் இட்டிலி வடை தோசைகள் கிடைக்கவில்லை. பூரியும் கிழங்கும்தான் இருக்கிறதென்று சொன்னார்கள். அதையே கொண்டு வரும்படி சொல்லி விட்டு, அறைக்குப் போய்ப் பல் விளக்கி முகம் கழுவிக் கொண்டு, மாற்றிக் கொண்ட உடையுடன் வெளியே வந்த போது மறுபடி அவளைக் கண்டான்—குணாவை.

ரிஸப்ஷன் கௌண்ட்டரில் அவள் சிற்றுண்டிக்கு ஆர்டர் கொடுத்துக் கொண்டிருந்தாள். இப்போது அவளருகே அந்தப் பெரியம்மாள்—சூனியக்காரி என்று சொல்லப்பட்ட ராதாமணி—இருக்கவில்லை. ஆகவே அவளுடைய விழிகள் அவனிடம் தைரியமாகப் பேசின.

ரிஸப்ஷன் கௌண்ட்டருக்கு எதிராக, ஹாலின் மறு கோடியில் ஒரு குட்டி மேஜையின் மீதிருந்த ரேடியோப் பெட்டி மெல்லிய இசையைப் பாடிக் கொண்டிருந்தது. ''நேற்று விம்பிள்டன் என்ன ஆயிற்று, தெரியவில்லையே?'' என்று எல்லாருக்கும் கேட்கும்படியாகப் பொதுப்படையான கேள்வியொன்றை வீசிவிட்டு அவள் ரேடியோவை நெருங்கினாள். பக்கத்தில் இரண்டு சோபா இருந்த போதிலும் அதில் யாரும் உட்கார்ந்திருக்கவில்லை. அவளுடைய கேள்வியையும் பார்வையையும் புரிந்து கொண்டான் விக்ரம். 'வேண்டாம், இவளுடைய வம்பில் நீ சிக்கிக் கொள்ளாதே' என்று உள்ளறிவு ஒன்று எச்சரித்த போதிலும் அவனால் அவளை ஒதுக்க முடியாமல் ஏதோ ஒரு சக்தி இழுத்தது. ''நேற்று நான் பஸ்ஸுக்குப் புறப்பட்டுக்

கொண்டிருந்த போது மெக்கன்ரோ நன்றாய் ஆடிக் கொண்டிருந்தான். டி.வி.யில் பார்த்தேன். அப்புறம் என்ன ஆச்சோ, தெரியவில்லை'' என்று தானும் பொதுப் படையாகச் சொல்லி விட்டு, அவள் பின்னாலேயே ரேடி யோவை நெருங்கினான். அவள் ரேடியோவின் வால்யூமை அதிகரித்து விட்டு வேண்டுமென்றே முள்ளை இப்படி யும் அப்படியும் திருப்பிக் கராபுராவென்று சத்தப் படுத்தி னாள். அவள் முகத்துக்கு வெகு அருகாக அவன் குனிந் திருந்தான். ரோஜா போன்ற அந்தச் சிவந்த சின்ன உதடு களின் துடிப்பையும் மெல்லிய பவுன் சங்கிலி தழுவிக் கொண்டிருக்கும் சங்குக் கழுத்தையும் அத்தனை நெருக்கமாகக் கவனிக்கையில், இமைகளின் படபடப் பையும் மூச்சுக் காற்றின் கதகதப்பையும் அவ்வளவு கிட் டத்தில் உணர்கையில், அவன் இருதயத்துள் ஒரு பரவசத் தென்றல் மிதந்தோடியது.

''உங்கள் கடிதத்தைப் பார்த்தேன்'' என்றான், அவ ளுக்கு மட்டுமே கேட்கும்படி.

''நியூஸ் முடிந்து விட்டது போலிருக்கு'' என்று அவள் உரக்கச் சொல்லி விட்டு உடனே, குரலைத் தாழ்த்திக் கொண்டு, ''அருவிக்கு வாருங்கள்—பதினொரு மணி சுமாருக்கு. அவள் நன்றாய்த் தூங்கிக் கொண்டிருப்பாள்'' என்றாள். பிறகு ''த்சு'' என்று அலுப்புடன் சூள் கொட்டி விட்டுத் திரும்பி நடந்தாள். குனிந்திருந்தவன் நிமிர்ந்த போது அவளுடைய புடவையின் தலைப்பு, அவன் முகத்தை முத்தமிடுகிற மாதிரி வருடி விட்டுச் சென்றது. மெல்லப் பின்னால் போய்ப் பார்த்த போது தன் அறைக்கு நாலு அறைகள் தாண்டி அவள் இருக்கிறாள் என்று தெரிந்து கொண்டான்.

விக்ரமின் மேலதிகாரி கல்கத்தாவிலிருந்து அடுத்த வாரம் சென்னைக்கு வருவதாக இருந்தார். தமிழ் நாட்டில் அவர் சுற்றிப் பார்ப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இடங்களில் ஹொகேனக்கல்லும் ஒன்று. போன் மூல மாகவோ தபால் மூலமாகவோ ஏற்பாடுகளைச் செய்வதைக் காட்டிலும் நேரில் சென்று செய்வது நல்லதென்று சென்னை ஆபீஸ் நிச்சயித்து, அதற்காக விக்ரமை இங்கு அனுப்பியிருந்தது. அடுத்தாற் போல் ஏற்காடு சென்று ஓட்டலில் புக் பண்ண வேண்டும். இன்று மாலை ஹொகேனக்கலிலிருந்து கிளம்பிவிட வேண்டுமென்று அவன் எண்ணியிருந்தான். ஆனால் இந்தப் பெண்—இது இன்பமான குறுக்கீடா? அபாயமான குறுக்கீடா? அவ னுக்குத் தெரியவில்லை.

மாடியிலிருந்து டைனிங் ஹாலில் மீண்டும் அவள் தென்படுகிறாளா என்று பார்த்தான். காணவில்லை.

கல்கத்தாக்காரருக்காக வசதிகளைச் செய்து முடித்த பின் ஏராளமாய் நேரம் பாக்கியிருந்தது. பதினொரு மணிக்கு அருவிக்குப் போக வேண்டும் என்று தன்னைத் தானே ஞாபகப்படுத்திக் கொண்டு, ஐந்து நிமிடத்துக்கொரு முறை கடியாரத்தைப் பார்த்தபடியே வெளியே நடந்தான். பஸ் நிற்குமிடத்தில், பெரிய மரத்தைச் சுற்றிய மேடையில் பெட்டியும் மூட்டையுமாகப் பலர் காத்திருந்தார்கள். இளநீர்க்காரன் இரண்டு வெள்ளைக்காரப் பெண்களை டபாய்த்துக் கொண்டிருந்தான். எதிரில் டீக்கடை மாதிரி யிருந்த ஓட்டல்களின் வாசலில், மாங்காய்த் துண்டத்துக்கு மிளகாய்ப் பொடி பூசினாற் போலச் செக்கச் செவேலென்று வறுபட்ட மீன்கள் பெஞ்சுகள் மீது ஆரோகணித்திருந்தன.

அதிலொன்றை வாங்கிக் கடித்தபடி ஒரு குடிகாரன் தன் பெண்டாட்டியின் சேலையைப் பிடித்திழுக்க, அவள் அழுது மன்றாடுவதை அநாகரிகக் கும்பலொன்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. கல்லூரி மாணவர்கள் சிலர் சாலையோரத்தில் நெட் கட்டிக் கைப்பந்து ஆடிக் கொண்டிருந்தார்கள்.

ஒவ்வோரிடத்திலும் கொஞ்சங் கொஞ்ச நேரம் நின்றிருந்து விட்டுக் கணேச தீர்த்தம் என்ற அருவி மண்ட பத்தை அடைந்தான் விக்ரம். மணி பதினொன்று ஆகி யிருந்தது.

வழியெங்கிலும் படிக்கட்டுகளிலும் கூட்டம் நின்றிருந்தது. ஜோவென்ற நீரின் கர்ஜனையோடு, எண் ணெய் மஸாஜ் செய்து கொள்வோரின் தொப் தொப் ஓசை யும் கலந்து வந்தது. குமரிகள் கூச்சத்துடன் உடை மாற்றிக் கொள்ள, கிழவிகள் உலகத்தைத் துச்சமாகக் கருதிப் புடவை கட்டிக் கொண்டிருந்தார்கள். ஜட்டியும் லங்கோடும் துண்டு மாக ஆடவர் உலகம் சுழன்று கொண்டிருந்தது.

அருவியின் மேற்கரையிலிருந்த மண்டபத்தினுள் சென்று அவன் பார்த்த போது, அவள் கையை வீசி அவனை அழைத்தாள். உடனே அவனுடைய எச்சரிக்கை உணர்வுகள் பறந்து விட்டன. வழியில் நின்றிருந்தவர்களை விலக்கிக் கொண்டு விரைந்து அவளை நெருங்கியவன், ''குணா!'' என்றான் தன்னையும் மறந்தவனாக.

அவன் தன்னுடைய பெயரைச் சொல்வானென அவள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அவளுடைய ஆச்சரியமும் மகிழ்ச்சியும் ஒருங்கே அவள் முகத்தில் தெரிந்தன. 'ஒட்டும் இரண்டுளத்தின் தட்டிலறிந்தேன்' என்று மகாகவி பாடிய

படி அவர்கள் ஒருவருக்கொரவர் தங்கள் அன்பையோ காதலையோ வாய்விட்டு வெளிப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் இருக்கவில்லை.

பெரும் சத்தத்துடன் நீர்வீழ்ச்சி இரைந்து கொண் டிருந்ததால் அவர்கள் பயமின்றிப் பேச முடிந்தது.

''யாராவது ஒரு நல்லவர் தென்படுவாரென்றுதான் அந்தக் கடிதத்தை எழுதித் தயாராக எடுத்து வந்தேன்'' என்றாள் அவள்.

''என் பெயர் விக்ரம்'' என்று தன்னை அறிமுகம் செய்து கொண்ட பின், ''யார் நீ? அந்த அம்மாள் உனக்கு என்ன உறவு?'' என்று கேட்டான் விக்ரம்.

''எந்தவித உறவுமில்லை. சொல்லப் போனால் மூன்று மாதத்துக்கு முன்னால் வரையில் அவள் யாரென்று கூட எனக்குத் தெரியாது'' என்று சொல்லி விட்டு, ''காலையில் பத்து மணியிலிருந்து ஒரு மணி வரை அவள் அயர்ந்து தூங்குவது வழக்கம். அதனால்தான் தைரியமாக இங்கே வந்தேன். சுருக்கமாக என் கதையைச் சொல்கிறேன்'' என்று கூறி, சுற்று முற்றும் பார்த்த வண்ணம் சுருக்கமாகவும் வேகமாகவும் அவள் தன் கதையைச் சொன்னாள்.

''எனக்கு அப்பா அம்மா கிடையாது. அப்பா கோயம் புத்தூரில் ஒரு சின்ன பாக்டரி நடத்தி வந்தார். அவர் இறந் ததும் பாக்டரியை மூடிவிட்டோம். அவர் சேர்த்து வைத் திருந்த சிறிது பணத்தை எடுத்துக் கொண்டு நானும் என் அண்ணன் ரத்தினமும் சென்னைக்கு வந்தோம். அண்ணன் பயங்கரப் படிப்பாளி. இன்சினியரிங் கல்லூரியில் இடம் கிடைத்தது. நான் ஹைஸ்கூலில் படிப்பை முடித்து,

கல்லூரியில் சேர்ந்த போது, அண்ணன் ஃபைனல் வருடம் படித்து முடித்திருந்தான். படிப்பில் குமாரி என்று ஒரு பெண் அவனுக்குச் சரிக்குச் சரியான போட்டியாக இருந் தாள். அவளைப் பற்றி ரத்தினம் அடிக்கடி சொல்லுவான்.

இறுதி வருடம் முடிந்ததும் மேற்படிப்புக்காக அமெரிக்காவுக்குப் போக அவன் முயற்சி செய்தான். கெட்டிக்கார மாணவர்களுக்கு ஸ்ரீராமுலு என்கிற ஆந்திர இண்டஸ்ட்ரியலிஸ்ட் ஒருவர் பொருளுதவி தருவதாகக் கேள்விப்பட்டு அவரை அணுகியிருந்தான். குமாரியும் அதே முயற்சியில் தீவிரமாக இருந்தாள். ஸ்ரீராமுலு ஒரு நாள் சென்னைக்கு வந்து இருவரையும் பேட்டி கண்டு பேசினார். என் அண்ணனுக்கே அதிகத் தகுதி இருப்ப தாக முடிவு செய்து, பண உதவி தருவதாகத் தெரிவித்தார்.

இது, குமாரியைப் பாதிக்குமென்பது எல்லாரும் எதிர்பார்த்ததுதான். ஆனால் அவளுடைய மெண்ட்டல் பாலன்ஸே அப்செட் ஆகும் என்று யாரும் நினைக்க வில்லை. ஆமாம்! அவளுக்குப் பைத்தியமே பிடித்து விட் டது. வீட்டில் சதா கத்திக் கொண்டும் சிரித்துக் கொண்டும் திரிகிறாள் என்று அண்ணன் வருத்தத்துடன் சொன்னான்.

குமாரியின் அம்மாதான் இந்த ராதாமணி. திடீரென்று ஒரு நாள் எங்கள் வீட்டுக்கு இவள் வந்தாள். அன்றுதான் அவளை முதல் முறையாக நான் பார்த்தேன். 'என் பெண்ணைப் பைத்தியமாக்கிய உங்களைச் சும்மா விட மாட்டேன்!' என்று என்னிடமும் அண்ணனிடமும் கசா முசாவென்று சத்தம் போட்டாள். நாங்கள் கோபப்பட வில்லை. பாவம், வருத்தத்தில் ஏதோ புலம்புகிறாள் என்று சமாதானப்படுத்தி அனுப்பினோம்.

ஆனால் ராதாமணி தீய சக்திகளின் உறைவிடம் என்று அடுத்த வாரம்தான் எனக்குப் புலப்பட்டது. சினேகிதர்களுடன் கொடைக்கானலுக்குப் போயிருந்த என் அருமை அண்ணன் ரத்தினம், படகு கவிழ்ந்து ஏரியில் மூழ்கி இறந்து போய் விட்டான்.''

இந்த இடத்தில் அவள் தன் கதையை நிறுத்தி, கண்ணைத் துடைத்துக் கொண்டாள். விக்ரம் அவள் கையை மெதுவே அழுத்தி மௌனமாக ஆறுதல் கூறினான்.

சில நிமிடங்களில் அவள் தன் துயரத்தை அடக்கிக் கொண்டு தொடர்ந்தாள்.

''கொஞ்ச நாள் நான் என் பாட்டியின் துணையோடு வசித்து வந்தேன். ஆனால் பாடத்திலோ படிப்பிலோ மனம் ஈடுபட முடியாமல் என்னவோ ஒரு இருள் என் மீது கவிழ்ந்திருந்த மாதிரி தோன்றிக் கொண்டேயிருந்தது. ஒரு நாள் இந்த ராதாமணி மறுபடியும் என் வீட்டுக்கு வந்தாள். 'நான் இவர்களோடு போய் இருந்து கொள்கிறேன் பாட்டி' என்று சொல்லி இவள் பின்னே புறப்பட்டு இவள் வீட்டுக்கே வந்து விட்டேன். எந்தச் சக்தி என்னை அப்படிச் செய்ய வைத்தது என்பது இன்றுவரை எனக்குப் புரியவில்லை.''

அவள் சொல்வதை அவனால் நம்பவும் முடியவில்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை.

''அன்றிலிருந்து இவள் கூடவேதான் இருந்து வருகிறாயா?'' என்று கேட்டான்.

''ஆமாம்—நாய் மாதிரி!'' என்றாள் அவள் வெறுப்புடன். ''என்னை அடிமை மாதிரி, நாய் மாதிரி தன்

பின்னால் சுற்ற வைப்பதில் அவள் ஆனந்தமடைகிறாள்! அதுதான் அவள் எனக்குத் தரும் தண்டனை!''

''நீ உன்னை விடுவித்துக் கொள்ள முயற்சி செய்ய வில்லையா?''

''செய்து பார்த்தேன். முடியவில்லை. அவள் தூங்கிக் கொண்டிருக்கும் சமயத்தில் இங்கே அங்கே போக முடியும். மற்றபடி நான் ஒரு நாள் இரண்டு நாள் வெளியே ஓடப் பார்த்தால், காலில் சுருக்குப் போட்டு இழுத்த மாதிரி என்னையறியாமலே அவளிடம் திரும்பிப் போய்ச் சேர்ந்து விடுகிறேன்.'' அவள் கண்களில் பயம் படர்ந்தது இதைச் சொன்ன போது.

''அவள் ஒரு சூனியக்காரியாம். அம்மாஞ்சாவடி என்ற கிராமத்தில் ஜனங்கள் அவளைக் கல்லாலடித்துத் துரத்தினார்களாம். பஸ்ஸில் ஒருவர் சொன்னார்'' என்றான் விக்ரம்.

''இருக்கலாம். நான் வருவதற்கு முன்னாடி நடந்ததோ என்னவோ! இவளைப் பார்க்கப் பல பேர் வருகிறார்கள். குறி சொல்கிறாள். ஆருடம் சொல்கிறாள். தலையை விரித்துப் போட்டுக் கொண்டு பேயாட்டம் ஆடுவதுண்டு. துணியில் செய்த சைத்தான் பொம்மைகளை வைத்துக் கொண்டு ஊசியால் குத்துவாள். அண்டை அயலில் எல்லோருக்குமே இவளிடம் நடுக்கம்தான்.''

''அந்தப் பெண்—பைத்தியம் பிடித்த பெண்?''

''அதை ஒரு சைக்கியாட்ரிஸ்டின் பிரைவேட் நர்ஸிங் ஹோமில் சேர்த்திருக்கிறாள்.''

''இப்போது இங்கே எதற்காக வந்திருக்கிறாள்?''

''தெரியவில்லை. பரிசலில் ஏறி அக்கரைக்குப் போக வேண்டுமென்று சொன்னாள். ஆற்றில் ரொம்ப வெள்ளமா யிருக்கிறது என்று சொன்னதால் திரும்பி விட்டாள்.''

விக்ரம் யோசனையில் ஆழ்ந்தான். சூனியக்காரிகள், மந்திரவாதிகள் ஆகியோரைப் பற்றித் தான் படித்திருந்ததை யெல்லாம் ஞாபகப்படுத்திப் பார்த்தான். கடைசியில்—

''குணா, ராதாமணியின் உள்ளங்கையை நீ பார்த் திருக்கிறாயா?'' என்று கேட்டான்.

அவள் திகைத்தாள். ''உள்ளங்கையையா?, ஏன்?''

''எனக்கொரு சந்தேகம்'' என்றதற்கு மேல் எதுவும் சொல்லவில்லை விக்ரம். ''இன்று இரவு அவள் நன்றாய்த் தூங்கின பிறகு என்னை வந்து கூப்பிடு.''

''சரி'' என்று அவள் திரும்பினாள்.

''குணா'' அவளுடைய இரு கைகளையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டு அவள் முகத்தை ஆழமாகப் பார்த்தான் அவன். ''குணா, எந்த ஆபத்துக்காகவும் நீ பயப்படாதே. உயிரைக் கொடுத்தாவது காப்பாற்ற நான் இருக்கிறேன்.''

பாய்ந்து அணைத்துக் கொள்ள வேண்டும் போல் இருவர் இதயமும் பதறின. சூழ்நிலையை முன்னிட்டு மௌனமாகப் பிரிந்தார்கள்.

எங்கோ மணி பன்னிரெண்டு அடிக்கவும் விக்ரமின் அறைக் கதவு மெல்லத் திறக்கவும் சரியாயிருந்தது. ''வாருங் கள்'' என்று கிசுகிசுக்கும் குரலில் அழைத்தாள் குணா.

அவன் அவளைப் பின்தொடர்ந்தான். ராதாமணியின் அறைக்குள் ஓசையின்றி நுழைந்தான். கட்டிலில் குறட்டை

விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தாள் ராதாமணி. சில வினாடிகள் இருவரும் அசையாமல் நின்றிருந்தார்கள். ஜன்னல் வழியே பிறை நிலாவின் வெளிச்சம் வந்து கொண்டிருந்தது.

குணா மெதுவாய் அவளருகே சென்று இடது கையைக் கொஞ்சம் கொஞ்சமாயத் திருப்பினாள். உள்ளங்கையைப் பிரித்தாள். அவன் பார்த்து விட்டு, 'இன்னொரு கை' என்று சாடை காட்டினான். வலது உள்ளங்கையைப் பிரித்தவள்—

திடுக்கிட்டுப் பின்வாங்கினாள். விக்ரம், 'நான் எதிர் பார்த்ததுதான்' என்று சொல்கிற மாதிரி தலையை அசைத் தான். பிறகு கூர்ந்து பார்த்தான்.

அந்த வலது உள்ளங்கையில் கறுப்பு மையில் ஒரு பெரிய சதுரம் வரையப்பட்டிருந்தது. அந்தச் சதுரத்துக் குள் இன்னொரு சதுரம் காணப்பட்டது. நடுமத்தியில் வட்டமாக ஒரு கறுப்புப் புள்ளி இருந்தது. பெருவிரலும் உள்ளங்கையும் கூடுமிடத்தில் '9' என்ற எண் போடப் பட்டிருந்தது. அதற்கு நேர் எதிரே, சுண்டு விரலின் முடிவில் '7' என்ற எண் இருந்தது. இன்னும் வெவ்வேறு எண்கள் வெவ்வேறு இடத்தில் இருந்தன.

# 23

ராதாமணி தூக்கத்தில் சிறிது புரண்டாள். அவளுடைய உள்ளங் கையையே பார்த்துக் கொண்டிருந்த குணா சட்டெனப் பயந்து விக்ரமின் தோளை அழுத்திக் கொண்டாள்.

''வெளியே வா'' என்று ஜாடை காட்டினான் அவன். அவள் முகத்தில் தயக்கம் தெரிந்தது. ''பயப்படாமல் வா'' என்று சொல்கிற மாதிரி அவள் கையை அழுத்தினான்.

ஜன்னல் கண்ணாடி வழியே வந்த வெளிச்சத்தில் ராதாமணியின் முகத்தைக் கவனித்தாள் அவள். தடித்த உதடுகளும் மூக்கும் ராதாமணியின் குரூரத் தன்மையை அழுத்தமாக எடுத்துக் காட்டின. நரைக்கத் தொடங்கி யிருந்த தலையும் மஞ்சள் பூசி வெளிறியிருந்த முகமும் சேர்ந்து அவளிடம் ஓர் அமானுஷ்யமான தன்மையைத் தோற்றுவித்தன. கண்கள் மூடியிருந்த போதிலும் அதற் குள்ளிருந்து ஒரு கனல் வீசுவது போலிருந்தது.

கதவை ஓசைப்படாமல் சாத்திக் கொண்டு இரு வரும் வெளியே வந்தார்கள்.

''வா, என் அறைக்குப் போகலாம்'' என்று விக்ரம் அழைத்ததை குணா ஒப்புக் கொள்ளவில்லை. ''அவள் விழித்துக் கொண்டால் என்னைத் தேடுவாள். உங்கள் அறை யில் நான் இருப்பதைப் பார்த்தால் என் மீது சந்தேகப் படுவாள்'' என்றாள்.

''சரி, தெருப் பக்கம் போய் நின்று கொள்ளலாம். ராதாமணி பார்த்தால் கூட நீ யாரோ நான் யாரோ என்கிற மாதிரி தோன்றும். நீ சும்மா வேடிக்கை பார்த்துக் கொண் டிருப்பதாய்ச் சொல்லி விடலாம்'' என்றான் அவன்.

சரளைக் கல் பாவிய பாதையையும் வளர்ச்சியடையா திருந்த பூங்காவையும் தாண்டிக் கொண்டு அவர்கள் வாச லுக்கு வந்தார்கள். காவிரி ஆறு அங்கிருந்து பார்க்கையில் கண்ணுக்குத் தெரியவில்லை. வளைந்த சாலையில் கொஞ்சம் நடந்தால்தான் தெரியும். ஆனால் எங்கோ அருகில் கடும் மழை பெய்து கொண்டிருக்கிற மாதிரி ஜோவென்று ஓசை மட்டும் கேட்டுக் கொண்டிருந்தது.

ராதாமணியின் உள்ளங் கையில் இத்தனை நாள் பார்த்திராத சித்திரமொன்றைப் பார்த்ததால் ஏற்பட்ட திகைப்பிலிருந்து குணா இன்னும் மீளவில்லை. அவளுடைய கண்களில்• பயத்தின் சாயல் இன்னும் மிஞ்சியிருந்தது. விடுதியின் கேட்டுக்கு இந்தப் பக்கம் அவனும் அந்தப் பக்கம் அவளுமாக, சம்பந்தமில்லாதவர்கள் போல் நின்றிருந்தார்கள். அவள் மார்பின் குறுக்காகக் கைகளைக் கட்டிக் கொண்டு இயற்கை அழகை ரசிக்கிற மாதிரி முகத்தை உயர்த்திக் கொண்டு தெருவைப் பார்த்தவாறு நின்றிருந்தாள். அவன் சிகரெட்டொன்றை உதட்டில் பொருத்திக் கொண்டு, தீப்பெட்டியைத் தேடுகிறவனைப் போல் பாண்ட் பையையும் சட்டைப் பையையும் துழாவிக் கொண்டிருந்தான்.

"என்ன அது, அவள் உள்ளங்கையில் இருந்த கோலம்?" என்று உதடுகளை அசைக்காமல் குணா கேட்டாள்.

''அது சூனியக்காரிகளின் எந்திரம்'' என்றான் விக்ரம். அவனும் குரலைத் தாழ்த்திக் கொண்டு, வாயை அதிகம் பிரிக்காமல் பேசினான்.

''அப்படியென்றால்?''

''அதிலேதான் இந்தச் சூனியக்காரிகளின் சக்தி இருக்கிறது.'' வாழைப் பழக் கூடையுடன் ஓர் ஆள் வந்ததால், அவன் விடுதிக்குள் போகும் வரை விக்ரம் தன் பேச்சை நிறுத்திக் கொண்டான். பிறகு சொன்னான்: ''இந்த மாதிரி ஒரு கட்டத்தை, எண்களுடன் உள்ளங் கையில் பச்சை குத்திக் கொள்வது இவர்கள் வழக்கம். முன்பொரு முறை நானும் மந்திர தந்திரம் தெரிந்த ஒரு நண்பரும் லாட்ஜில் ரூம்—மேட்ஸாக இருந்து வந்தோம். அப்போது அவர்

நிறையச் சொல்லியிருக்கிறார். புத்தகங்கள் கொடுத்திருக் கிறார். அப்போது தெரிந்து கொண்டேன்.''

அவள் விழிகள் விரிந்தன. ''கறுப்பு மையால் தாங்களே வரைந்து கொள்வார்களா?''

''ரொம்ப நாளாகி விட்டதால் அது கறுப்பு மை மாதிரி உனக்குத் தெரிகிறது. உண்மையில், அதைப் பச்சை குத்திக் கொண்டிருக்கிறாள். அதிலேதான் அவளுடைய சக்தி இருக்கிறது.''

''அப்படியானால் யார் குத்திக் கொண்டாலும் இந்த மாதிரி சூனிய சக்தியோ வசிய சக்தியோ ஏற்படுமே? நான் குத்திக் கொண்டால்?''

அவளுடைய குழந்தைத்தனமான கேள்வியைக் கேட்டு விக்ரம் புன்னகை செய்தான். அவளுடைய மனப் பாரம் குறையும் வகையில் தான் பேசுவதையும், அவ ளுடைய வதனத்தில் சிறிது சிறிதாக மிரட்சி குறைந்து வருவதையும் எண்ணுகையில் அவனுக்கு மகிழ்ச்சி ஏற் பட்டது. அறிவும் அழகும் உள்ள இவளுக்கு அருகில் நிற் பதே அவனுக்கு மனத்தில் உவகை கொடுத்தது.

''என்ன சிரிக்கிறீர்கள்?'' என்றாள் அவள் சற்று ரோஷமாக.

''கோபப்படாதே. யார் அந்த மாதிரி பச்சை குத்திக் கொண்டாலும் இந்தச் சக்தி கிடைத்து விடாது. குறிப் பிட்ட சில வேளைகளில், சில நாட்களில்தான் குத்திக் கொள்ள வேண்டும். அதையும், குறிப்பிட்ட சில குருவிக் காரர்கள் குத்தினால்தான் பலன்'' என்றான் அவன்.

அவள் மௌனமானாள்.

''அது மட்டுமில்லை. பலவேறு விதமான கட்டங்கள் இருக்கின்றன. ராதாமணி குத்திக் கொண்டிருப்பது அவ் வளவு சக்தி வாய்ந்ததல்ல என்று நினைக்கிறேன். அதனால் தான் அவளுக்குத் தெரியாமல் உன்னால் இங்கே அங்கே வரமுடிகிறது. அவளுக்குத் தெரியாமல் சிந்தனை செய்ய முடிகிறது. அவளுக்குத் தெரியாமல் பேச முடிகிறது. இன்னும் சக்தி வாய்ந்த கட்டமாக இருந்தால் உன் பேச்சு, நடமாட்டம், சிந்தனை கூட அவளுக்குக் கட்டுப்பட்டு, பரிபூரண அடிமையாக நீ ஆகியிருப்பாய்.''

அச்சத்தினால் அவள் உடம்பு ஒரு முறை சிலிர்த்துக் கொண்டது. ''அப்படிக்கூட இருக்குமா என்ன?''

''நான் உண்மையைச் சொல்கிறேன். இன்னொரு கட்டம் இருக்கிறது. என் லாட்ஜ் நண்பர் சொன்னார். பழைய சுவடியிலும் காட்டினார். அது இதைவிடக் கொடுமை யானது.'' அவன் கண்களை மூடிக் கொண்டு அந்தக் கட்டத்தை ஞாபகப்படுத்திக் கொள்ள முயன்றாள். ஞாபகம் வரவில்லை.

அவள் குரல் நடுங்கியது. ''அந்தப் பச்சை குத்திக் கொண்டால் இப்போதைக் காட்டிலும் கொடுமைக்காரி யாக ஆகி விடுவாளா?''

அவளை நெருங்கி, தோளை அணைத்துத் தைரியம் சொல்ல வேண்டும் போலிருந்தது அவனுக்கு. சிரமத்துடன் அடக்கிக் கொண்டான். ''நீ பயப்படாமல் இருக்கலாம். நான்தான் சொன்னேனே—சில குறிப்பிட்ட நபரிடம் அதைக் குத்திக் கொண்டால் தான் சக்தி என்று? அத்துடன்..''

''அத்துடன்?''

''தீய சக்தி என்றைக்குமே ஜெயிப்பது கிடையாது. அதைக் காட்டிலும் வலுவான வேறொரு சக்தி வந்து அதை வீழ்த்தி விடும். இப்போது ராதாமணி ஜெயிக்கிற மாதிரி தோன்றுவதெல்லாம் தற்காலிகமானதுதான். பயப் படாதே.''

ஆனால் அவள் பயம் நீங்கியதாகத் தெரியவில்லை. மேலும் அதிகரித்த மாதிரி இருந்தது. ''இவளிடமிருந்து விடுபட நீங்கள் உதவி செய்வீர்களென்று நம்பினேன்...'' என்றாள் குரல் தழுதழுக்க.

''குணா'' என்று இருதயத்தின் ஆழத்திலிருந்து வந்த பிரேமையோடு அவன் அழைத்தான். ''என் உயிரைப் பலி கொடுத்தாவது உன்னைக் காப்பாற்றுவதென்று நான் எப்போதோ தீர்மானம் செய்து விட்டேன். எப்படி என்ற விவரம்தான் எனக்கு இன்னும் தெரியாமல் இருக்கிறது. மனதைத் தைரியப்படுத்திக் கொள். உனக்குச் சாதகமான அம்சம் ஒன்று இருக்கிறது.''

''என்ன?''

''இவளிடமிருந்து விடுபட வேண்டுமென்று நீ மனமார விரும்புவதுதான் உன் முதல் பலம். அந்தச் சிந்தனைச் சுதந்திரம் பறி போகாதபடி முதலில் பார்த்துக் கொள். உனக்குக் கடவுள் நம்பிக்கை உண்டல்லவா?''

''எந்தப் பெண்ணுக்குத்தான் இல்லை?''

''மெட்றாஸ் போனதும், கோவில் வாசலில் உள்ள கடைகளில் ஆஞ்சனேயர் துதிப் பாடல் கிடைத்தால் வாங்கிக் கொள். தினசரி இரவு அதைச் சொல்லி விட்டுப் படு. மனத்துக்கு ஒரு தைரியம் ஏற்படும்.''

அவள் அழகாகப் புன்னகைத்தாள். ''உங்களைப் பார்த்தால் மாடர்ன் இளைஞராக இருக்கிறீர்கள். ஆனால் இதெல்லாம்...''

அவள் சொல்லி முடிக்குமுன், பின்னே பாதையில் காலடியோசை கேட்டது. யாரோ வருகிறார்களென்று தெரிந்ததும் அவள் மறுபுறம் திரும்பிக் கொண்டாள். அவன் தீப்பெட்டிக்காகத் துழாவுகின்ற நாடகத்தைத் தொடர்ந்தான்.

வந்தது, யாரோ அல்ல. ராதாமணிதான்.

''கண்ணம்மா, இங்கேயா இருக்கிறாய்? காணோமே என்று தவித்துப் போய் விட்டேம்மா.''

ஓரக் கண்ணால் ராதாமணியைப் பார்த்தான் விக்ரம். அடாடா! அந்த முகத்தில் என்ன கனிவு! குரலில் எத்தனை பாசம்! குணாவை அடிமைப்படுத்திக் கைப்பிடிக்குள் வைத்திருக்கும் ஒரு சூனியக்காரியா இவள்! யாரும் நம்ப மாட்டார்கள்.

அதைவிட அதிசயம், இவ்வளவு நேரமும் அவளைப் பற்றிப் புகார் மேல் புகாராகச் சொல்லிக் கொண்டிருந்த குணா, அவளை நேரில் கண்டவுடன் வாலை ஆட்டும் நாய் மாதிரி குழைந்து போனதுதான். சொடுக்குப் போட்டால் பின்னே வருகிற ஒரு நாலு கால் பிராணியைப் போல குணாவின் உடலும் உணர்ச்சிகளும் அடங்கிப் போயின.

மிகக் கேவலமாக, மிகப் பரிதாபமாக ராதாமணியைப் பின்தொடர்ந்து செல்லும் குணாவைப் பார்த்தபடி சில நிமிடங்கள் நின்றான் விக்ரம். பிறகு ஒரு பெருமூச்சுடன் சாலையில் நடந்தான்.

ஜோவென்ற ஓசை வரவர அதிகரித்த பிறகுதான் ஆற்றங் கரையை அடைந்து விட்டோமென்ற பிரக்ஞை ஏற்

பட்டது. பஸ்கள் நிற்குமிடத்திற்கு மறுபுறத்தில் வேலி போட்ட கரை இருந்தது. உள்ளே நுழைந்து பரிசல் துறையை அடைந்தான்.

தொலைவில், பாதி ஆற்றைக் கடந்து பரிசல் போய்க் கொண்டிருந்தது. வட்டமான பரிசலின் மத்தியில் ஒருவ ரோடொருவர் ஒட்டினாற் போல் ஆண்களும் பெண் களும் குழந்தைகளும் சிரித்துப் பேசிக் கொண்டு உட்கார்ந் திருந்தார்கள். கறுப்புக் கறுப்பாகப் பாறைகள் தண்ணீர்ப் பரப்புக்கு மேலே தலை நீட்டிக் கொண்டிருந்தன. பரிசல் ஓட்டும் பையன் வேண்டுமென்றே ஒரு சுழலில் கோலைத் திருப்பி, பரிசலை வட்டமடிக்கச் செய்து, பிரயாணிகளைத் திகிலுடன் சிரிக்கப் பண்ணிக் கொண்டான்.

பரிசல் அக்கரைக்குப் போய் விட்டுத் திரும்புவதற் காக ஒரு சிறு கும்பல் இங்கே காத்துக் கொண்டிருந்தது. பரிசல் துறையின் தலைமை ஆள், முண்டாசின் இடுக்கி லிருந்து பீடியை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு தள்ளிப் போய் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டான்.

விக்ரமுக்கு என்னவோ தோன்றியது. அவனுக்குப் பக்கமாகச் சென்று குந்தினாற் போல் உட்கார்ந்து கொண் டான். சிலுசிலுவென்று காற்று வீசிக் கொண்டிருந்தது. மத்தியானச் சூரியன் மேகங்களிடையே புகுந்து வெளி வந்து கொண்டிருந்தான்.

''நிறைய தண்ணி போகுதே? எப்பவும் இப்படித் தானா?'' என்று பேச்சுக் கொடுத்தான் விக்ரம்.

''ஆ! இதென்னாங்க பெரமாதத் தண்ணி! போன மாசம் மழை பெய்ஞ்சப்ப எவ்வளவு வந்தது தெரியுங்களா? பரிசலே விட முடியலீங்க'' என்றான் பரிசல்காரன்.

''இப்பக்கூட நிறையத்தான் ஓடுது'' என்றான் விக்ரம். ''அதனாலேதான் காலையில் அந்த அம்மாவுக்குப் பரிசல் ஓட்ட முடியாதுன்னு சொல்லிட்டீங்களா?''

''எந்த அம்மாவுக்கு?''

''அதுதான்—மெட்றாசிலேயிருந்து வந்திருந்தாங்களே, ஒரு பெரியம்மாவும் ஒரு சின்னப் பெண்ணும்?''

''ராதாமணி அம்மாளைச் சொல்றீங்களா?'' என்று அவன் கேட்டது விக்ரமுக்கு வியப்பைத் தந்தது.

''உங்களுக்கு அவர்களை முன்பே தெரியுமோ?''

''மூணு நாலு வாட்டி வந்திருக்கிறாங்க இங்கே. மேட்டூர் அணை திசையிலே பெண்ணாரம்னு ஒரு கிராமம் இருக்குது. ஆற்றைத் தாண்டி, மலைக்கு அப்பாலே போகணும். அங்கே நரிக் குறவர்களும் குருவிக்காரர்களும் நிறைய இருக்கிறாங்க. அவர்களைப் பார்க்கிறதுக்காக இந்த அம்மா அடிக்கடி போவாங்க.''

விக்ரமுக்குச் சுவாரஸ்யம் ஏற்பட்டது. ''குருவிக்காரர்களிடம் என்ன ஜோலி இவங்களுக்கு?'' என்றான்.

''அதென்னமோ நமக்கென்ன தெரியும்? போகணும் பாங்க. அழைச்சிட்டுப் போவேன். கூலி தாராளமாய்க் கொடுப்பாங்க.''

''இன்றைக்கும் அங்கே போகணும் என்றுதான் கேட்டார்களா?''

''ஆமாங்க. ஆற்றிலே சுழல் அதிகமா இருக்குது. அந்தப் பக்கம் பரிசல் போகாதுன்னு சொன்னேன். அப்புறமா வரேன்னு சொல்லிட்டுப் போயிருக்கிறாங்க.''

விக்ரம் யோசனையுடன் கெஸ்ட் ஹவுசை நோக்கித் திரும்பினான்.

ஆக, எது பயந்தானோ,அது நடக்கப் போகிறது. இருக்கிற கெட்ட சக்திகள் போதாதென்று இன்னும் கொஞ்சம் பெற முயலுகிறாள் ராதாமணி. குணாவுக்கு அவ்வளவுக்கவ்வளவு கெடுதல்.

ஏதாவது செய்து, எப்படியாவது ராதாமணியைத் தடுத்தாக வேண்டும். எப்படிச் செய்வது? என்ன செய்வது?

அன்று முழுதும் அவன் குணாவைச் சந்திக்கவில்லை. அறைக்குள்ளேயே இருக்கிறாள் என்று தெரிந்ததால், தானும் எங்கேயும் போகாமல் தன் அறைக்குள்ளேயே காத்திருந்தான்.

இரவு அவன் நல்ல தூக்கத்தில் ஆழ்ந்திருந்த போது என்னவோ ஒரு சத்தம் அவன் நித்திரையைக் கலைத்தது.

அருவியின் விசித்திரமான ஓசைகளிலொன்று என்று எண்ணியவனாகப் புரண்டு படுத்தான்.

சில வினாடிகள் கழித்து மீண்டும் அவன் தூக்கம் கலைந்தது. எழுந்து உட்கார்ந்தான். கவனித்தான்.

ஆமாம். யாரோ டொக் டொக்கென்று விரல் நுனியினால் கதவைத் தட்டுகிறார்கள்.

ஒரு நிமிடம் தாமதித்தான். மறுபடியும் டொக் டொக் கென்று சத்தம் கேட்டது.

போர்வையை விலக்கிக் கொண்டு எழுந்து, கதவருகே சென்றான். ஓசைப்படாமல் கதவில் காதை வைத்து உற்றுக் கேட்டான்.

மெல்லிய மூச்சுக் காற்று கேட்டது. வெளியே யாரோ நின்று கொண்டிருக்கிறார்கள்.

சத்தமில்லாமல் தாளை விலக்கினான். முதலில் சிறிது திறந்தான். ஒரு பெண்ணின் உருவமாகத் தெரியவே முழுதும் திறந்தான்.

''குணா!''

அவள் சரேலென உள்ளே வந்தாள். முகத்தில் முத்து முத்தாக வியர்த்திருந்தது. கண்களில் அளவற்ற பயம் தெரிந்தது.

''என்ன குணா?'' அவள் தோள்களைப் பிடித்தான். வெட வெடவென்று உடம்பு நடுங்குவது தெரிந்தது.

''பிசாசு...'' என்றாள் அவள் தொண்டை அடைக்க, நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டு நகர மறுத்தது.

''என்னது?''

''ஆமாம்... பிசாசு... பேய் மாதிரி ஒரு உருவம் என்னைத் தொட்டு எழுப்பியது...'' என்றாள் அவள்.

## 24

ஒரு நிமிடம் விக்ரமினால் எதையும் நிதானிக்க முடியவில்லை.

''என்ன சொன்னாய்? பிசாசாவது...'' என்று அவன் தொடங்கியதும் அவன் உதட்டின் மீது விரலை வைத்து, 'உஷ்!' என்று எச்சரிக்கை செய்தாள் குணா. ''தயவு பண்ணி மெதுவாய்ப் பேசுங்கள். அவள் எழுந்து விடுவாள்.''

கட்டிலில் அவளை உட்கார்த்தி வைத்தான்.

''ராத்திரி தூங்கிக் கொண்டிருந்த போதுதானே எழுந்தாய்?'' என்று கேட்டான்.

''உங்கள் கேள்வி எனக்குப் புரிகிறது. சொப்பனம் கண்டாயா என்றுதானே கேட்கிறீர்கள்? இல்லை. தூங்கிக் கொண்டிருந்த போது நான் திடீரென்று கண் விழித்துப் பார்த்தது உண்மைதான். ஆனால் அது நிச்சயமாய்க் கனவு இல்லை.''

''விவரமாய்ச் சொல்லு.''

''அவள் எழுந்து விடுவாள். எனக்குப் பயமாயிருக் கிறது.'' கட்டிலின் விளிம்பில் அவள் தொற்றிக் கொண் டிருந்தாள். ''தூக்கத்தின் நடுவே யாரோ என்னை எழுப்பு கிற மாதிரி இருந்தது. கண்ணைத் திறந்தேன். ஹோவென்று அருவிக் கரையில் நிற்கிற மாதிரி ஒரு பெரிய சத்தம் கேட்டது. ரொம்பத் தூரத்தில் வெள்ளை வெளேரென்று பட்டையாய் என்னவோ தெரிந்தது. வெளிச்சம் கொஞ்ச மாய் இருந்ததால் முதலில் அது என்னவென்றே புரிய வில்லை. பிறகு மினுமினு என்று தெரிந்ததை வைத்துக் கொண்டு அது ஒரு நீர்வீழ்ச்சி என்று தெரிந்து கொண் டேன்...''

விக்ரம் குறுக்கிட்டு, ''உன் ரூமிலிருந்து பார்த்தால் அருவி தெரிகிறதா?'' என்றான்.

''இல்லை. தெரியாது. காவிரியாற்றுக்கு எதிர்ப் பக்க மாய் இருக்கிறது இந்த விடுதி. அதுவும் நான் படுத்திருந்த கட்டில் ஜன்னல் பக்கம் இருக்கிறது. அங்கேயிருந்து பார்த்தால் திறந்த வெளியும் செடி கொடி மரங்களும்தான் தெரியுமே ஒழிய ஆறு தெரிவதற்கு வாய்ப்பேயில்லை.''

''சரி, சொல்லு.''

''நீர்வீழ்ச்சியின் வடிவத்தைப் பார்த்துக் கொண்டிருக் கிற போதே அதிலேயிருந்து கறுப்பாய் ஒரு உருவம்

திரண்டு உருண்டு வருகிற மாதிரி இருந்தது. தலைமயிர் சிலுப்பிக் கொண்டு நின்றிருந்தது. சாதாரணமாய் நம்மைப் போன்ற உயரம் பருமன்தான்...''

''முகம்?''

''அதெல்லாம் அவ்வளவு ஷார்ப்பாகக் கண்டு கொள்ள முடியவில்லை. படுக்கையில் எழுந்து உட்கார்ந்து பார்த்தேன். மொத்தையாய், தடியாய் ஒரு உருவம் தெரிகிறதே தவிர அதன் அவுட்லைன்கள் கோடு கிழித்த மாதிரி இருக்கவில்லை. பஞ்சினால் பொம்மை தயாரித்துப் பிறகு ஓரங்களைப் பிய்த்துப் பிய்த்துப் போட்டாற் போலத் தோன்றியது.''

''சரி?''

''அப்போ எனக்கு நாக்கே உலர்ந்து விட்டது. இருதயம் பயங்கரமாய் அடித்துக் கொண்டது. கண் கொட்டாமல் பார்த்தபடி இருந்தேன். அது என்னை நோக்கி வருகிற மாதிரி இருந்தது. தேரில் நாலு பக்கமும் அலங்காரச் சீலைகள் தொங்குமே, அதைப் போல அதன் கைகளும் கால்களும் வெறுமே தொளதொளவென்று ஆடிக் கொண்டிருந்தன. எனக்குப் பயம் அதிகரித்தது. கண்ணை இறுக மூடிக் கொண்டு படுக்கையில் படுத்தேன். ஆனால் ஜன்னலுக்கு உள்ளாக அது புகுந்து வருவதை என்னால் உணர முடிந்தது. என்னை யாரோ தொடுகிற மாதிரி இருந்தது. ஐஸ் போன்ற விரல்களால் என் கன்னத்தை, முகத்தை வருடுகிற மாதிரி இருந்தது. வீல் என்று நான் கத்தியிருக்க வேண்டும். சத்தம் தொண்டையில் அடைத்துக் கொண்டது. அப்படியே மயக்கமடைந்து விட்டேன். எத்தனை நேரம் அப்படிக் கிடந்தேனோ? கண்ணை விழித்த போது உடம்பெல்லாம் வியர்த்திருந்தது. ராதாமணியைப் பார்த்தேன்.

எதுவும் தெரியாதவளாக ஆழ்ந்த தூக்கத்தில் இருந்தாள். அதனால்தான் மெதுவாய் எழுந்து இங்கே வந்தேன்.''

விக்ரமுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. அவளைத் தோளில் சாய்த்து முதுகில் தட்டிக் கொடுத்து பயம் நீக்கி ஆறுதல் சொல்ல வேண்டும் போலிருந்தது. அதற்கான வயதைத் தாண்டி விட்ட அந்தப் பெண்ணிடம் அவனுக்கு அளவற்ற இரக்கம் உண்டாயிற்று. ''குணா ...'' என்று ஆதங்கத்துடன் அவள் கையைப் பிடித்துக் கொண்டான்.

அவள் அவனைப் பரிதாபம் நிறைந்த விழிகளோடு ஏறிட்டுப் பார்த்தாள்.

''குணா, இப்போதுதான் நீ மிகவும் ஆபத்தான நிலையில் இருக்கிறாய் என்று நான் நினைக்கிறேன். ஒரு பெரும் முயற்சி செய்து நீ விடுபட்டாக வேண்டும். ராதாமணியின் தொடர்பை எப்பாடு பட்டாவது முறித்துக் கொள்வது மிகவும் அவசியம்...''

விரிந்த கண்களுடன் அவனுடைய வார்த்தைகளை விழுங்கினாள் அவள். ''எப்படி... எப்படி என்று எனக்குத் தெரியவில்லை?'' கண்ணின் ஓரங்களில் நீர் துளித்துத் ததும்பியது.

அறையின் குறுக்கும் நெடுக்கும் நடந்தான் அவன். கடியாரத்தில் முட்கள் ஓசையின்றி நகர்ந்து கொண்டிருந்தன.

கடைசியில் ஏதோ எண்ணம் கிடைத்தது போல நின்றான். தன் ப்ரீஃப்கேஸைத் திறந்தான். உள்ளறைகளைப் பொத்தான் நீக்கிப் பார்த்தான். அவன் முகத்தில் நிம்மதி ஏற்பட்டது.

''ராத்திரி வேளைகளில் எழுந்து கொள்ளும் பழக்கம் உண்டா ராதாமணிக்கு?'' என்றான்.

''ஆமாம். விடிகாலை மூன்று மணிக்கு எழுந்து பாத்ரூம் போய் வருவாள். தண்ணீர் குடித்து விட்டு மறு படி படுத்து விடுவாள்.''

''ரொம்ப நல்லது.'' அவன் தன் பெட்டிக்குள்ளிருந்து இரண்டு மாத்திரைகளை எடுத்துத் தந்தான். ''இது தூக்க மாத்திரை. தண்ணீரில் கலந்து வைத்துவிடு. காலை பத்து மணி வரை இடி விழுந்தாலும் எழுந்திருக்காமல் தூங்கு வாள்.''

''தூங்கினால்?'' அவள் ஏதும் புரியாமல் அவனைப் பார்த்தாள்.

''காலை ஏழு மணிக்கு ஒரு பஸ் இருக்கிறது. நீ புறப் பட்டு வந்துவிடு. நாம் மெட்றாஸ் போய் விடலாம்.''

அவளுடைய அச்சம் வெளிப்படையாய் அவள் கண் களில் தெரிந்தது.

''பயப்படாமல் நான் சொல்கிறபடி செய். மெட் றாஸ் போய் விட்டோமானால் மறுபடி இவளுடைய வலைக்குள் சிக்காமல் உன்னைக் காப்பாற்ற வேண்டியது என் பொறுப்பு. சைக்கியாட்ரிஸ்ட்டோ, மந்திரவாதியோ, நர்ஸிங்ஹோமா—ஏதோ ஒரு உதவியுடன் உன்னை நான் பாதுகாக்கிறேன். இது சத்தியம். என்னைத் தயவு பண்ணி நம்பு குணா.''

''உங்களை நம்பாமல் வேறு யாரை நான் நம்பப் போகிறேன்?'' என்று சொன்ன போது அவள் குரல் கரகரத் தது. ''நான் என்ன செய்ய வேண்டும்?''

''இந்த மாத்திரைகளைத் தண்ணீரில் கலந்து வை.'' அவள் கைகளில் மாத்திரைகளைத் தந்தான். ''நான் கெஸ்ட் ஹவுஸ் கணக்குகளை ராத்திரியே தீர்த்து விட்டு, விடி காலை பஸ் ஸ்டாண்டில் காத்திருக்கிறேன். முடிந்தால் உன் பெட்டியை எடுத்துக் கொள். இல்லாவிட்டால் பர வாயில்லை. ஸாரியோ பிளவுசோ மெட்றாஸ் போய் வாங்கிக் கொள்ளலாம்.''

அவள் மௌனமாக நின்றாள். அந்த மௌனத்தில் அவளுடைய பீதி வெளிப்பட்டது.

''சொல்கிறபடி செய். இதுதான் உன் வாழ்க்கையில் உனக்குக் கடைசிச் சந்தர்ப்பம். இல்லாவிட்டால் இத்தனை நாளும் உன் முன்னே தோன்றியிராத பேயும் பிசாசும் இப்போது தோன்றுவானேன்? ராதாமணி மேலும் மேலும் கெட்ட வழிகளில் இறங்கிக் கொண்டிருக்கிறாள் என்று நினைக்கிறேன். குணா, தயங்காதே. காலை ஏழு மணிக்கு பஸ். இப்போது ராத்திரியே கூடப் புறப்படலாம். பஸ் கிடையாது என்பதோடு, எல்லோருக்கும் சந்தேகமும் வரும். என்ன?''

சரி என்று அவள் வாயில் சொல்லவில்லை. தலை யாட்டினாள். தயக்கத்துடன் கதவை நோக்கி நடந்தாள்.

அவளுடைய பயமும் பரிதாபமான தோற்றமும் அந்தத் தனிமைச் சூழ்நிலையும் விக்ரமுக்குள் ஒரு பிரளயத்தை உண்டு பண்ணின. ''இரு'' என்று எட்டிச் சென்று அவளை இழுத்துத் தன்னோடு அணைத்துக் கொண்டான். ''குணா குணா குணா...'' என்று உணர்ச்சி வசப்பட்டு முத்தமிட்ட போது அவள் எதிர்க்கவில்லை. ஆனால் அவசரமான சூழ் நிலையை உணர்ந்திருந்ததால் அவனை இதமாக விலக்கி

விட்டு, ''வருகிறேன்'' என்று சொல்லி விட்டுச் சென்றாள்.

ஆனால் அதன் பிறகு விக்ரம் படுக்கவில்லை. தூங்கவுமில்லை. ஜன்னலருகே சென்று குளிர்ந்த வானத்தின் மின்மினி நட்சத்திரங்களைப் பார்த்த வண்ணம் வெகு நேரம் நின்றிருந்தான். தண்ணென்றிருந்த குணாவின் பொன்னுடம்பும், உஷ்ணமாக வந்த மூச்சுக் காற்றும், அவளுடைய திகிலும் பரிதாபமும் கண்ணீரும் புடவையின் மழமழப்பும் கூந்தலின் வழவழப்பும் அடுத்தடுத்து ஒன்றன் மேலொன்றாக நினைவுப் பூக்களாக அவன் மேல் வர்ஷித்தபடி இருந்ததால், இன்னதென்று சொல்ல முடியாத கலவையுணர்வு அவன் இதயத்தை ஆட்டிப் படைத்தது. சென்னைக்கு அழைத்துப் போனதும் வடபழனி கோவிலில் சுருக்கமாகத் தங்கள் கல்யாணத்தை முடித்துக் கொண்டு பிறகு அடுத்த வேலையில் மளமளவென்று இறங்க வேண்டும் என்று அவன் எண்ணிக் கொண்டிருக்கும் போதே—

வானம் வெளிவாங்கியது. கறுத்த ஆகாயத்தில் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரகாசம் ஏறி, புலர்ந்து கொண்டிருந்த காலையைப் பிரகடனப்படுத்தியது. விக்ரம் சுறுசுறுப்படைந்தான். சூட்கேசில் துணிமணிகளை ஒழுங்கு படுத்திக் கொண்ட பின்னர் விடுதி நிர்வாகியை எழுப்பிக் கணக்குகளை ஸெட்டில் செய்தான். விடுவிடுவென்று நடந்து பஸ் ஸ்டாண்டை அடைந்த போது பொழுது நன்கு விடிந்து விட்டது. சிற்றுண்டிக் கடைகள் இயங்க ஆரம்பித்திருந்தன. காற்றில் சிலுசிலுப்பும் கடைத் தெருவில் பரபரப்பும் புகுந்தன.

ஒரு பஸ் வந்து போய் விட்டது.

எங்கே குணாவை இன்னும் காணோம்? அவன் கண்கள் கவலையுடன் சுழன்று கொண்டிருந்தன.

அதோ!

கையில் பெட்டி எதுவும் இல்லாமல், சேலைத் தலைப்புக் காற்றில் படபடக்க அவள் வேகமாக வந்தாள். முன்னாலும் பின்னாலும் பக்கவாட்டிலும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே ஓடி வந்தது அவளுடைய பயத்தைக் காட்டியது. வீட்டு வாசலைத் தாண்டும் எந்த இளம் பெண்ணும் செய்து கொள்ளும் சாதாரண அலங் காரம்கூட அவள் செய்து கொண்டிருக்கவில்லை. கூந்தல் வாரப்படவில்லை. நெற்றியில் பொட்டைக் காணோம்.

விக்ரம் முன்னே சென்று அவள் கையைப் பற்றி, ''என்ன, போகலாமா? ரெடிதானே?'' என்றான்.

''இல்லை. நான் வரவில்லை. எனக்குப் பயமா யிருக்கிறது. என்னை விட்டு விடுங்கள். நீங்கள் போங் கள்!'' மடமடவென்று அவளிடமிருந்து வாக்கியங்கள் சிதறின.

''என்ன குணா உளறுகிறாய்? என்ன ஆயிற்று?''

''ஒன்றும் ஆகவில்லை. ஒன்றும் ஆகக் கூடாதென்று தான் கவலைப்படுகிறேன். நீங்கள் புறப்பட்டுப் போங்கள். எனக்காக நீங்களும் ஆபத்தில் சிக்கிக் கொள்ளாதீர்கள்.''

''இதோ பார். முதலில் அமைதியாக மூச்சு விட்டு, நிதானமாகப் பேசு.'' அவள் மணிக்கட்டில் மெல்லத் தட்டி ஆசுவாசப்படுத்தினான். ''ராதாமணி தூங்கினாளா இல்லையா?''

''இல்லை. தூக்க மாத்திரையை விழுங்கவேயில்லை. டம்ளரில் கரைத்து வைத்த தண்ணீர் அப்படியே இருக்கிறது.''

''பின்னே அவளை விட்டு விட்டு நீ எப்படி வந்தாய்? என்ன பண்ணிக் கொண்டிருக்கிறாள் அவள்?''

''தெரியவில்லை.''

''தெரியவில்லை என்றால்?''

''அறையில் அவள் இல்லை. எனக்கு முன்பே எழுந்து எங்கேயோ போய் விட்டாள்.''

அவளுடைய தகவல் அவனுக்குத் திகைப்பைத் தந்தது. வெளியே போனாள் என்றால் எங்கே? இந்தச் சின்ன ஊரில் திருப்பித் திருப்பி இங்கேதானே வந்தாக வேண்டும்? அல்லது—

பரிசல் துறையின் பக்கம் அவன் பார்வை சென்றது.

''குணா, இப்போதுதான் நீ அதிக தைரியமாக இருக்க வேண்டும். இப்போதுதான் நீ தப்பியாக வேண்டும். வா...'' அவளை இழுத்துக் கொண்டு பரிசல் துறையை அடைந்தான். நேற்றுப் பார்த்த அதே ஆள் இப்போதும் மரத்தடியில் ஆற்றங்கரையில் உட்கார்ந்திருந்தான். வெளிச்சம் நன்கு பரவி, நடமாட்டம் அதிகரித்திருந்தது.

''ராதாமணி அம்மாள் வந்தாங்களா?'' என்று விக்ரம் கேட்டதுமே அவன் பதிலளித்தான்.

''ஆமாங்க. இன்னைக்காவது பண்ணாரம் கிராமத்துக்குப் போக முடியுமான்னு கேட்டாங்க. ஆத்திலே வெள்ளம் கொஞ்சம் குறைஞ்சிருக்குது. அதனாலே ஒரு

பரிசல் ஏற்பாடு செய்து கொடுத்தேன். விடிகாலை புறப் பட்டுப் போனாங்க.''

முதல் முறையாக விக்ரமின் முகத்தில் திகில் பரவி யது. ''வா'' என்று குணாவின் கையை இரும்புப் பிடியாகப் பிடித்து இழுத்துக் கொண்டு சாலைக்கு ஓடி வந்தான். சின்னக் குரலில் சொன்னாலும் அதில் பயம் ஆதிக்கம் செலுத்தியது. ''இனிமேல் ஒரு செகண்ட் கூட நாம் தாம திக்கக் கூடாது. இன்னும் என்னென்ன பயங்கர சக்திகள் பெறவோ அவள் குருவிக்காரியைத் தேடிக் கொண்டு போயிருக்கிறாள். அவள் திரும்புவதற்குள் நீ தப்பி விட வேண்டும்.''

''விக்ரம்... வேண்டாம், என்னை விட்டு விடுங்கள் ...'' அவள் மன்றாடினாள்.

''பைத்தியம் மாதிரி பேசாதே. உன்னை அடித்துப் போட்டுக் குண்டுக் கட்டாய்த் தூக்கிப் போனாலும் போவேனே தவிர ராதாமணியிடம் விட்டு விட்டுப் போக மாட்டேன்.'' எதிரிலிருந்த கடைக்கு ஓடினான் அவன். ''தர்மபுரிக்கு அடுத்த பஸ் எப்போது தெரியுமா?''

''இப்பத்தானே ஒண்ணு போச்சு. ஆனால் சேலத் துக்கு டைரக்ட் பஸ் இருக்குது. அரை மணியில் வரும்'' என்றான் கடைக்காரன்.

விக்ரம் குணாவைப் பார்த்து அவளுக்குத் தைரியம் ஏற்படுத்தும் வகையில் புன்னகை செய்தான். ''குணா, நாம் சேலம் போய் அங்கிருந்து மெட்றாசுக்கு ரயிலேறி விட லாம். கவலைப்படாதே. அனாவசியமாய்ப் பயப்படாதே.''

உதடுகள் துடிக்க, தலையைக் குனிந்தபடி மௌன மாகவே நின்றிருந்தாள் அவள். ஒவ்வொரு வினாடியும்

ஒரு யுகமாகக் கழிந்தது என்று சொல்வது எவ்வளவு உண்மை யான வார்த்தை என்று விக்ரமுக்குப் புலப்பட்டது. ஆற்றங்கரையில் ஒவ்வொரு முறை பரிசல் வந்து நிற்கும் போதும், ஒவ்வொருவர் இறங்கி வரும் போதும் ராதா மணியாக இருக்கக் கூடாது, ராதாமணியாக இருக்கக் கூடாது, ராதாமணியாக இருக்கக் கூடாது என்று தவித்து உருகிப் போனான் அவன். அவள் வருமுன்னே சேலம் பஸ் வர வேண்டுமேயென்று ஆற்றிலே ஒரு கண்ணும் சாலையிலே ஒரு கண்ணும் மாற்றி மாற்றி நோக்கிக் கொண்டிருந்த போது—

அம்மாடி! பஸ் வந்தது. திமுதிமுவென்று ஏறிய கூட்டத்தினுள் குணாவை முன்னே தள்ளி அவனும் ஏறிக் கொண்டான். டிரைவரும் கண்டக்டரும் இறங்கி டீ சாப்பிடப் போனது அவனுடைய தவிப்பைப் பன்மடங் காக்கியது.

பஸ் புறப்பட்டு, ஆற்றையும் ஊரையும் சந்தடிகளை யும் அருவிச் சத்தத்தையும் தாண்டி, இருமருங்கும் காட்டு மரங்கள் வளர்ந்த சாலை வழியே செல்லத் தொடங்கிய பிறகே அவன் சீராக மூச்சு விட்டான். காற்றில் நடுங்கும் தளிர் போல இருந்த குணாவிடம், ''இனிமேல் பயமில்லை. தலையை நிமிர்த்துக் கொண்டு நன்றாக உட்கார்'' என்றான்.

இவையெல்லாம் நிஜம்தானா என்று நம்ப இயலாத வள் போலச் சிறிது சிறிதாகக் கண்களை உயர்த்தினாள். பாதுகாப்பான சூழ்நிலையில், நல்ல மனிதர்களுக்கு நடுவே இருக்கிறோம் என்பதை உணர்ந்ததும் அவள் முகத்தில் ஒரு தெளிவு பிறந்தது. இதழின் ஓரத்தில் ஒரு புன்னகை உதித்தது. அதைக் கண்டதும் தனக்கு ஆயிரங்

கோடிப் பரிசு கிடைத்தாற் போல் விக்ரம் மகிழ்ந்தான். முதுகின் பின்னால் கையை நீட்டி அவள் இடையை அன்போடு வளைத்துக் கொண்டான்.

அரை மணி நேரம் சென்றிருக்கும். பஸ் குட்டப் பாடியை நெருங்கிக் கொண்டிருந்த சமயம்—

'அம்மா!' என்று திடீரெனத் துள்ளி எழுந்தாள் குணா.

அத்தனை பேரும் திடுக்கிட்டார்கள்.

''என்ன? என்ன?'' என்று ஒரே குரலில் வியப்புடன் வினவினார்கள்.

அவள் தன் இடது தோளைத் தடவிக் கொண்டே, ''சுரீர் என்று இங்கே யாரோ குத்திய மாதிரி—''

என்றவள், ''ஐயோ!'' என்று மீண்டும் அலறினாள் விலாவைத் தழுவியபடி. மறுவினாடியே ''ஆ!'' என்று கழுத்தைத் தடவிக் கொண்டாள். சுரீர் சுரீர் என்று நூறு ஊசிகள் அவள் உடம்பில் நூறு இடங்களில் குத்தியது போல— தொடர்ந்து குத்திக் கொண்டே இருப்பது போல —துடித்தாள். தவித்தாள். வளைந்தாள்.

பஸ் நின்று விட்டது. எல்லாரும் சீட்டைத் தாவி ஏறி வந்து அவளைப் பார்த்தார்கள்.

குட்டிச் சாத்தான் பொம்மையை வைத்துக் கொண்டு ராதாமணி செய்யும் வேலை இது என்று விக்ரமுக்குப் புரிந்து விட்டது.

## 25

''பஸ்ஸை நிறுத்தப்பா! பஸ்ஸை நிறுத்து!'' என்று பிரயாணிகள் மூலைக்கு மூலை கத்தினார்கள். டிக்கெட் கொடுத்து ஓய்ந்து, சிறிது கண்ணை மூடித் தன் சீட்டில் சாய்ந்திருந்த

கண்டக்டர் சத்தம் கேட்டு விழித்தார். முதலில் அவருக்கு ஒன்றும் புரியவில்லை. ஒரு பெண் வலியினால் துடிப்பது, சூழ்ந்திருந்த கூட்டத்துக்கு நடுவே தெரிந்தது. ''கொஞ்சம் நிப்பாட்டுங்க அண்ணே!'' என்று டிரைவருக்கு உரக்கச் சொன்னபடி விசிலையும் எடுத்து ஊதினார்.

வண்டியின் வேகம் குறைந்ததே தவிர குணாவின் வேதனை குறையவில்லை. ''ஐயோ! குத்துகிறதே! குத்து கிறதே!'' என்று இப்படியும் அப்படியும் நெளிந்து துடித் தாள். எழுந்தவள், சீட்டுகளுக்கு நடுவே இருந்த நடை வழியில் விழுந்தாள்.

இரண்டு மூன்று சிறுவர்கள் சீட்டைத் தாண்டி ஓடி வந்து, ''என்ன சார், என்ன இவங்களுக்கு?'' என்று விக்ரமைக் கேட்டார்கள்.

கண்டக்டர் அரைகுறையாக விஷயத்தை ஊகித்துக் கொண்டு, ''என்னய்யா, நிறைமாசக்காரிங்களைப் பஸ்ஸில் அழைச்சிட்டு வந்து ஏன் எங்க உசிரை எடுக்கிறீங்க?'' என்று திட்டியபடி அருகில் வந்து, குறிப்பிட்ட பெண் மூன்று மாதக் கர்ப்பிணிகூட அல்ல என்பதைக் கண்டதும் திகைத்துப் போனார்.

ஒரு கிழவி குணாவிடம் வந்து, ''இப்படி என் மேலே சாயஞ்சுக்கம்மா'' என்று பரிவுடன் அவள் தோளை அணைக்க, அதே சமயம் குணாவின் விலாப்புறத்தில் ஒரு சுரீர் வலி ஏற்பட, அப்போது எகிறிய எகிறலில் கிழவி இன்னொரு பக்கம் போய் விழுந்தாள்.

''ஏன் சார், உங்க ஒய்ஃபுக்கு இந்த மாதிரி வலிப்பு அடிக்கடி வருவதுண்டா?'' என்று ஒரு கண்ணாடிக்காரர் விக்ரமை விசாரித்தார்.

*பஸ் நின்று விட்டது.*

*இரண்டொரு நிமிடங்களுக்குள் கிடுகிடுவென்று இளைத்து விட்ட இந்த அமளிகளினால் விக்ரம் ஆடி விட்டான். ஓசைப்படாமல், ஒருத்தருக்கும் தெரியாமல் குணாவுடன் ஊரை விட்டுப் போய்விட வேண்டும் என்று அவன் திட்டம் போட்டதென்ன, ஒரு பஸ் மொத்தமும் அவர்களைக் கண்டு கொண்டு முறைப்பதென்ன!*

*''குணா, கொஞ்சம் அமைதியாக இரு, பொறுமை யாக இரு'' என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, ''என்னால் முடியவில்லையே விக்ரம்! ஐயோ! இங்கே குத்துகிறது! அம்மா! இங்கே!'' என்று அவள் துடித்தாள்.*

*சூனியக்காரி ராதாமணிதான் ஹொகேனக்கலில் இருந்தவாறே கொடுமை செய்கிறாள் என்பதை விக்ரம் புரிந்து கொண்டான். ஆனால் மற்றவர்களுக்கு அது புரிய வில்லை. ''ஏம்ப்பா, நிறுத்தினதுதான் நிறுத்தினே, ஏதாச்சும் கடை வாசலில் நிறுத்தக் கூடாது? சோடா கீடா வாங்கிக் கொடுக்கலாமில்லே?'' என்றார் ஒரு தாட்டியான நபர்.*

*''சரி, போகிறேன்'' என்றார் டிரைவர். ஆனால் இஞ்சினை ஸ்டார்ட் செய்யும் உறுமலைக் கேட்டதுமே, குணா, அத்தனை வேதனைக்கிடையிலும், ''வேண்டாம்! வேண்டாம்!'' என்று அலறினாள்.*

*''குணா'' என்று அவள் கையைப் பிடித்து ஆறுதல் சொல்ல முயன்றான் விக்ரம்.*

*''இல்லை, மேலே போக வேண்டாம் விக்ரம்'' என்றாள் அவர் தீர்மானமாக. ''பஸ் நின்றபோது குத்தல்*

வேதனை கொஞ்சம் நிற்கிற மாதிரி இருந்தது. மேலே ஓரடி நகர்ந்தாலும் எனக்கு உயிர் போய் விடும் விக்ரம்!''

அவனும் அவளும் கணவன் மனைவி என்று நினைத்திருந்தவர்கள், அவள் அவனை 'விக்ரம்' என்று பெயர் சொல்லி அழைப்பதைக் கேட்டதும் திகைத்தார்கள். ''உங்க தங்கச்சிங்களா?'' என்று கண்ணாடிக்காரர் கேட்டார்.

ஒரு கிழவி தாழ்ந்த குரலில், ''இதெல்லாம் செய்வினைங்க. பாவம், இந்தப் பெண்ணுக்கு யாரோ வினை வச்சிருக்காங்க'' என்றாள்.

''செய்வினையாவது செய்யாத வினையாவது!'' என்று அலுத்துக் கொண்ட கண்டக்டர், ''என்ன சார், போறீங்களா, வரப் போறீங்களா? லேட்டாவுது சொல்லுங்க'' என்றார் விக்ரமிடம்.

விக்ரம் பதில் சொல்ல வாயைத் திறக்குமுன் எங்கோ ஒரு பொசுங்கல் நாற்றம் எழுந்தது. 'என்ன அது?' என்று ஒருவர் மூக்கைச் சுளித்தார். 'எங்கிருந்தோ புகை வருதே!' என்றார் இன்னொருவர்.

''தீ! நெருப்பு! இங்கே பாருங்க! இவங்க சேலையில்!'' என்று ஒரு பையன் கூவினான் திடீரென்று.

திடுக்கிட்டு நோக்கினான் விக்ரம்.

ஆம்! குணாவின் சேலையில் ஒரு நுனி சிலுசிலுவென்று எரிந்து கருகிக் கொண்டிருந்தது! சரேலெனக் காலால் உதைத்துத் தேய்த்து அதை அணைத்து விட்டு விக்ரம் நிமிர்ந்த போது சுற்றியிருந்தவர்களின் முகங்களில் பீதி பரவியிருப்பதைக் கண்டான். எங்கிருந்து வந்தது அந்தத்

தீ? பஸ்ஸுக்குள் யாரும் நெருப்புக் குச்சி கிழிக்கவில்லை. யாரும் பீடி சிகரெட் பற்ற வைக்கவில்லை. பின்னே?

''அதோ மறுபடி!'' என்று இன்னொரு கூச்சல் தொடர்ந்தது.

புடவையின் மற்றொரு முனை இப்போது தீயில் சுருண்டு சுருண்டு, மடிந்து மடிந்து—

விக்ரம் மறுபடியும் காலால் தீய்த்து அந்த முனையைக் கருகச் செய்தான். இப்போது அவனுக்கே உடம்பெங்கும் வியர்த்திருந்தது. நம்ப முடியாத அந்தப் பயங்கரம் அவனைப் படபடக்க வைத்தது.

''செய்வினைன்னு நான் சொன்னது சரியாப் போச்சு, பார்த்தீங்களா?'' என்று அந்தக் கிழவி மறுபடி சொல்வது கேட்டது.

தன் இருக்கையை விட்டு எழுந்து வந்து பார்த்துக் கொண்டிருந்த டிரைவருக்கும் கண்டக்டருக்கும் பயம் ஏற்பட்டு விட்டது.

''சார், பஸ்ஸுக்கு எதினாச்சும் ஆயிட்டுதுன்னா பெரிய வம்புங்க. தயவு பண்ணி இறங்கிடுங்க. எங்க வேலைக்கு உலை வச்சிடாதீங்க!'' என்றார் டிரைவர், அச்சத்துடன் கையெடுத்துக் கும்பிட்டபடி.

''அம்மா!'' என்று மறுபடியும் கழுத்தைத் தடவிக் கொண்டு வீரிட்டாள் குணா. கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஓரிடத்தில் எவரோ ஒருவர் உட்கார்ந்து கொண்டு அவளையே பார்த்துக் கொண்டிருப்பது போலவும், அவளுடைய எண்ண ஓட்டங்களைப் படித்துக் கொண்டிருப்பது போலவும், அவள் கொஞ்சம் தயங்குகிற மாதிரி

தெரிந்தவுடனே தார்க் குச்சியால் ஒரு குத்துக் குத்துகிறாற் போலவும் இருந்தது. பிரத்தியட்சமாகப் பார்க்க முடிய வில்லையே தவிர, ராதாமணியின் ஒவ்வோர் அசைவை யும் தெள்ளத் தெளிவாகக் காண முடிந்தது விக்ரமினால்.

''வா'' என்று குணாவின் கையைப் பற்றிக் கொண்டு எழுந்தான் அவன். மறு கையில் தன் சூட்கேஸை எடுத்துக் கொண்டான்.

பிரயாணிகள் அவ்வளவு பேரும் அவர்களை அனு தாபத்துடன் நோக்கினார்கள். கண்டக்டருக்குச் சற்று இரக்கம் ஏற்பட்டது. ''ஏதாவது கடைத் தெருப் பக்கமா இறக்க ணும்னா சொல்லுங்க. இறக்கி விடறோம்'' என்று ஒப்புக் கானும் சொன்னார்.

''தாங்க்ஸ். இங்கேயே இறங்கிக் கொள்கிறோம்'' என்று கூறி விட்டு குணாவுடன் இறங்கிக் கொண்டான் அவன்.

வெய்யில் ஏறிவிட்ட போதிலும் காற்றில் குளிர்ச்சி பரவியிருந்தது. ஒரு மரத்தின் அடியில் சூட்கேஸை வைத்து அதன்மீது அவளை உட்கார்த்தினான் அவன். தன் வாழ்க் கையில் இப்படிப்பட்ட அதிசயங்கள், குழப்பங்கள், பிரமிப்புகள் நேருமென்று நேற்று வரைகூட அவன் நினைத்துப் பார்த்ததில்லை. ஆகவே இந்தத் திடீர்த் திருப் பங்கள் அவனை திக்குமுக்காடப் பண்ணின. கருகிப் போன சேலையும் பரிதாபம் நிறைந்த முகமும் அச்சம் நிறைந்த விழியுமாகத் தன்னையே பார்த்தவாறு, ஊர் பேரில்லாத பஸ் சாலையில் உட்கார்ந்திருக்கும் இந்தத் தீனமான பெண் ணுக்கும் தனக்கும் ஏற்பட்ட விசித்திரமான சொந்தத்தை எண்ண எண்ண அவனுக்கு மெய் சிலிர்ப்பு ஏற்பட்டதோடு

இவளைப் பத்திரமாகக் காப்பாற்றியாக வேண்டுமே என்ற பொறுப்புணர்ச்சியினால் உள்ளமும் கனத்தது.

''குணா, இப்போது வலி தேவலையா?'' என்று கேட்டான்.

''கொஞ்சம் தேவலை'' என்று மெல்லச் சொன்னாள் அவள். ''ஆனால் முழுதும் நின்று விடவில்லை. யாரோ ஊசியினால் என் உடம்பின்மீது தடவிக் கொண்டிருக்கிற மாதிரியே இருக்கிறது. எந்த நிமிடத்திலும் சுரீரென்று குத்தப் போகிற மாதிரி ஊசியின் முனையை என் தேகம் உணர்கிறது...'' என்றவள், ''விக்ரம், இதெல்லாம் என்ன என்று உங்களுக்குப் புரிகிறதா? அவள்—ராதாமணியின் வேலையா?'' என்றாள்.

''ஆமாம்'' என்று அவன் பதிலளித்ததும் அவள் முகத்தில் இருளடித்தது. ''விக்ரம், அப்படியானால் அவளிடம் திரும்பிப் போக வேண்டாம். இப்படியே சேலம் பாதையில் நடந்து போகலாம். பஸ் கிடைக்கிற போது ஏறிக் கொண்டு விடலாம்'' என்றாள்.

''உன்னால் முடியுமா?'' தைரியமாக இருக்கிறாயா?''

''நிச்சயமாய்.''

அவன் கொஞ்சம் தயங்கினான். பிறகு சூட்கேஸைக் கையில் எடுத்துக் கொண்டு முன்னே நடந்தான். தூரத்தில் பஸ் மறைந்த இடத்தில் புழுதி அடங்கிக் கொண்டிருந்தது. அந்தத் திசையில் அவன் செல்ல, இரண்டு அடிகள் எடுத்து வைத்த குணா, ''ஐயோ!'' என்று தோள் பட்டையை அழுத்திக் கொண்டு கத்தினாள்.

''என்ன மறுபடியுமா?'' என்றான் அவன்.

அவள் நின்று விட்டாள்.

''ஆமாம், விக்ரம். மேலே ஓரடி கூட என்னால் நடக்க முடியாது. நடந்தால் காலிலும் தொடையிலும் சுரீர் சுரீர் என்று குத்துகிறது.''

'ராதாமணி! நீ ஜெயித்து விட்டாய்' என்று எண்ணிக் கொண்டான் விக்ரம். அவன் கண்ணில் நீர் ததும்பியது. இவளெதிரில் தன் பலவீனத்தைக் காட்டிக் கொள்ளக் கூடாதென்று அடக்கிக் கொண்டான்.

''உன்னைத் தன்னிடம் திரும்ப அழைத்துக் கொள்வ தற்காக ராதாமணி குரூர வழியில் இறங்கி விட்டாள்'' என்றான் கனம் நிறைந்த குரலில். ''இப்போதைக்கு நீ அவளுக்குக் கீழ்ப்படிந்து போக வேண்டியதுதான். ஆனால் அந்த நரகத்தில் உன்னை அதிக நாள் இருக்க விட மாட் டேன்.''

அவள் ப்தில் பேசவில்லை. அவனுடைய கையை அழுத்திப் பிடித்துக் கொண்டாள். இருவரும் ஹொகேனக் கலை நோக்கிச் செல்லும் பாதையில் நடந்தார்கள்.

''இப்போது எப்படி இருக்கிறது?'' என்று அவன் கேட்டான்.

''குத்தவில்லை. ஆனால் உடம்பின் பல பகுதிகளில் —இங்கே கழுத்தில், இங்கே முழங்கையருகே, இங்கே தொடையில், இங்கே விலாவில், இங்கே பிடரியில்— இப்படிப் பல இடங்களில் ஊசிகளின் முனைகள் அழுத்த மாக நெருடிக் கொண்டிருக்கிற மாதிரி ஓர் உணர்வு ஏற் படுகிறது'' என்றாள் அவள்.

மேலும் கொஞ்ச தூரம் நடந்த போது பின்னால் ஒரு பஸ் வரும் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தார்கள்.

தர்மபுரியிலிருந்து ஹொகேனக்கலுக்குப் போய்க் கொண் டிருக்கும் பஸ் என்பது தெரிந்தது. விக்ரம் கையைக் காட்டினான். பஸ் நின்றது. ஏறிக் கொண்டார்கள். கூட்டம் இல்லை. விக்ரம் டிக்கெட் வாங்கிக் கொண்டு அவளை ஆதரவுடன் தன்மீது சாத்திக் கொண்டான். களைப்பினா லும் அச்சத்தினாலும் வெளுத்துப் போயிருந்த அந்தக் குழந்தை முகத்தில் பரிவோடு முத்தமிட வேண்டும் போலிருந்தது.

பஸ் ஹொகேனக்கலை நெருங்க நெருங்கக் குணா வின் முகத்தில் தெளிவு ஏற்பட்டது. அவளுடைய கை களிலும் கால்களிலும் இருந்த விறைப்பு நீங்கி, சுபாவ மான மென்மை உண்டாயிற்று.

''இப்போது எப்படி இருக்கிறது?'' என்று மறு படியும் கேட்டான் விக்ரம். ஹொகேனக்கலை மிகவும் சமீபித்து விட்டது பஸ். ஆற்றின் சலசலப்பு ஒலிகூடத் தூரத்தில் கேட்கிற மாதிரி இருந்தது.

''உடம்பில் சிற்சில இடங்களிலிருந்து ஊசியை எடுத்து விட்டாற் போல இருக்கிறது'' என்றாள் குணா. அவள் பேச்சில் நம்பற்கரிய திகைப்புக் காணப்பட்டது.

ஊருக்குள் பஸ் நுழைய நுழைய அவளுடைய வேதனை குறைந்து நிம்மதி அதிகரிப்பது வெளிப்படை யாகத் தெரிந்தது. ''இப்போது இங்கே ஊசி இல்லை. இப் போது இங்கே ஊசி இல்லை'' என்று ஒவ்வோரிடமாகத் தொட்டுக் காட்டினாள். சற்றுக் கண்ணை மூடிக் கொண் டால், குஷனில் செருகப்பட்டிருக்கும் குண்டூசிகள் ஒவ் வொன்றாய் அகற்றப்படுவதை நேரிடையாகப் பார்க்கிற மாதிரி இருந்தது அவளுக்கு.

ஆற்றங்கரை ஸ்டாப்பில் பஸ் நின்றது.

''இனி எங்கேயும் வலி இல்லையே?'' என்று விக்ரம் கேட்டான்.

அவளிடமிருந்து பதில் வரவில்லை. வேதனைகள் முற்றும் தீர்ந்து விட்டதேயொழிய, அவள் முகத்தில் எவ்வித சந்தோஷமும் தெரியவில்லை. ஏன், மனித உணர்ச்சிகளே கூட எதுவும் தென்படக் காணோம். மரத்தால் செய்த பதுமை போல இருந்தது அந்த முகம். கண்கள் இமைக்காமல், விழிகள் வெறிச்சிட்டு நின்றன. உதடுகள் இறுக்கமாக மூடியிருந்தன. தலை நேராக நிமிர்ந்திருந்தது.

''குணா'' என்று மறுபடியும் அவளைத் தொட்டு விசாரித்தான். அவளிடமிருந்து எத்தகைய பிரதிபலிப்பும் வரவில்லை. அவளைப் பாதுகாக்கிறவன், ராதாமணி என்ற அரக்கியிடமிருந்து அவளை மீட்கப் பாடுபடுகிறவன், தன்னருகிலே இருக்கிறான் என்ற பிரக்ஞையே அவளிடம் இல்லை.

கெஸ்ட் ஹவுசை நோக்கி அவள் பாட்டுக்கு நடந்தாள். அது மனித நடையாக இல்லாமல், முடுக்கி விட்ட யந்திரம் நடப்பது போல இருந்தது. தெருவில் கூட்டத்தைச் சேர்த்து மீண்டுமொரு அமளி ஏற்படுத்திவிடக் கூடாது என்று எண்ணினான் அவன். ஆகவே அவளைத் தடுக்கவில்லை. அவளுடன் பேச்சுக் கொடுக்கவுமில்லை. மௌனமாகப் பின் தொடர்ந்தான்.

விடுதியின் கேட்டருகே, சாலையில் ராதாமணி நின்றிருப்பது அவனுக்குத் தெரிந்தது. வெகு இயல்பாக, காலேஜிலிருந்து வரும் மகளை ஒரு தாய் எதிர்பார்த்து நிற்பது

போல, ஆசையும் பாசமும் புன்னகையுமாய் அவள் நின் றிருந்தாள். குணாவை ஒட்டினாற் போல் பின்னாலேயே வரும் விக்ரமை அவள் பொருட்படுத்தியதாகத் தெரிய வில்லை. ஒரே ஒரு வினாடி அவன்மீது அவள் பார்வை நிலைத்தது. 'என்னடா முட்டாள்!' என்று ஏளனத்துடன் கொக்கரிக்கும் சிரிப்பை அந்த வினாடியில் கண்டான். பிறகு அவள் பார்வை திரும்பி விட்டது.

''வாம்மா குணா'' என்று அவள் சொன்ன போது காவிரி ஆற்றின் வெள்ளத்தைக் காட்டிலும் அதிகமான அன்பு வெள்ளம் அவள் குரலில் தொனித்தது. ''ஏன் இத்தனை லேட்? ரொம்பக் கவலைப்பட்டு விட்டேன் கண்ணே'' என்று சொல்லி அவள் கைகளைப் பிடித்துக் கொண்டாள். தோளை ஆதரவாக அணைத்துக் கொண்டு உள்ளே அழைத்துச் சென்றாள். விக்ரமை அவள் திரும்பிப் பார்க்கவுமில்லை. லட்சியம் செய்யவுமில்லை.

அவர்களுடைய அறையை அடையும் வரை அவனும் பின்தொடர்வதை நிறுத்தவில்லை. ராதாமணியை ஏதோ கேட்க வேண்டுமென்றும் நினைத்தான். கேட்டு விட்டுக் குணாவிற்கு ஏதாவது கெடுதல் ஏற்படுத்தித் தந்துவிடப் போகிறோமே என்றும் நினைத்தான்.

அறைக் கதவைத் திறந்து கொண்டு முதலில் குணாவை அனுப்பினாள் ராதாமணி. ''போய் ரெஸ்ட் எடுத்துக் கம்மா. ரொம்பக் களைத்திருக்கிறாய்'' என்று சொல்லி விட்டு, திரும்பி விக்ரமை ஏளனமாய்ப் பார்த்து விட்டுத் தானும் உள்ளே போனாள்.

விக்ரம் அவளைக் கவனிக்கவில்லை. கதவு திறக்கப் பட்டிருந்த அந்த அரை நொடி நேரத்தில் அவன் பார்வை

உள்ளே சென்றது. மேஜைமீது ஒரு குட்டிச் சாத்தான் பொம்மை கிடப்பதையும் அதைச் சுற்றி நிறைய ஊசிகள் இருப்பதையும் அவன் கண்கள் கண்டன.

மறு நிமிடம் கதவு சாத்திக் கொண்டு விட்டது.

கொஞ்ச நேரம் காத்திருந்து பார்த்தான். மேற்கொண்டு என்ன செய்வது என்று உடனே தீர்மானிக்க முடியவில்லை. விடிகாலை அறையைக் காலி செய்து கொண்டு சென்ற .அதே நபர் திரும்பவும் பெட்டியுடன் அங்கே தோன்றி யதைக் கண்டு சிப்பந்திகளுக்கு ஆச்சரியம்.

மறுபடியும் அறை எடுத்துக் கொள்ளலாம் என்று நினைத்தான். ஆனால் அவனுடைய துரதிர்ஷ்டம் அது முடியவில்லை. சென்னையிலிருந்து ஒரு பெரிய தொழிற் சாலையின் அதிகாரிகள் கூட்டமாக வந்து மொத்த அறைகளையும் அன்று காலைதான் அமர்த்திக் கொண் டார்களாம்.

பழையபடி பஸ் ஸ்டாப்பை அடைந்தான். டீக் கடையில் ரொட்டியும் தேனீரும் வாங்கிப் பசியைத் தீர்த்துக் கொண்டான். மரத்தடி மேடையில் உட்கார்ந்திருந்த ஓர் ஆளிடம் அன்றைய தினசரியை இரவல் வாங்கிப் படித்து முடித்தான். கிளி ஜோசியக்காரனிடம் சோதிடம் கேட்டான். மிகவும் போரடித்தாலொழியச் சிகரெட் பிடிப்பதில்லை என்ற விரதத்தையும் மறந்து ஒரு பாக்கெட் காலி செய்தான். ஆனால் அத்தனை நேரமும் அவன் கண்கள் கெஸ்ட் ஹவுசின் மீதே படிந்திருந்தன.

கூட்டம் சேர்ந்தது. கரைந்தது. வெய்யில் ஏறிற்று. தாழ்ந்தது. பொறுமையுடன் உட்கார்ந்திருந்தான் விக்ரம். மாலை நாலு மணிக்கு—

நிமிர்ந்து உட்கார்ந்தான்.

ஆம், அதோ வருவது ராதாமணியும் குணாவும்!

நேரே சந்திக்க வேண்டாமென்று டீக் கடையின் ஓரமாகப் போய் நின்று கொண்டான்.

ராதாமணி முன்னே நடக்க, பின்னே பொம்மை யாய்க் குணா சென்றாள். இருவரும் ஆற்றங்கரையை அடைந்தார்கள். பரிசல் துறையை அடைந்தார்கள்.

விக்ரம் பதுங்கிச் சென்று அவர்களை அடையுமுன் பரிசலில் இருவரும் ஏறிவிட்டார்கள். அக்கரையில் அவர் கள் இறங்கிக் கொண்டு, பாறைகளைத் தாண்டிக் கொண்டு செல்வது சில நிமிடங்களுக்குத் தெரிந்தது. பிறகு பார்வையிலிருந்து மறைந்து விட்டார்கள்.

அவர்கள் போன திசையில்தான் புகழ்பெற்ற ஹொகே னக்கல் பெரிய பாணி இருக்கிறது என்று அவனுக்குத் தெரியும். புகை போல எட்டுத் திசையிலும் நீர்த் திவலை கள் பரவ, பயங்கரமான வேகத்துடன், உச்சியிலிருந்து பாதாளத்துக்கு நீர் விழும் அந்த இடத்திலே ராதாமணி என்ன செய்யப் போகிறாள்?

அவனுக்கு உடம்பு நடுங்கியது.

## 26

பெரியபாணி அருவியை நோக்கி ராதா மணியும் குணாவும் செல்லச் செல்ல விக்ரமுக்கு நெஞ்சு பதைத்தது. உயிருக்கே அபாயமான இடத் துக்குத் தான் அழைத்துச் செல்லப்படுகிறோம் என்கிற உணர்வு துளியும் இல்லாமல் சாவி கொடுத்த பொம்மை போல், சுற்றுப்புறங்களில் பார்வை செல்லாமல், ஜடம்

மாதிரி ராதாமணியைப் பின்தொடர்ந்து போகும் குணாவைப் பார்த்து அவன் உடல் பதைத்தது.

''குணா! எங்கே போகிறாய்? நில்லு! நில்லு!'' என்று தொண்டையில் பலம் கொண்ட மட்டும் கத்தினான். ஆனால் அக்கரையில் பரிசலிலிருந்து இறங்கி, பாறைக்குப் பாறை தாவிச் சென்று கொண்டிருக்கும் அவர்கள் காதில் விழுவதற்கான சாத்தியம் கொஞ்சம்கூட இருக்கவில்லை. இங்கே இவனுக்கு அருகில் நின்றிருந்த இரண்டு பேர் அவனை ஆச்சரியத்துடன் நோக்கினார்கள். ''குணா! போகாதே! போகாதே!'' என்று மீண்டும் கூவினான் அவன். பரிசலுக்காகக் காத்திருந்த அந்த இருவருக்கும் இப்போது பயம் உண்டாயிற்று. அவன் முகத்தைப் பார்த்தார்கள். அதில் தென்பட்ட கோபமும் பதற்றமும் அவர்களைப் பயம் கொள்ளச் செய்தன. கேட்க முடியாத இடத்தை நோக்கிக் கூவுகிற இவன் நிச்சயம் பைத்தியமாகத்தான் இருக்க வேண்டுமென்று அவர்களுக்குத் தோன்றியது. இவனோடு பரிசலில் போனால் நடு ஆற்றில் கவிழ்ந்து விடுவதில் சந்தேகமில்லை என்று தீர்மானித்தவர்களாக மெல்ல அந்த இடத்தை விட்டு நழுவினார்கள்.

குணாவின் கடைசிப் புள்ளிகூட விக்ரமின் பார்வையிலிருந்து மறைந்து விட்டது. இப்போது அவனும் சுழித்தோடும் காவிரியாறும் அசையாத மரங்களும் தண்ணீர்ப் பரப்புக்கு மேலே துருத்தி நிற்கும் பாறைகளும் தவிர எதுவுமில்லை. பரிசல் குத்தகைக்காரன் ஒரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு மரத்தடியில் போய் உட்கார்ந்து கொண்டான்.

''இந்தாப்பா! எனக்கு உடனே அக்கரைக்குப் போக வேண்டும்'' என்று அவனிடம் போய்க் கெஞ்சினான் விக்ரம்.

அவன் பீடியைப் பல்லில் கடித்துக் கொண்டு சிரித்தான். ''உன்னை என் தோள் மேலே தூக்கிப் போட்டுக் கொண்டு போகச் சொல்றியா?''

''பரிசலைக் கூப்பிடுங்க ஐயா'' என்று விக்ரம் மன்றாடினான்.

''அதுதான் வந்திட்டிருக்கானே!'' என்று எதிர்க் கரையில் திரும்பி வந்து கொண்டிருக்கும் பரிசலைச் சுட்டிக் காட்டினான் அவன். ''வந்ததும் போகலாம். கம்முனு இரு. ஆனால் ஆள் சேரணும். சேர்ந்த பிறகுதான் புறப் படும்.''

''அவசரம் ஐயா.''

''யாருக்குத்தான் சார் அவசரம் இல்லை? உனக்கும் அவசரம்தான். எனக்கும் அவசரம்தான்!'' என்று சிரித்துக் கொண்டே தத்துவம் பேசினான் அவன். ''நீ போட்ட கூச்சலைக் கேட்டுப் பயந்து போய் இங்கே இருந்த இரண்டு பேரும் ஓடிட்டாங்க! எட்டுப் பேராவது சேர்ந் தால்தான் பரிசலை எடுக்க முடியும்.''

அவனை வழிக்குக் கொண்டுவர விக்ரமுக்கு ஒரே ஒரு யோசனைதான் தோன்றியது. பர்சைத் திறந்தான். ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்தான். ''இந்தா, எல்லா ஆளுக்கும் சேர்த்து நானே தந்து விடுகிறேன். சரிதானே? பரிசல் வந்ததும் கிளம்பச் சொல்லு.''

அவன் முகம் உடனே மாறியது. கூழைக் கும்பிடு போட்டுப் பணத்தைப் பெற்றுக் கொண்டான். ''எப்பவும் நான் நியாயத்துக்குக் கட்டுப்படுகிறவன் சார்'' என்று சொல்லி விட்டு, ''டேய் கறுத்தான்! ஸ்பீடா வாடா!'' என்று பரிசல் பையனுக்குக் குரல் கொடுத்தான்.

பரிசல் வேகமாய் வந்து சேர்ந்தது. கரையை நெருங்கு முன்பே பரிசலோட்டிய பையன் ஒரு பாறையில் தாவிக் குதித்து இறங்கிக் கொண்டான். ''மாமா! இப்படி வாங்க!'' என்று பரிசல் குத்தகைக்காரனைக் கூப்பிட்டான்.

''என்னடா?''

''வாங்களேன், சொல்றேன்.''

பரிசலில் ஏறி உட்கார விரும்பினான் விக்ரம். ஆனால் அது இன்னும் கரைக்கு வராமல் தள்ளியே இருந் தது. அவனாகவே அந்த இடத்துக்குப் போக முடியாதபடி சுழலும் பாறைகளும் தடுத்துக் கொண்டிருந்தன.

பரிசல் குத்தகைக்காரனும் பையனும் தனியே போய்க் கிசுகிசுவென்று பேசிக் கொண்டிருப்பதைக் காண அவ னுக்கு எரிச்சலாக இருந்தது. ''வாப்பா சீக்கரம்!'' என் றான் பொறுமை இழந்தவனாக. 'என்ன பேச்சு வேண்டி யிருக்கிறது, இப்போது பார்த்து?' என்று அவன் நினைத்துக் கொண்டிருக்கும் போதே, பரிசல் பையன் பெரிய ஆளிடம் ஒரு நோட்டுத் தருவதையும் மற்றவன் அதை வாங்கிச் சட்டைப் பையில் மறைத்துக் கொள்வதையும் கண்டான். ஒரு வினாடிதான் என்றாலும் அது நூறு ரூபாய் நோட்டு என்று விக்ரம் கண்டு கொண்டான்.

பரிசல் பையன் இவன் பக்கமே வரவில்லை. அப் படியே பாறை பாறையாய்த் தாவி எதிர்த் திசையில் போய் விட்டான். ''டேய் பையா! டேய்!'' என்று விக்ரம் கூவு வதை லட்சியமே பண்ணவில்லை.

பெரிய ஆள் மெதுவாக அவனிடம் வந்தான். ஐந்து நிமிடத்துக்கு முன் வாங்கிக் கொண்ட பத்து ரூபாயை திருப்பித் தந்தான்.

''என்னய்யா?'' திகைத்தான் விக்ரம்.

''பரிசல் வராதுங்க.''

விக்ரமுக்கு அதிர்ச்சி. ''என்ன சொல்கிறாய்? ஏன் வராது? எனக்கு அவசரமாய்ப் போகணும்.''

''வராதுன்னா வராதுய்யா!'' அவன் இன்னொரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டான்.

அவனைத் தோளைப் பிடித்து உலுக்கினான் விக்ரம். ''இதோ பார்! நான் கட்டாயம் அக்கரை போயாகணும். இல்லாவிட்டால் அக்கரையில் பெரிய அபாயம்—அங்கே ஒரு கொலையே நடந்தாலும் நடக்கும். போலீஸ் விசாரணையில் நீ கட்டாயம் மாட்டிக் கொள்வாய்.''

அவன் அதற்கெல்லாம் மசியவில்லை. விக்ரம் பின் தொடராமல் இருப்பதற்காக ராதாமணி கொடுத்தனுப்பிய லஞ்சப் பணம் நன்கு வேலை செய்திருக்கிறது என்பது புலப்பட்டது. விக்ரமின் மிரட்டல் அவனைக் கோபம் கொள்ள வைத்தது. ''என்னிட்டியா வந்து போலீஸ்னு சொல்லுறே? ஆயிரம் போலீஸைப் பார்த்தவன் நான். போய்யா அப்பாலே!'' என்றான்.

இவனை மிரட்டல் உருட்டலில் வழிக்குக் கொண்டு வர முடியாது என்று விக்ரம் உணர்ந்தான். இவனை விட்டால் அக்கரைக்குப் போக வழியும் இல்ல. ஆகவே காலில் விழுந்தாவது மன்றாடுவதுதான் ஒரே மார்க்கம் என்று எண்ணியவனாக, மறுபடி அவனை அணுகிய போது—

எதிர்பாராத அதிசயமொன்று நிகழ்ந்தது.

அருகில் வந்த விக்ரமைப் பரிசல்காரன் நிமிர்ந்து பார்த்தான். கண்ணிமைக்கும் நேரத்துக்கும் குறைவுதான்.

திடீரென அவன் முகத்தில் ஒரு மிரட்சி உதித்தது. கை கால்கள் வெடவெடத்தன. ''இல்லீங்க... சரிங்க...'' என்று சொல்ல முயன்றான். தந்தியடிக்கிற மாதிரி நாக்கு நடுங்கியது.

விக்ரமுக்கு ஒன்றும் புரியவில்லை. இந்த ஆள் யாரைப் பார்த்துப் பேசுகிறான்? திரும்பி, தன் பின்னே நோக்கினான். ஒரு காட்டுச் செடியின் அசைவைத் தவிர எதுவும் தெரியவில்லை. ஆனாலும் விக்ரமின் பின்னே யாரோ—அல்லது எதுவோ—நின்று கொண்டிருப்பது போல இவன் பார்க்கிறான், தலையசைக்கிறான், நடுங்கிக் கொண்டே பேசுகிறான்...

இது என்ன மர்மமானாலும் இப்போது யோசனை செய்ய நேரமில்லை. பரிசல் குத்தகைக்காரனின் திடீர் அச்சத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியதுதான்...

''என்ன, என்னை அக்கரைக்கு அழைத்துப் போகிறாயா?'' என்றான் குரலில் கண்டிப்பை வரவழைத்துக் கொண்டு.

''ஆமாங்க... வாங்க... நானே கொண்டு போய் விட றேன்...'' என்று நடுங்கினான் அவன். ஆனால் பார்வை மட்டும் விக்ரமைப் பார்ப்பதாக இல்லாமல், அவனை யும் தாண்டி, அவனுக்குப் பின்னே நிற்கும் ஒருவரைப் பார்க்கிற மாதிரி இருந்தது. பார்த்த வண்ணமே தானே தண்ணீரில் இறங்கினான். விக்ரமை—அவன் பின்னால் தெரிகின்ற ஏதோ ஒன்றை—திரும்பித் திரும்பி அரண்டு மிரண்டு பார்த்துக் கொண்டே பாறைகளில் தாவினான். பரிசலைக் கரைக்கு இழுத்து வந்தான். ''ஏறிக்குங்க...'' என்றான் அச்சத்துடன்.

பரிசல் புறப்படுவதைக் கண்டு கரை மேட்டிலிருந்த மூன்று நாலு பேர் தாங்களும் வருவதற்காக விரைந்து வந்

தார்கள். ஆனால் அவர்களைப் பரிசல் ஆள் பொருட்படுத்த வில்லை. அவர்களுக்காகக் காத்திருக்கவுமில்லை. விக்ரம் ஏறி உட்கார்ந்ததும் விர் விர்ரென்று துடுப்புக் கோலைச் சுழற்றினான். பரிசல் ஒரு வட்டம் சுற்றி விட்டு நகர்ந்தது. அவன் வேக வேகமாய்ப் பரிசலைச் செலுத்தினான்.

என்ன வந்தது இவனுக்கு? திடீரென்று இவன் பயந்து பணிந்தது எதனால்? யார் இவனிடம் இந்த மாறுதலை ஏற்படுத்தினார்கள்? விக்ரமால் அறிய முடியவில்லை. பரிசலோட்டியின் முகத்தைப் பார்த்தான். அவன் தன்னையே பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. அவன் விழிகள் வெறித்து நிலைகுத்தி நகராமல் நின்றிருந்தன. யந்திர கதியில் கைகள் துடுப்புப் போட்டன.

இரண்டு நிமிடத்தில் எதிர்க்கரை வந்தது. இந்தப் பரிசல்காரனைப் பற்றிய புதிரை மேற்கொண்டு யோசித்த வாறே குதித்தான். அவன் திருப்பிக் கொடுத்து விட்ட பத்து ரூபாய் நோட்டை மறுபடி எடுத்து நீட்டினான்.

பரிசலோட்டி அதை வாங்கிக் கொள்ளவில்லை. கை யெடுத்துக் கும்பிட்டான். காலோடு தலை உதறலுடன் ஏதோ சொல்வதற்கு மீண்டும் மீண்டும் முயன்று, மீண்டும் மீண்டும் வார்த்தைகள் தொண்டைக் குழியில் சிக்கிக் கொண்டாற் போலத் திணறினான். தன்னை விட்டு விட்டால் போதும் என்று எண்ணியவனைப் போல ஒரே வீச்சில் கோலால் பரிசலைத் தள்ளி விட்டுக் கொண் டான். புலி பாய்கிற மாதிரி பரிசல் தண்ணீரில் பாய்ந்தது. முன்போலவே விக்ரமைத் திரும்பிப் பார்த்துக் கொண்டே விர்விர்ரென்று பரிசலைச் செலுத்திஞக் கொண்டு சென்று விட்டான்.

எந்தப் பக்கம் போவது என்று ஒரு கணம் நிதானித்தான் விக்ரம். சிற்றானைக் குட்டிகள் போலக் கரும் பாறைகள் வழியெங்கும் நிறைந்திருந்தன. தொலைவில், வெகு தொலைவில், ஊதுவத்திக் குன்றைக் கொளுத்தினாற் போல ஒரு புகை மூட்டம் மெல்லியதாகத் தெரிந்தது. ஹொகேனக்கலுக்கு அந்தப் பெயரைத் தந்துள்ள பெரியபாணி நீர்வீழ்ச்சி அங்கேதான் இருக்கிறது என்பதைக் கண்டு கொண்டான். அந்தத் திசையில்தான் குணாவை ராதாமணி அழைத்துச் சென்றிருக்க வேண்டும் என்று ஊகித்தான்.

குறுக்கே ஓடிய சிறு கால்வாய்களைத் தாண்டிக் கொண்டு, வேகமாக, அதே சமயத்தில் எச்சரிக்கையாக விரைந்தான். தான் போகும்வரை குணாவுக்கு எந்த ஆபத்தும் ஏற்படாமலிருக்க வேண்டுமே என்று தவித்துக் கொண்டே, அங்கங்கே முளைத்திருக்கும் புதர்களுக்கும் பாறைகளுக்கும் பின்னால் பதுங்கிப் பதுங்கி முன்னேறினான்.

பெரியபாணியை அடைந்த போது, அந்தக் காட்சி அவனை மெய்சிலிர்க்க வைத்தது.

பிரம்மாண்டமான அகலத்துக்குப் பிரளயமாகத் தண்ணீர் கொட்டிக் கொண்டிருந்தது. வெள்ளை வெளேரென்ற காகிதத் தாள் ஒன்று மாபெரும் பரப்பில் விழுந்து கொண்டிருப்பது போலத் தோன்றியதே தவிர, தனித் தனித் தண்ணீர் திவலைகளாகத் தெரியவில்லை. காதைச் செவிடுபடுத்தும் ஓசையுடன் அதல பாதாளத்தில் விழும் தண்ணீர், முட்டி மோதிக் கொந்தளித்துச் சீறிக் கொண்டு ஜிவ்வென்று ஒரு புகை மண்டலத்தை மேலே அனுப்பிக் கொண்டிருந்தது. அடிவாரத்தில் ராட்சத மல்லர்களைப் போலக் கட்டிப்

புரண்டு கொண்டிருந்த நீரலைகள், நூறு கோடி குடங்களில் கறந்த பாலைக் கொட்டினாற்போல நுரையை உற்பத்தி செய்து கொண்டிருந்தது. பார்க்கவே தலைசுற்றும் அங்கே எந்த மனித உயிரும் விழுந்து பிழைக்க முடியாது.

பிரமிக்கப் பண்ணும் அந்த இயற்கையின் ஆக்ரோஷத்தைக் கண்ட அதே வினாடி, தன் இருதயத் துடிப்பை நிற்கச் செய்யக் கூடிய இன்னொரு பயங்கரத்தையும் விக்ரம் கண்டான். பாறைகளின் இரண்டு மூன்று அடுக்குக்குக் கீழே ராதாமணியும் குணாவும் நின்றிருந்தார்கள். கரணம் தப்பினால் மரணம் என்னும்படியான அபாயகரமான விளிம்பு அந்த இடம்!

ராதாமணி சற்று உட்புறமாக, பின்புறம் இருந்த பாறையில் முதுகைச் சாய்த்தாற் போல் பாதுகாப்பாக இருந்தாள். குணா நின்றிருந்த இடம்தான் விளிம்பு. அவளுக்குப் பின்னால் எதுவும் இருக்கவில்லை—ஹோவென்று வாய் பிளந்துள்ள அருவிப் பள்ளத்தைத் தவிர.

அந்தக் காட்சி அவனுக்கு நடுக்கத்தை ஏற்படுத்தியது.

''குணா! அங்கே நிற்காதே! மேலே வந்துவிடு!'' என்று கூவினான். அது அவர்கள் காதிலேயே விழவில்லை. குணா முன்போலவே யந்திரப் பதுமையாக ராதாமணியைப் பார்த்தபடி நின்றிருந்தாள்.

ராதாமணி அவள் தோள்களைத் தன் இரண்டு கைகளாலும் பிடித்து அழுத்திக் கொண்டு ஏதோ சொல்லியவாறு இருந்தாள். நடுநடுவே சூனியச் சித்திரம் வரைந்த தன் உள்ளங்கையைப் பார்த்த வண்ணமாகவும் இருந்தாள். அவள் முகத்தில் அளவற்ற வெறுப்பும் சினமும் மண்டியிருந்தன.

அவள் எண்ணம் விக்ரமுக்குப் புரிந்தது.

ஒருமுறை தன் கையை விட்டு ஓடிய குணா இனி திரும்பத் திரும்ப ஓடிக்கொண்டுதான் இருப்பாள். வல்ல வனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டாகையால் எந்த நிமிடத்திலும் இன்னொரு பெரிய சக்தி நம்மை அடிக்கக் கூடும். அப்படி நேருமுன் இவளை ஒழித்துவிட வேண்டும் —இப்படி எண்ணித்தான் குணாவை இந்தத் தனியிடத் துக்கு அழைத்து வந்திருக்கிறாள்.

இது புரிந்ததும் விக்ரமின் அச்சம் அதிகரித்தது. இன்னும் பலமாக, ''குணா! குணா!'' என்று கத்தினான்.

அதுதான் காதில் விழுந்ததோ, அல்லது வேறு ஏதோ வொன்றோ, ராதாமணி திடுக்கிட்டு நிமிர்ந்து நின்றாள். எந்த வினாடியும் குணாவைத் தள்ளிவிடப் போகிற மாதிரி அவள் தோளை அழுத்திக் கொண்டிருந்த தன் கைகளை விருட்டென்று விலக்கிக் கொண்டாள். அவள் முகத்தி லிருந்த வெறுப்பு நீங்கி, பீதி பரவிய மாதிரி இருந்தது. கைகளை மறுபடி குணாவின் மீது வைக்க முயன்றாள். மறுபடியும் விலக்கிக் கொண்டாள்.

இல்லை—இவளாக விலக்கவில்லை. கண்ணுக்குத் தெரியாத ஏதோவொன்று ராதாமணியின் கைகளைப் பிடித்துத் தள்ளுகிறது—குணாவைத் தொடாதபடி தடுக் கிறது.

இரண்டு பாறை அடுக்குக்கு மேலாக நின்றிருந்த விக்ரமுக்கு நெட்டுயிர்த்தது. யார்? யார் அவள் கைகளை விலக்குகிறார்கள்? குணாவுக்குக் கோர முடிவை ஏற்படுத்த விடாமல் ராதாமணியை யார் தள்ளுகிறார்கள்?

அவன் சிலையென நின்றான்.

அதே சமயம் ராதாமணி தன் உள்ளங்கையைப் பார்த்துக் கொண்டாள். சூனியக் கோலம் வரைந்த அந்தக் கை திடீரென்று முறுக்கினாற் போல மடங்கியது.

'விடு! விடு!' என்று அவள் கூவுவது அவனுக்குக் காதில் விழாவிட்டாலும் அந்த அலறலை அவனால் ஊகிக்க முடிந்தது.

யாரோ ராதாமணியின் கையை வளைக்கிறார்கள். முறுக்குகிறார்கள். அவள் திமிறப் பார்க்கிறாள். கையை விடுவித்துக் கொள்ளப் பார்க்கிறாள். முடியவில்லை.

இதோ இப்போது குனிகிறாள்—இல்லை, குனிய வைக்கப்படுகிறாள். உள்ளங்கையைப் பாறையில் தேய்க்கிறாள்—இல்லை, அந்தச் சூனியச் சித்திரமுள்ள உள்ளங்கையைப் பாறையில் அழுத்தி யாரோ தேய்க்கிறார்கள். சுரண்டுகிறார்கள். அவள் வலி தாங்காமல் அலறுகிறாள். துடிக்கிறாள்.

விக்ரம் அதிர்ச்சியடைந்தான்.

இப்போது பாறை திடீரென்று சிவப்பாயிற்று. அவள் உள்ளங்கை ரணமாகி, அதிலிருந்து பெருகும் ரத்தம் ஈரமான பாறையின் சுவர்களைச் சிவக்க வைத்தது.

## 27

'என்னை விடு! என்னை விட்டுவிடு!' என்று ராதாமணி கத்தினாளோ என்னவோ, அவனுக்கும் அவர்களுக்கும் இருந்த தூரத்தினாலும், அருவியின் கர்ஜனையினாலும் அந்தச் சத்தம் விக்ரமுக்குக் கேட்கவில்லை. ஆனால் அவள் திமிறுவதும் வளைவதும்

நெளிவதும் அவனுக்குத் தெள்ளத் தெளிவாகத் தெரிந்தது. யாருடைய ராட்சதப் பிடியிலிருந்தோ தன்னை விடுவித்துக் கொள்ள அவள் போராடுவது புரிந்தது.

ஈரமான பாறையில் அவளுடைய உள்ளங்கை — சூனியக் கோலம் வரையப்பட்ட உள்ளங்கை — வலுக்கட்டாயமாகத் தேய்க்கப்படத் தேய்க்கப்பட, அந்த உரசலைத் தாங்க மாட்டாமல் ரத்தம் செக்கச் செவேலென்று பீரிடப் பீரிட, அவர்களுடைய காலடியில் பாறை செந்நிறமாக ஆக

விக்ரம் இன்னோர் அதிசயத்தையும் கவனித்தான்.

கெஸ்ட் ஹவுசில் புறப்பட்டது முதல் யந்திரம் போல—முடுக்கி விட்ட பதுமை போல—இருந்த குணாவிடம் ஒரு மாறுதல் மெல்ல மெல்ல இப்போது ஏற்பட்டது. வெகு நேரம் மயக்கமாகக் கிடந்தவள் சிறிது சிறிதாக உணர்வு பெறுவது போல அவள் கைகள் தளர்ந்து அசைந்தன. முகம் இயல்பாகத் திரும்பி நாற்புறமும் பார்த்தது. அவள் இருபது இருபத்தைந்து அடி கீழே இருந்த போதிலும் அந்த முகத்தில் ரத்தம் பரவி, கன்னமும் உதடுகளும் உயிர் பெற்றாற் போல மென்மைப்படுவதைக் கண்டான். அவள் விழிகள் சஞ்சலத்துடன் அசைந்தன. சில நிமிடங்களில் அவள் முழுப் பிரக்ஞையும் பெற்றவளாக, திடுக்கிட்டுத் தன் சுற்றுப்புறத்தைக் கவனித்தாள். கீழே பரவும் ரத்தத்தையும் ராதாமணி திமிறுவதையும் பார்த்துப் பயந்து அலறுவது விக்ரமுக்குத் தெரிந்தது.

வாயின் முன் கைகளைக் குவித்துக் கொண்டு.

''குணா! நான் இங்கே இருக்கிறேன்! பயப்படாதே!'' என்று தொண்டை கிழிகிற மாதிரி கத்திக் குரல் கொடுத்

தான். முதலில் அவள் கவனிக்கவில்லை. அவன் பல முறை கூவிய பிறகு, தற்செயலாக மேற்புறம் பார்த்தவள் முகம் மலர்ந்தாள். அவளுடைய மனத்துக்குள் மலரும் தைரியமும் அதே சமயம் தான் இருக்கும் அபாய நிலையை உணர்ந்த அச்சமும் மாறி மாறி அவள் முகத்தில் பிரதிபலித்தன.

''விக்ரம்! என்னைக் காப்பாற்றுங்கள்!'' என்று கீழே யிருந்து அவள் கூவினாள். இரு கைகளையும் அவனை நோக்கி நீட்டினாள்.

பதட்டத்தில் அவளுடைய கால் பிசகிவிடக் கூடாதே என்று விக்ரம் நடுங்கினான். அங்குல அகலம் வழுக்கி னாலும் அவள் கிடுகிடு பாதாளத்தின் தண்ணீர்ப் பிரளயத் தில் விழுந்து உருத் தெரியாமல் சங்கமித்து விடுவாள் என்பதை உணர்ந்தவனாக, ''குணா! ஜாக்கிரதை! ஜாக் கிரதை! அசையாமல் இரு!'' என்று கத்தினான்.

கண்ணுக்குத் தெரியாத சக்தியிடமிருந்து விடுபடுவ தற்காகப் போராடிக் கொண்டிருந்த ராதாமணி இப்போது அவனையும் அவளையும், இருவருக்குமிடையே நடை பெறும் சம்பாஷணைகளையும் கவனித்து விட்டாள். தான் தோற்றுக் கொண்டிருக்கிறோம் என்ற ஆத்திரத்துடன், இவள் ஜெயித்துக் கொண்டிருக்கிறாளே என்ற ஆங்காரத் துடன், இத்தனைக்கும் காரணமானவன் எங்கிருந்தோ வந்து சேர்ந்த இந்த விக்ரமல்லவா என்ற வெறியும் சேர்ந்து கொண்டது.

அப்போது அவள் முகம் பார்ப்பதற்கு மகா பயங்கர மாக மாறிற்று. முன்னே இம்மியத்தனை மனுஷத்தனம் அதில் இருந்திருக்குமானால் அதுவும் மறைந்து போய்

விகாரமான அசுரத்தனம் பரவிற்று. வெகு கோரமான பிசாசுக் களை அங்கே படருவதைக் காணுகையில் அவனுக்குப் பாதாதிகேசம் ஒரு நடுக்கம் உண்டாயிற்று. தன்னுடைய ஆட்டமெல்லாம் முடிந்து விட்டது என்பதை அவள் புரிந்து கொண்டாள் போலும். அந்தக் கடைசி வினாடியில் எங்கிருந்தோ அவளுக்கு ஒரு புதுப் பலம் ஏற்பட்டது.

காதைச் செவிடாக்கும் ஒரு கூச்சலுடன் குணாவை இறுகப் பிடித்துத் தன்னோடு சேர்த்துக் கட்டிக் கொண்டாள். தன் கதை முடிவதோடு குணாவின் வாழ்க்கையும் முடிந்துவிட வேண்டும் என்று தீர்மானித்தவளாக, அந்தப் பாதாள பள்ளத்தில் குபீரென்று பாய்ந்தாள்.

''ஐயோ குணா!'' என்று விக்ரம் கத்தி முடிக்குமுன், கீழே கொந்தளிக்கும் தண்ணீர் அலைகளுக்குள் அவர்கள் இருவருடைய உடல்களும் முழுகி விட்டன!

''குணா! குணா!'' என்று அலறிக் கொண்டே இங்குமங்கும் பாறை பாறையாகத் தாவினான் விக்ரம். அத்தனை பதற்றத்திலும் அவன் பகுத்தறிவு ஒழுங்காக இருந்ததால், கண்டபடி கீழே குதித்தால் தானும் அதோகதியாக வேண்டியதுதான் என்பதை உணர்ந்தவனாகத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான். கீழே இறங்குவதற்கோ அல்லது ஆற்றின் இன்னொரு கோடியை அடைவதற்கோ வழியுண்டா என்று பதைப்புடன் ஆராய்ந்தான். அக்கம் பக்கத்தில் உதவிக்கு யாரேனும் அகப்படுவார்களா என்று இங்குமங்கும் ஓடிப் பார்த்தான். ஒரு காக்கை குருவிகூடப் பறக்கக் காணோம். கீழே நோக்கினான். சுழித்துக் கொண்டு ஓடும் காட்டாறு எகிறிக் குதித்துச் சிரித்துக் கொண்டிருந்தது.

''குணா! குணா!'' என்று பலம் கொண்ட மட்டும் கூவினான்.

அவனுடைய கூவலுக்குப் பதிலே போல, அவனுடைய பிரார்த்தனைக்குப் பலனே போல, அவனுடைய வேதனைக்கு மருந்தே போல—

அந்த அற்புதம் நிகழ்ந்தது.

தான் காண்பது கனவா அல்லது நனவுதானா என்று தெரியாமல் அவன் அதிர்ச்சியுற்றான். கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்த்தான்.

ஆம், ஆம்—சந்தேகமில்லை.

அந்தப் பாதாள நுரையிலிருந்து குணாவின் உடம்பு மேலெழுந்து வந்தது சிறிது சிறிதாக.

தண்ணீரில் மூழ்குபவர்கள், உயிர் பிரிந்ததும், சவமாக மேல் பரப்புக்கு மிதந்து வருவார்கள் என்று அவன் கேள்விப்பட்டிருந்தான். குணாவுக்கு மரணம்தான் நிகழ்ந்து விட்டதோ என்று அவன் துடித்துக் கொண்டிருந்த போதே—

தண்ணீர்ப் பரப்புக்கும் மேலாக எழும்பி வந்தது குணாவின் தேகம். இன்னும் மேலே, இன்னும் மேலே, இன்னும் இன்னும் இன்னும்...

மல்லாந்த நிலையில், ஆனால் இரு கைகளும், இரு கால்களும் தலையும் கீழாகத் தொங்கினாற் போல அவள் அவனை நோக்கி வந்தாள். கூந்தல் பிரிந்திருந்தது. புடவையிலிருந்து தண்ணீர் சொட்டியது.

ஆனாலும் அவள் மேலே வந்தாள்.

இரண்டு கைகளாலும் யாரோ அவளைத் தூக்கிக் கொண்டு வருகிற மாதிரி இருந்தது. தூக்கி வரும் உருவம் தான் கண்ணுக்குத் தெரியவில்லையே தவிர அவள் உடம்பு வளைந்திருந்த பாங்கு நிச்சயமாய் யாரோ அவளைச் சுமந்து வருவதைச் சந்தேகமறக் காட்டியது.

அவன் பிரமித்துத் திகைத்து, வியப்பினால் மூச்சடைத்துச் சிலையாக நின்றான். குணா வெறும் காற்றின் அந்தரத்தில் மிதந்த வண்ணம் மேலே வந்தாள். சற்று முன் அவளும் ராதாமணியும் நின்றிருந்த பாறை யையும் தாண்டி மேலே வந்தாள். அவன் நின்றிருந்த இடத்தை அடைந்ததும் மெல்லக் கீழிறங்கினாள். யாரோ அவளை அவன் காலடியில் கிடத்தினார்கள்.

அவள் கண்களைத் திறக்கவில்லை.

''குணா! குணா!''

நல்ல வேளையாக, அவனுக்குச் சிறு வயதில் கற் றிருந்த முதலுதவி ஞாபகம் வந்தது. அவள் உடைகளைத் தளர்த்தி, கவிழ்த்துப் போட்டு, கைகளைப் பரப்பி, முதுகில் முழங்காலால் அழுத்தினான். அவள் வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும் தண்ணீர் வழிந்தது. திணறலுடன், இரும லுடன் மூச்சு சீராகத் தொடங்கியது.

வானத்தை நோக்கிக் கைகூப்பி இறைவனுக்கு நன்றி சொன்னான் விக்ரம். ''குணா, குணா, இங்கே பார். குணா, கண்ணம்மா. என்னைப் பார்'' என்று மெல்ல அவள் காதருகே வாய் வைத்து அழைத்தான்.

அவள் புரண்டாள். முனகினாள். இமைகள் பட படத்தன. பிறகு மெதுவே கண்ணைத் திறந்தாள். அவள்

உதடுகள் என்னவோ முணுமுணுத்தன. குனிந்து கூர்ந்து கேட்டான்.

''ரத்தினம்... ரத்தினம்...'' என்று அவள் முனகுவது புரிந்தது.

''ரத்தினமா? யார்...'' என்று அவன் திகைத்தான். அதற்குள் அவளுக்குப் பிரக்ஞை மேலும் அதிகரித்தது. குனிந்திருக்கும் அவன் கழுத்தைத் தன் இரு கைகளாலும் மாலையாய்க் கோர்த்துக் கொண்டு, ''ரத்தினம்... என் அண்ணன் ரத்தினம்...'' என்றாள்.

அந்த உண்மை அவனை மூச்சடைக்கச் செய்தது. ரத்தினம்! அவள் அண்ணன்!

இரண்டு நாளாய்ப் புரியாததெல்லாம் அவனுக்குப் புரிந்தது. குணா தன் அறைக்குள் ஒரு பேய் நுழைந்ததாகச் சொன்னது, ராதாமணியும் குணாவும் பெரியபாணியை நோக்கிப் போன போது இன்னோர் உருவம் பின்தொடர்ந்து வருவது போல் தனக்குத் தோன்றியது, ராதாமணியின் சூனியக் கையைப் பலவந்தமாக அழித்தது, கடைசியில்—

பலவீனத்தால் திணறியபடி குணா விளக்கினாள்:

''தண்ணீரில் விழும் போதே யாரோ தாங்கிக் கொள்கிற மாதிரி இருந்தது... அந்த ஒரு வினாடிதான் அந்த முகத்தைப் பார்த்தேன்... என் அண்ணன்... அருமை அண்ணன்—ரத்தினம்... கொடைக்கானல் ஏரியில் மூழ்கி இறந்து போனவன்... இந்தச் சூனியக்காரியிடமிருந்து அவன் தான் என்னைக் காப்பாற்றியிருக்கிறான்...''

அவளை மெதுவே எழுப்பித் தன் தோளில் சாய்த்துக் கொண்டான் விக்ரம். மெதுவே மெதுவே ஈரம் உலர்ந்து

கொண்டிருக்கும் முகத்தையும், நெற்றியில் ஒட்டிக் கொண்டிருந்த கூந்தல் இழைகள் வெகு அழகாய் விடு பட்டு அருவிக் காற்றிலே சிலிர்த்துக் கொள்ளும் அற் புதத்தையும் பார்க்கப் பார்க்க அவனுக்குப் பரவசமாயிற்று. அந்தப் பரவசத்தில் அவன் பேச்சிழந்தான். அந்தி வெளிச் சம் கண்ணுக்குத் தெரியாமல் கவிழ்ந்து கொண்டிருந்தது. அருவியையும் காடுகளையும் மலைகளையும் தவழ்ந்து தவழ்ந்து இருள் போர்த்திக் கொண்டது. முகத்திரைக்கு மேல் முகத்திரை மூடிய மாதிரி பெரியபாணி தன் தனித் தன்மைகளை இழந்து கொண்டிருந்தது. பகல் வெளிச் சத்தின் கதை முடிந்து விட்டதைப் பார்த்துப் பிரமித்த மாதிரி காற்றுக்கூட அசைவற்று நின்றது. அதோ அங்கே ஓயாமல் வீழ்ந்து கொண்டிருக்கும் அருவியைப் போலவே, தானும் குணாவும் ஓர் இன்ப உலகத்தில் வீழ்ந்து கொண்டிருப்ப தாக அவன் உணர்ந்தான். அவன் அவளை எதுவும் கேட்க வில்லை. அவளும் அவனை எதுவும் கேட்கவில்லை. இரு வருடைய நரம்புகளுக்குள்ளும் அற்புதமான சாந்தி பரவி, இருவருடைய இருதயத் துடிப்பும் ஒன்றாகச் சேர்ந்து இயங்குவது போலிருந்தது. அவன் அவள் கைகளை அழுந்தப் பிடித்துக் கொண்டு அவள் கண்களை ஆழ மாகப் பார்த்தான். இனிமேல் நான் உனக்கு, நீ எனக்கு என்று அவள் கண்கள் சொல்லின. இனி நம்மைப் பிரிக்க எந்த ராதாமணியும் வர முடியாது என்று அவன் கண்கள் சொல்லின.

நரீஷ் கதையை முடித்த போது துங்கபத்ராவின் அழகிய கருங்கல் பாறைகளில் ஒன்றில் நாங்கள் உட்கார்ந்திருந் தோம். சலசலவென்று நதி ஓடிக் கொண்டிருந்ததால்

குணாவின் அதிசயக் கதையும் ஹொகேனக்கலின் நீர் வீழ்ச்சியும் என் கண் முன்னே நிகழ்வது போன்ற பிரமை என்னுள் ஏற்பட்டிருந்தது.

''வா போகலாம்'' என்று நரீஷ் எழுந்தான். ஈர வேட்டியைக் கட்டிக் கொண்டு அவனைப் பின்தொடர்ந்தேன். ராகவேந்திர சுவாமிகளின் மந்திராலயத்துக்குச் செல்லும் வழியில் பக்தர்களும் நேர்ந்து கொண்டவர்களும் கூட்டம் கூட்டமாக எதிர்ப்பட்டார்கள். அவர்களில் பலர் தொழு நோய்க்காரர்கள். குழந்தைச் செல்வத்துக்காக நேர்ந்து கொண்டு வந்துள்ள பல கணவன் மனைவிகள். கல்யாண மாக வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு வந்துள்ள கன்னிப் பெண்கள்.

ஒவ்வொருவரும் அவரவருக்குத் தெரிந்த நாமாவளி யையோ தோத்திரத்தையோ மெல்லிய குரலில் சொல்லிக் கொண்டு சென்றார்கள். எல்லாருடைய முகங்களிலும் நம்பிக்கை. எதிர்பார்ப்பு, ஆவல்...

என் நடை தயங்குவதையும் என் முகத்தில் வேதனை படருவதையும் நரீஷ் கவனித்து விட்டான். ''என்ன ராஜா?'' என்றான்.

''எனக்கு என் சொந்தப் பிரச்னை ஞாபகம் வந்து விட்டது... நரீஷ், என் கஷ்டம் தீருமா?'' என்றேன் குரல் தழுதழுக்க.

''கட்டாயம் தீரும். இல்லாமலா இத்தனை ஆயிரம் பேர் இங்கே அலை மோதுகிறார்கள்? நம்பிக்கையுடன் இரு. மந்திராலயத்துக்கு வந்தவர்களுக்குப் பலன் கிட்டா மல் போவதில்லை.''

''இருந்தாலும் நரீஷ், என் கஷ்டம் என்னவென்றால்...''

''உஷ்! சொல்லாதே!'' என்று மீண்டும் அதட்டினான் அவன். ''உன் கஷ்டத்தைச் சுவாமிகளின் சன்னதியில், அவருக்கு மட்டுமே கேட்கும்படி சொல்லு. மனிதக் காதுகளில் போடாதே!'' என்று முன்போலவே எச்சரித்தான்.

கோவிலுக்குள் சென்று முதலில் ஆஞ்சனேயரை வணங்கினோம். ராகவேந்திர சுவாமிகளின் சமாதி உள்ள பிருந்தாவனத்தைத் தரிசனம் செய்து கொண்டே, ஐந்து இடங்களில் ஐந்து நமஸ்காரம் பண்ணினோம். அரச மரம், வேப்ப மரங்களின் கீழே நாகப் பிரதிஷ்டை பண்ணி வைத்திருப்பதைக் கண்டுவிட்டுத் திரும்பிய போது, சுவாமிகளின் சமாதியில் பஞ்சாமிர்த அபிஷேகம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அதையும் அடுத்து நடைபெற்ற அலங்காரங்களையும் பக்தர்களின் திருக்கூட்டத்துடன் சேர்ந்து நின்று தரிசனம் செய்தோம். தூபமும் தீபமும் கோஷமும் மந்திரமும்—அந்தப் புனிதமான சூழ்நிலை என்னை நெகிழ வைத்தது.

ஆஞ்சனேயர் சன்னதிக்கும் சுவாமிகளின் சன்னதிக்கும் நடுவே அகலமான மேடையொன்று இருந்தது. இரண்டொருவர் அங்கே உட்கார்ந்து மௌனமாகத் தியானம் செய்து கொண்டிருந்தார்கள். ''நரீஷ், நாமும் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருக்கலாம்'' என்றேன்.

''நானே அதைத்தான் சொல்ல நினைத்தேன். ஆனால் அதற்கு முன் இன்னொரு முக்கியமான வேலை இருக்கிறது. அதை முடித்துக் கொண்டு வரலாம், வா'' என்று அவன் என்னை வெளியே அழைத்துச் சென்றான்.

முக்கியமான வேலை என்று அவன் குறிப்பிட்டது சாப்பாட்டைத்தான். ஆயிரக்கணக்கானோருக்கு மந்திராலயத்தில் அன்றாடம் அன்னதானம் நடைபெறுகிறது. அதற்கான சீட்டுக்களை வாங்கிக் கொண்டான் நரீஷ்.

திரும்பி வருகையில் ஒரு மோட்டாவான ஆள் என்னை இடித்துக் கொண்டு தாண்டிச் சென்றான். கொஞ்ச நேரமாகவே அவன் என் முன்னாலும் பக்கத்திலும் பின்னாலும் வந்து போய்க் கொண்டிருப்பதைக் கவனித்திருந்தேன். கொஞ்சம் அவசரக்காரனாகத் தோன்றினானே தவிர மற்றப்படி எந்த விதத்திலும் கெட்டவனாகத் தெரியவில்லை. இருந்தும் எனக்கு ஏனோ அவனிடம் ஒரு வெறுப்பும் கோபமும் ஏற்பட்டன.

''சில பேரைக் கண்டால் காரணமில்லாமலே நமக்கு வெறுப்பு வருவது ஏன் நரீஷ்? அதோ அந்த ஆளை எனக்குப் பிடிக்கவில்லை. ஏன்? போன ஜன்மத்தில் நானும் அவனும் எதிரியாக இருந்திருப்போமோ?'' என்று நண்பனைக் கேட்டேன்.

நரீஷ் சிரிக்கவில்லை. அவன் முகத்தில் சிந்தனைக் கோடுகள் ஆழமாக வரியிட்டன. ''போன ஜன்மத்தில் தான் எதிரியாக இருக்க வேண்டுமென்பதில்லை. எட்டு ஜன்மம், பத்து ஜன்மங்களுக்கு முன்னால்கூட — நானூறு ஐநூறு வருடங்களுக்கு முன்பு கூட—பகைமை ஏற்பட்டிருந்து, திடீரென்று இன்று வெடிப்பது சாத்தியம்தான்'' என்றான். ''நவநீதனுக்கு அப்படித்தான் நேர்ந்தது...''

நான் அவனைத் தூண்டவில்லை. எதுவும் பேசாமல் அவன் முகத்தை நோக்கினேன். அவனுடைய அடுத்த கதை தானாகவே வருமென்று நினைத்தேன்.

வந்தது.

## ஐந்நூறு வருடத்துப் பகைமை

நடுத்தர வகுப்பினரின் சராசரியான பிரதிநிதி நவநீதன். அந்த வர்க்கத்தின் பொறுமை, பொறாமை, ஆசை, அச்சம், நம்பிக்கை, அவநம்பிக்கை, பலம், பலவீனம் எல்லாம் அவனிடமும் இருந்தன. பழைய மாம்பலத்தின் இரண்டு சாரித் தெருக்களில் சின்னக் குடித்தனக்காரர்கள் எப்படி இருப்பார்களோ அப்படியே அவனும் இருந்தான். வாசல் பக்கத்து ஜன்னலில் கண்ணாடியை மாட்டிக் கொண்டு ஷேவ் செய்து கொள்வான். சர்க்குலேட்டிங் லைப்ரரியில் வாங்கிய பத்திரிகைகளைப் படித்து விட்டு பத்திரமாகத் திருப்பிக் கொடுப்பான். இரண்டு வயதுப் பையனுக்கு இருமல் ஜுரம் வரும் போது தோளில் சாத்தி எடுத்துக் கொண்டு டாக்டரிடம் சென்று, பார்மஸியில் கடன் சொல்லி மருந்து வாங்குவான். பிளாஸ்டிக் கூடையுடன் ரங்கனாதன் தெருவுக்குச் சாயங்காலம் போய்ப் புடலங்காய் வாங்கி ஒடித்துப் போட்டுக் கொள்வான். மனைவி சரளா அவனைக் கேட்காமல் புடவை வாங்கினால் பகலில் திட்டி விட்டு இரவில் சரணடைவான்.

மவுண்ட் ரோடில், ஆனந்த் தியேட்டருக்கு அருகே ஒரு டெக்ஸ்டைல் கம்பெனியில் அவன் டைப்பிஸ்ட். அதன் தலைமை அலுவலகமும் துணி ஆலையும் அகமதாபாத்தில் இருந்தன. சென்ற மூன்று மாதமாய் அங்கே வேலை நிறுத்தம் என்று இங்கேயும் ஆபீசை மூடி வைத்திருந்தார்கள். நல்ல வேளை, சென்னை அலுவலகத்தில் சம்பளம் மட்டும் ஒழுங்காகத் தந்து கொண்டிருந்தார்கள்.

இன்றுதான் அகமதாபாத்தில் ஸ்டிரைக் முடிந்து, இங்கே ஆபீசைத் திறந்தார்கள். இருபத்தேழு ஊழியர் களுடன் நவநீதனும் அப்பாடா என்ற பெருமூச்சுடன் உள்ளே நுழைந்தான்.

அன்று புதிய மானேஜர் நியமிக்கப்பட்டிருக்கிறார் என்று சொன்னார்கள். ஒவ்வொருவராய் அவருடைய அறைக்குள் போய்த் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டு வணக்கம் தெரிவித்து விட்டு வந்தார்கள்.

நவநீதனும் போனான். புதிய மானேஜரின் முகத்தைப் பார்த்ததும் மின்னல் மாதிரி ஓர் எண்ணம் அவன் மனத்தில் உதித்தது; 'இந்த ஆளைக் கொல்ல வேண்டும்.'

## 28

புதிய மானேஜர் தியாகராஜ் முகத்தில் புன்னகையுடன் நவநீதனை விஷ் பண்ணினார். என்ன இலாகாவில், என்ன வேலை செய்கிறாய் என்று விசாரித்தார். அவருடைய குரல் மென்மையாக இருந்தது. ஆள் மட்டும் கொஞ்சம் மோட்டாவாக, மாநிற மாக இருந்தார். அந்த மாதிரித் தோற்றமுள்ளவர்கள் சாது வாயும் நகைச்சுவை உணர்ச்சி உள்ளவர்களாகவும் இருப் பார்கள் என்று கேள்விப் பட்டிருக்கிறான். இருந்தும் கூட அவரிடம் அவனுக்குப் பிரியம் ஏற்படவில்லை. 'இவரைக் கொல்ல வேண்டும்' என்ற எண்ணமே உதித்தது.

ஏன் அப்படி? ஏன் அப்படி? அவனுக்குப் புரிய வில்லை. இன்னும் இரண்டொரு வினாடி அங்கே நின் றிருந்தால் குபீரென்று அவர் மீது பாய்ந்து கழுத்தை நெரித்து விடுவோமோ என்று அவனுக்கு நடுக்கம் ஏற்பட்டது. அவர் கேட்ட கேள்விகளுக்கு ஏதோ உளறலாய்ப் பதில்

சொல்லி விட்டு ஓட்டமும் நடையுமாகத் தன் இடத் துக்குத் திரும்பி விட்டான்.

''தங்கமான மனிதர்'' என்று டைப்பிஸ்ட் மணி சொல்லிக் கொண்டிருந்தார்.

''முன்னே இருந்ததே ஒரு முசுடு! சனியன்!'' என்று முன்னவரைச் சபித்துக் கொண்டிருந்தார் டெஸ்பாட்ச் ரங்கனாதன்.

பியூன் முனுசாமி, ''இத்தனை வருஷ செர்வீசில் என்னை யாரும் வாங்க போங்கன்னு சொன்னது கிடை யாது. இவர்தான் மரியாதை கொடுக்கிற முதல் ஆள்'' என்று மகிழ்ந்து கொண்டிருந்தான்.

இதெல்லாம் நவநீதனின் காதில் விழுந்ததே தவிர, மனத்தில் உறைக்கவில்லை. இவர்கள் எல்லோரும் பொய் சொல்கிற மாதிரியும் தன் உள்ளத்தின் ஆழத்தில் உதித் திருக்கிற வெறுப்புணர்ச்சிதான் உண்மை போலவும் தோன் றியது. அன்று பூரா தன் வேலைகளை மௌனமாகவே முடித்து விட்டு வீடு திரும்பினான். மனைவியுடனோ குழந்தையுடனோ சரியாகப் பேசவில்லை. மார்க்கெட் டுக்குப் போகவில்லை. ரேடியோ கேட்கவில்லை. தன் சுபாவம் ரொம்பவும் மாறி விட்டதோ என்று அச்சப்பட்ட வனாக, அந்த அச்சத்தினாலேயே மேலும் ஒதுங்கி வாழ் பவனாக இருந்தான்.

இப்படியே இரண்டு வாரம் ஓடியது. கூடுமானவரை மானேஜரின் கண்ணில் படாமலேயே இருந்து வந்தான். பார்ப்பானேன், அந்தக் கொலை எண்ணம் தோன்றுவானேன் என்று தலைமறைவாக இருந்தான். தியாகராஜ் மிகவும்

சுறுசுறுப்பாகக் காரியங்கள் செய்வதாகப் பேசிக் கொண் டார்கள். வேலை நிறுத்தத்துக்கு முன்னால் நின்று போயிருந்த பல 'பெண்டிங்' விஷயங்களை அவர் மேலிடத்தின் துணையுடன் வேக வேகமாய்ப் பைசல் செய்து கொண் டிருக்கிறார் என்று காதில் விழுந்தது. நவநீதன் எதிலும் அக்கறை காட்டவில்லை.

அன்று காலை பியூன் முனுசாமி வந்து, ''உங்களை மானேஜர் கூப்பிடுகிறார் சார்'' என்று தெரிவித்த போது அவனுக்குத் திகைப்பாயும் பயமாயும் இருந்தது. தயங்கிக் கொண்டே சென்றான்.

''குட் நியூஸ் டு யூ. நவநீதன்'' என்றார் தியாகராஜ் பரந்த புன்னகையுடன்.

அவன் விழிக்க, ஒரு கடிதத்தை அவனிடம் நீட்டி னார். ''நீங்கள் கேட்டிருந்த டிரான்ஸ்ஃபர்'' என்றார்.

அவனுக்குப் பேச்சே வரவில்லை. அவன் வேலை பார்த்த நிறுவனத்துக்கு இரண்டு கிளைகள் இருந்தன. ஒன்று மவுண்ட்ரோடில். இன்னொன்று தியாகராய நகரில். அவன் வசிப்பது மாம்பலத்தில். ஆகையால் தி.நகர் கிளைக்கு மாற்றல் கிடைத்தால் வசதியாக இருக்குமே என்று அவன் நினைத்தான். முக்கியமாக, பஸ் செலவு மிச்சம், சீக்கிரமாக வீடு திரும்பி மனைவி குழந்தையைக் கொஞ்சலாம். இப்படியெல்லாம் எண்ணி அவன் மாற்ற லுக்கு மனுச் செய்திருந்தான். ஆனால் அது எந்தக் காலத் திலோ, மறந்துகூடப் போய் விட்டது அவனுக்கு.

இப்போது புதிய மானேஜர் பழைய விஷயங்களை யெல்லாம் தீர்க்கிற ஜோரில் அவனுடைய மாற்றல்

மனுவுக்காக மேலிடத்துக்குச் சிபாரிசு செய்து முடித்துத் தந்திருக்கிறார் என்று தெரிந்தது.

டிரான்ஸ்பர் ஆர்டரை வாங்கிக் கொண்டு அவன் திரும்புகையில், ''என்ன, எனக்கு ஒரு தாங்க்ஸ் கூடக் கிடை யாதா?'' என்று தியாகராஜ் சிரித்துக் கொண்டே கேட்டார்.

''வந்து... மறந்து விட்டேன் சார்... தாங்க்ஸ் சார்...'' என்று குழறி விட்டுத் திரும்பினான்.

இந்த ஆளின் முகத்தைப் பார்க்காமல் வேறு இடத் துக்குப் போய்விடப் போகிறோம் என்ற எண்ணமே பெரும் உற்சாகத்தைத் தந்தது. எல்லா நண்பர்களுக்கும் ஸ்வீட் வாங்கிக் கொடுத்தான். குழந்தைக்கு லாலா கடைப் பட்சணமும் மனைவிக்கு மல்லிகைப் பூவும் வாங்கிக் கொண்டு வீடு சென்றான்.

''அப்பாடா! ஒரு மாசத்துக்குப் பிறகு இப்போதுதான் உங்கள் முகம் பார்க்கும்படி இருக்கிறது'' என்றாள் சரளா.

''அப்படியா?'' என்று அசடு வழிந்தான் நவநீதன்.

''ஆமாம். யாரையோ கொலை செய்து விட்டு ஒளிந்து கொண்டிருக்கிற மாதிரி ஒரு சகிக்க முடியாத களை குடியிருந்தது இத்தனை நாளாக...''

அவன் துணுக்குற்றான்.

மனைவியிடம் மேற்கொண்டு பேச விரும்பாமல் பையனைத் தூக்கிக் கொண்டு வாசல் பக்கம் நழுவி விட்டான்.

மேலும் ஒரு மாதம் காலம் சென்றது. தன் மன உளைச்சலெல்லாம் தீர்ந்து விட்டதென்று அவன் உல்லாச மாக இருந்தபோது -

ஒரு நாள் ஆபீசுக்குச் சென்றவனுக்கு மறுபடி ஓர் அதிர்ச்சி காத்திருந்தது.

''என்ன, நவநீதன்! நம்ம இரண்டு பேரையும் பிரிக்க முடியாது போலிருக்கிறது!'' என்று குரல்...

தியாகராஜ்!

மவுண்ட் ரோடு கிளையில் பல நல்ல வேலைகள் செய்திருந்ததால், இங்கே தியாகராய நகர் அலுவலகத்தையும் செம்மைப்படுத்தும்படி அவரை மேலிடத்தில் மாற்றியிருந்தார்கள் என்று பிறபாடு தெரிந்தது.

சும்மா நடிப்புக்காகக் கூடப் புன்னகை செய்ய அவனால் முடியவில்லை. பற்களை நறநறவென்று அவனையும் அறியாமல் கடித்துக் கொண்டான். முன்னைக் காட்டிலும் பத்து மடங்கு அதிகமான பயம் அவனைப் பிடித்துக் கொண்டது. எதுவோ ஒரு கண்ணுக்குத் தெரியாத சக்தி தன்னைக் கொலைகாரனாகப் பண்ணுவதற்கு முயற்சி செய்கிறது என்று அவன் பலமாக நம்பினான். இல்லாவிட்டால், இந்தத் தியாகராஜ் எதற்கு இங்கே வந்து எதற்காக மறுபடியும் அவன் வாழ்க்கையில் குறுக்கிட வேண்டும்? நினைக்க நினைக்க அவனுக்கு நடுக்கமாயிருந்தது. வேலையை விட்டு விடலாம் என்று கூட யோசனை செய்தான். ஆனால், இன்னொரு வேலை எங்கே கிடைக்கும்? அதுவும் இவ்வளவு நல்ல சம்பளத்தில்? குடும்பம் என்ன ஆவது? சரி, வேலையை விடாமல் இருக்கலாம் என்றால், இவரைக் கொலை செய்து விட்டுத் தூக்குத் தண்டனை கிடைத்தால் அப்புறம் மட்டும் அவன் குடும்பத்தை யார் காப்பாற்றப் போகிறார்கள்?

குழம்பிக் கொண்டேயிருந்தான்.

சரளாவிடம் கூடத் தன் வேதனையைச் சொல்லா மல் தனக்குள் தானே ஆழ்ந்து சிந்தனை செய்தான். தியாக ராஜ் அடிப்படையில் நல்லவர், சாது. அவருக்கும் தனக்கும் விரோதம் வரக் காரணமே இல்லை. அப்படியே வந்தா லும், அவர் மேலதிகாரி. நாம் கீழ் உத்தியோகஸ்தன். ஆகவே தணிந்துதான் போக வேண்டுமே தவிர, எதிர்த்துப் பேசக் கூடாது. பள்ளிக்கூட நாளிலிருந்தே யாருடனும் உரத்துப் பேசியதாகவோ, சண்டை போட்டதாகவோ அவனுக்கு நினைவில்லை. அப்படியிருக்கும் போது கொலையாவது! சுத்த அபத்தம்! பித்துக்குளித்தனமான கற்பனை!

இப்படி எவ்வளவோ தனக்குள் சொல்லிக் கொண்டே போன போதிலும் அவன் மனம் சமாதானமாகக் காணோம். வினாடிக்கு வினாடி அவன் குழப்பம் அதிகரித்தது.

அன்று மாலை அவன் வீடு திரும்பும் போது தூறலாக மழை ஆரம்பித்திருந்தது. பனகல் பார்க்கை அ்டையுமுன் வானம் பொத்துக் கொண்ட மாதிரி கொட்ட ஆரம்பித்தது. ஒரு ஜவுளிக் கடையின் வாசலில் ஓடிப் போய் ஒதுங்கிக் கொண்டான். அவன் நின்றிருந்த இடத்தில் ஷோ கேஸ் கண்ணாடி இருந்தது. அலங்காரத்துக்காக ஸாரி கட்டிய பெண் பொம்மையும், சூட் போட்ட ஆண் பொம்மை யும் அங்கே நிறுத்தப்பட்டிருந்தன. அவனுடைய முதுகுக்கு நேர் பின்னால் ஆண் பொம்மை இருந்தது. மழை நிற்கட் டும் என்று காத்திருந்தவன் அந்த ஆண் பொம்மையை ஒரு நோக்கமும் இல்லாமல் பராக்காக வேடிக்கை பார்த் தான்.

திடீரென்று அவனுக்கு மார்பில் அடைத்துக் கொண் டது. அந்தப் பொம்மையின் விழிகள் அசைவது போலத்

தோன்றியதே காரணம். தன் கண்களைக் கசக்கிக் கொண்டு மறுபடியும் பார்த்தான். இப்போது அதன் உதடுகள் பிளந்த மாதிரியும், அவனை நோக்கி இளிக்கிற மாதிரியும் இருந் தது. பொம்மையின் முகமாக இருந்தது மாறி, ரத்தமும் சதையும் உள்ள முகமாக மாறுகிறாற் போல் தோன்றியது. அது மட்டுமல்ல. மாடர்னாக இருந்த தோற்றம் மாறி, ஏதோ ஒரு பழங்காலத்து ராஜா ராணி சித்திரம் உயிர் பெற்று வருகிற மாதிரி இருந்தது.

திகில், நவநீதனின் பிடரியைப் பிடித்து உலுக்கியது. கொட்டுகிற மழையையும் பொருட்படுத்தாமல் அவன் தெருவில் இறங்கி ஓடினான். இரண்டு பக்கமும் மழைக் காக ஒதுங்கியிருந்தவர்கள் என்ன வந்தது இவனுக்கு என்று ஆச்சரியப்படும் வகையில் ஓட்டமாக ஓடி, தொப்பலாய் நனைந்து வீட்டை அடைந்தான்.

சரளா அதிர்ச்சியுற்றவளாக, ''என்னங்க இது! கொஞ்சம் எங்கேயாவது நின்று விட்டு வரக் கூடாதோ?'' என்றபடி துவாலையால் அவன் தலையைத் துவட்டினாள்.

''வேண்டாம், விடு'' என்று துவாலையைப் பறித்துத் தானே துவட்டிக் கொண்டான். காலைக் கட்டிக் கொண்ட குழந்தையை உதறினான். சாப்பிடவில்லை. கட்டிலில் போய் விழுந்தான். அவன் போக்கைக் கண்டு கலவர மடைந்தாள் சரளா. கிட்ட வரவே பயப்பட்டு, குழந்தை யுடன் வெளியறையில் படுத்துக் கொண்டாள்.

நவநீதன் தனியே தன் கட்டிலில் படுத்துக் கொண் டான். வெகு நேரம் வரை தூக்கம் வரவில்லை. வெளியே மழை கொட்டிக் கொண்டிருந்தது. ஏதாவது படிக்கலா

மென்று புத்தகத்தை எடுத்தான். கண்கள் மேய்ந்ததே தவிர மனத்துக்குள் என்னவோ திக்திக்கென்றிருந்தது. வழக்கத் துக்கு விரோதமாக வாய்விட்டுப் படித்தான். அந்தச் சத்தத்தைக் கேட்டு அவன் மனைவி உள்ளே வந்து பார்த்து விட்டு முன்னை விட மிரண்டவளாகத் திரும்பிச் சென்றாள்.

நவநீதன் கண்ணை மூடிக் கொண்டு வலுக்கட்டாய மாகப் போர்த்திக் கொண்டு படுத்தான். தான் தானாக இல் லாமல் வேறே மாதிரியாக மாறிக் கொண்டிருப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது. உடம்பிலுள்ள அணுக்கள் தினம் தினம் ஒவ்வொன்றாய் மாறி வருகிறதென்றும், ஏழு வருடத்தில் ஒரு மனிதன் முற்றிலும் புதியவனாக மாறி விடுகிறான் என்றும் முன்பு ஒரு முறை புத்தகத்தில் படித்தது அவனுக்கு ஞாபகம் வந்தது. அந்த மாதிரி ரசாயன விதிப்படி நாம் மாறி விட்டோமோ என்று குழம்பினான்.

வெளியே ஒரு பெரும் இடி வானத்தில் மோதி விட்டு மறைந்தது. ஜன்னல் கதவு மடேரென்று திறந்து கொண்டது. அப்போது ஒரு வெளவால் பறப்பது போன்ற சத்தம் கேட்டது. அந்த வெளவால் கட்டிலின் விளிம்பில் உட்கார்ந்து கொண்டு தன்னை அளவெடுப்பது போல அவன் உணர்ந்தான். ஆனால், போர்வையை விலக்கிக் கொண்டு பார்க்கவும் பயமாயிருந்தது. என்னதான் கண்ணை இறுக மூடியிருந்தாலும் வெளியே மின்னல் வெட்டோ வெட்டென்று பளீரிடுவது போர்வைக்குள் தெரிந்தது. அது மின்னல் தானா அல்லது யாரேனும் தன்னை எழுப்ப முயலுகிறார்களா என்று அவன் யோசித்துக் கொண்டிருக் கும் போதே...

நிஜமாகவே ஒரு கை அவன் தோளைத் தட்டியது. முதலில் அவன் எழுந்திருக்க வேண்டாமென்று தீர்மானித் தான். ஆனால், தட்டுவது நிற்காததோடு வினாடிக்கு வினாடி அதிகரிக்கவும் செய்தது. வருவது வரட்டும் என்று போர் வையைச் சரேலென விலக்கிக் கொண்டு எழுந்து கட்டி லில் உட்கார்ந்தான். மெல்லிய விடிவிளக்கின் வெளிச்சத் தில் எவரையும் காணோம்.

ஆனால், கட்டிலில் தன் முன்னே, தனக்கு வெகு அருகே யாரோ உட்கார்ந்திருக்கிற உணர்வு மட்டும் உண்மை யாயிருந்தது. படபடக்கும் இதயத்துடன் அவன் பார்க் கையில் விடிவிளக்கு மங்கலாயிற்று. மசமசப்பான, பனிப் புகையில் செய்தது போன்ற மனித உருவமொன்று தென்படலாயிற்று. இந்த நூற்றாண்டு மனிதனைப் போலில் லாமல், ராஜா ராணி காலத்து உடையணிந்திருப்பது போல—சாயந்தரம் ஜவுளிக் கடை பொம்மையிடம் பார்த்தது போல—ஒருவித விசித்திரமான உருவமாகத் தோன்றியது.

வரப் போகிறது வரப் போகிறது என்று இனம் தெரி யாமல் பயந்து கொண்டிருந்தது உண்மையாகி விடவே, நவநீதனுக்கு இப்போது கொஞ்சம் பயம் குறைந்த மாதிரி இருந்தது. கையால் துழாவிப் பார்த்தான். ஒட்டடைக்குள் கையை நுழைக்கிற மாதிரி இருந்தது.

அதை ஒரு முகமூடி என்று வைத்துக் கொண்டால், அதன் கண்கள் இருக்க வேண்டிய இடத்தில் இரண்டு துவா ரங்கள் தெரிந்தன. ஆனால் திடீரென்று அந்தக் கண்கள் ஒளிபெற்றன. பெயிண்ட் பூசின மாதிரி இருந்த முகத்தில் சதை தெரிந்தது. கண்கள் ஈரப் பளபளப்புடன் மின்னி

அவனைக் கூர்ந்து நோக்கின. ஒரே சமயத்தில் தாரைப் போலக் கறுத்தும் கொள்ளியைப் போல் சிவந்தும் காணப் பட்டன. வெளுத்திருந்த உதடுகளில் இளிப்புத் தோன்ற, அது தன் கைகளை மெல்ல மெல்ல உயர்த்தியது. உயர்த்தி அவனுடைய தோள்மீது வைத்தது. நவநீதன் திடகாத்திர மான இளைஞன்தான். இருந்தும், அந்தக் கைகள் பெரும் ஈயக் குண்டுகளை வைத்த மாதிரி தோள்மீது கனத்தன. அதை உதற முயன்றான். முடியவில்லை. நிமிடங்கள் நகர நகர, அதனுடைய கைகளின் கனம் அதிகரிப்பது போலும் தன் சக்தி ஏதோவொரு குழாய் வழியே வடிந்து கொண்டிருப்பது போலும் இருந்தது. ஆனால் எல்லாம் ஒரு சொப்பனம் போலத் தோன்றியது.

அடுத்து என்ன நடக்கப் போகிறது என்ற எதிர்பார்ப் பினால் அவன் இதயம் தடக் தடக்கென்று அடித்துக் கொள்ள, வெளியே மழை பூரணமாக ஓய்ந்து, முழுமை யானதோர் நிசப்தம் கோலோச்சிற்று. பீதி நிறைந்த ஒரு சில்லிப்பு கட்டிலெங்கும், போர்வையெங்கும், அறை யெங்கும் பரவியது. ஐஸ் பாளங்களால் அவன் தேகத்தைத் தடவி விடுகிற மாதிரி இருந்தது. விளக்கின் சுடர் அடங்கி அடங்கி, தான் சாகப் போவதை உணர்த்திக் கொண்டிருந் தது. சுற்றிலுமிருந்த பொருள்கள் ஒரு நீலப் போர்வை போர்த்துக் கொண்டன. சூழ்நிலையில் ஒரு வினோதமான நாற்றம் நிரம்பலாயிற்று. உருவமில்லாத காலடிகள், குளம் போசைகள், வாட்களின் மோதல்கள்—இப்படிச் சம்பந்த மில்லாத என்னென்னவோ சத்தங்கள் ஒலித்து எதிரொலித்து அவன் செவியைத் தாக்கின. வர வர மூச்சு விடுவதுகூடக் கஷ்டமாகி, இதுதான் நம்முடைய வாழ்க்கையின்

கடைசி வினாடி என்ற எண்ணம் அவனுள் உதித்த அதே சமயம்—

புஜபல நரசிம்மரும் கிருஷ்ண தேவராயரும் விஜய நகர சாம்ராஜ்யத்தின் கொடியைப் பத்துத் தென்னைமர உயரத்துக்குப் பறக்கச் செய்திருந்த காலம் அது—

என்ற குரலொன்று அவனுக்குக் கேட்டது. 'யார்? யார் பேசுவது?' என்று அவன் திருப்பிக் கேட்கவில்லை. மந்திரத்துக்குக் கட்டுப்பட்டவன் போல மௌனமாக இருந்தான்.

அந்தக் குரல் தொடர்ந்தது.

புஜபல நரசிம்மரும் கிருஷ்ண தேவராயருமாக, கிழக்கே ஒரிஸ்ஸாவிலிருந்து மேற்கே பாட்கல் வரை, வடக்கே ரெய்ச்சூரிலிருந்து தெற்கே கன்யாகுமரி வரை விஜயநகர சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்து விட்டுக் காலமாகி யிருந்தார்கள். இப்போது அச்சுதராயன் ஆட்சி செய்து கொண்டிருந்தான். ஆலயங்களுக்குச் சிறப்பான திருப்பணி செய்வது கிருஷ்ண தேவராயரின் இன்பமான பழக்கம். ஹம்பியிலும் திருவண்ணாமலையிலும் சிதம்பரத்திலும் காளஹஸ்தியிலும் ஸ்ரீரங்கத்திலும் கோயில்களுக்கு ராஜகோபுரம் எழுப்பியவர் அவர்.

அச்சுதராயனும் அதே பணியைத் தொடர்ந்தான். தென்னிந்திய க்ஷேத்திரங்களுக்குத் தனது ராணி வரத ராஜம்மாவுடன் சுற்றுப் பயணம் சென்றவன், கடைசி யாகக் காஞ்சிபுரத்துக்கு வந்தான். ராணியையும் இளவரசன் வெங்கடாத்திரியையும் துலாபாரத்தில் நிறுத்து, எடைக்கு எடை முத்து வழங்கினான். ஊரே கோலாகலமாக இருந்

தது. அன்று அச்சுதராயன் தன் படை பரிவாரங்களுடன் திரும்பப் போகும் தினம்.

அன்றாடம் இறைவனுக்குப் பூஜை செய்து முடிந்தவுடன் மூன்று பட்டத்துக் குதிரைகளையும் மூன்று பட்டத்து யானைகளையும் வழிபடுவது விஜயநகர மன்னர்களின் வழக்கம். ராணியின் ஏராளமான பணிப் பெண்களில் ஒருத்தி ஆறு கூடைகளில் ரோஜாப் பூ எடுத்து வருவாள். ஒவ்வொன்றிலும் பத்துப் பூ இருக்கும். அரசர் ஒவ்வொரு பூவாக எடுத்து, அர்ச்சனை செய்கிற மாதிரி ஒவ்வொரு குதிரையின் மீதும் போடுவார். மூன்று குதிரைகள் முடிந்ததும் மூன்று யானைகளுக்கும் இதே போல் அர்ச்சனை செய்வார்.

அரசருக்காகப் பூக்கூடைகளைக் கொண்டு வந்து வைத்துக் கொண்டு நிற்பது ருத்ரம்மா என்ற இளம் பணிப் பெண்ணின் வேலை. அரசருக்கு உதவியாகப் பக்கத்திலே நிற்பது பெத்தராமன் என்ற குதிரை வீரனின் வேலை. இவன் கொடுமைக்காரன், கல்நெஞ்சன் என்று பிரசித்தி பெற்ற தளபதி ராமிநாயனியின் பிரிவிலே ஒரு போர் வீரனாக இருப்பவன். அழகி ருத்ரம்மா வந்து நிற்கும் ஒவ்வொரு முறையும் அவனுடைய வாலிப நெஞ்சம் சிறகடித்துப் பறக்கும். ஆனால் அவளுடன் பேசவோ பழகவோ சந்தர்ப்பம் ஏற்படாதிருந்தது.

அன்றும் அவள் ஆறு பூக்கூடையைச் சுமந்து வந்திருந்தாள். மேடைமீது வைத்து ஒவ்வொரு கூடையாக அரசர் அச்சுதராயரிடம் நீட்டிக் கொண்டிருந்தாள். நாலு கூடை தீர்ந்து விட்டது. அப்போதுதான் பெத்தராமன் கவனித்தான்—

ஆறாவது கூடையில் பத்து ரோஜாப் பூ இருக்கவில்லை. ஒன்பதுதான் இருந்தன. கவனப்பிசகாக ஒன்று

எண்ணிக்கையில் விட்டு விட்டாள் என்று தெரிந்தது. அர்ச்சனையின் போது ஒரு பூ குறைந்தால் எத்தனை பெரிய அபசாரம்! அரசர் இவள் தலையையே வாங்கி விடு வாரே?

பெத்தராமன் நடுங்கிக் கொண்டிருக்கும் போதே ஐந்தாவது கூடையும் அரசரின் கைக்குப் போய் விட்டது.

## 29

பெத்தராமன் கையைப் பிசைந்தான். எவ் வளவு பெரிய தவற்றைச் செய்து விட்டு, அப்படிச் செய்திருப்பதை அறியாமல் புன்னகையுடன் நின்று கொண்டிருக்கிறாள் ருத்ரம்மா!

ஒருவேளை நாம்தான் தப்பாக எண்ணி விட்டோமா? 'கடவுளே! என் தப்பாகவே இருக்க வேண்டும்' என்று மனத்துக்குள் பிரார்த்தனை செய்து கொண்டு மறுபடியும் ஆறாவது கூடையை எண்ணிப் பார்த்தான். மன்னர் எடுப்ப தற்கு வசதியாக பூக்கள் தனித்தனியாகவே வைக்கப்பட் டிருந்தன. எண்ணினான். பத்துக்கு ஒன்று குறைவாக, ஒன்பதே ஒன்பது ரோஜாப் பூக்கள்தான் அந்த ஆறாவது கூடையில் இருந்தன. அரசரோ ஐந்தாவது கூடையைக் கையில் வாங்கி, பட்டத்து யானையின் மீது ஒவ்வொன் றாக அர்ச்சனை செய்து கொண்டிருக்கிறார்.

நாலாவது பூ, ஐந்தாவது பூ, ஆறாவது பூ...

ருத்ரம்மா செய்திருப்பது, மற்றவர்கள் பார்வையில் ஒரு சாதாரணத் தவறுதான். சட்டென்று நந்தவனத்துக்கு ஓர் ஆள் அனுப்பி ஒரு பூக் கொண்டுவரச் சொன்னால் சரியாகி விடும். ஆனால் அரசருக்கு அந்தச் சில நிமிட தாமதம் ஏற்படுத்துவதென்றால் எவ்வளவு பெரிய குற்றம்! முன்

பொரு முறை இதே போலப் பூஜை சமயத்தில் மன்னர் உபயோகித்த ஒரு பாத்திரம் சிறிது விரிசல் விழுந்திருந்த தால் தண்ணீர் கசிந்ததும் அதற்காக அந்தக் குறிப்பிட்ட வேலையைச் செய்த பணியாளனின் நாக்கைத் துண்டிக் கும்படி தண்டனை அளிக்கப்பட்டதும் பெத்தராமனுக்கு ஞாபகம் வந்தது. அரசரின் பணியாட்களுக்குத் தண்டனை வழங்கும் அதிகாரம் தளபதி ராமநாயனியினுடையது. அவனுக்கோ சித்திரவதை என்றால் வெல்லக் கட்டி!

மின்னல் வேகத்தில் இவ்வளவையும் எண்ணிப் பார்த்த பெத்தராமன், ருத்ரம்மாவுக்குக் கண்ணால் ஜாடை காட்டினான் அவசரமாக. அவள் அதை உடனே புரிந்து கொள்ளவில்லை. ஏதோ குறும்புத்தனமாக விளையாடு கிறான் என்றெண்ணி முகத்தைத் திருப்பிக் கொண்டாள். இரண்டாம் முறையும் அவன் பூக்கூடையைச் சுட்டினாற் போல் கண்ணைக் காட்டியதும் புரிந்து கொண்டாள் தன் குற்றத்தை. நடுநடுங்கிப் போனாள். முகம் பிரேதமாய் வெளுத்துப் போயிற்று.

அரசரின் அர்ச்சனைகளைப் பார்த்துக் கொண்டு ஆயிரக் கணக்கான பொதுமக்களும் ராணிமார்களும் படை வீரர் களும் மந்திரி பரிவாரங்களும் சூழ்ந்து நின்றிருக்க, இந்த இரண்டு பேர் மட்டுமே தங்கள் அபாயத்தைக் கண்களால் பேசிக் கொண்டு தவித்தார்கள். இனி என்ன செய்வது? எப்படிச் செய்வது?

மின்வெட்டும் நேரத்துக்குள் பெத்தராமனுக்குக் கடவுள் ஒரு யோசனை தந்தார். உருவிய வாளுடன் அவன் அப்போதுதான் அர்ச்சனை முடிந்த யானையின் அருகே நின்றிருந்தான். யானையின் காலடியில் அர்ச்சனை செய்த

பூக்கள் கிடந்தன. சரேலென்று தன் வாளின் நுனியினால் ஒன்றைக் குத்தி எடுத்தான். உடம்பைத் துளிகூட அசைக் காமல் விறைப்பாக நின்றிருந்ததால் அவன் செய்த காரி யத்தை எவரும் கவனிக்கவில்லை. ஒவ்வொருவருடைய பார்வையும் மன்னர் செய்யும் அர்ச்சனையின் மீதே நிலைத்திருந்தது. அவன் வாளின் நுனியை ருத்ரம்மாவை நோக்கி நீட்ட, அவள் பூவை வாங்கிக் கொண்டு ஆறா வது கூடையில் வைத்துவிட, அங்கே இப்போது பத்துப் பூக்கள் இருக்க...

கண் இமைப்பதற்குள் ருத்ரம்மா ஆபத்தைத் தாண்டி விட்டாள்.

அர்ச்சனை செய்த பூவையே திரும்ப அர்ச்சனை செய்வது அபசாரமான விஷயம்தான். அதற்காகத் தன்னை மன்னிக்கும்படி இறைவனை வேண்டி வானத்தை நோக்கிக் கண்களை உயர்த்தினான் அவன். இவ்வளவு பெரிய அபா யத்தில் இருந்து தன்னைக் காத்ததற்காக இறைவனுக்கு நன்றி செலுத்த வானத்தை நோக்கினாள் அவள். கீழே தாழ்கையில் இருவர் கண்களும் சந்தித்துக் கொண்டன. அந்தச் சந்திப்பில் இப்போது மட்டுமல்லாமல் இன்னும் பல ஜென்மங்களுக்கு அவர்களிடையே இருக்கப் போகும் சொந்தம் உறுதியாயிற்று.

மன்னர் அச்சுதராயன் ஆறாவது கூடையை எடுத்து, பத்துப் பூக்களையும் அர்ச்சனை செய்து முடித்தார். ஜெய கோஷத்துடன் சபை கலைந்தது. பிரியும் போது, சந்தடி யின் நடுவே ருத்ரம்மா அவனை அணுகி, வேறு யாருக்கும் கேட்காத ரகசியக் குரலில், ''என் உயிரைக் காப்பாற்றி னீர்கள்... எப்படி என் நன்றியைச் சொல்லுவதென்றே தெரிய வில்லை'' என்றாள்.

*''சாயந்தரம் கோவில் நந்தவனத்துக்கு வா...'' என்றான் அவனும் வேறு யாருக்கும் கேட்காத வண்ணம்.*

*அன்று மாலை அவனைக் கண்டதுமே, அவன் தூண்டுதல் இல்லாமலே, அவன் மார்பில் சாய்ந்தாள் ருத்ரம்மா. உயிரைக் காத்தவனுக்கு தன் உடலையும் உள்ளத்தையும் கொடுப்பதைத் தவிர வேறு காணிக்கை தெரியவில்லை அவளுக்கு. அதுவும் அவன் செய்த காரியம் வெளிப்பட்டிருந்தால்! மரண தண்டனை அல்லவா விதித்திருப்பார்கள் அவனுக்கு!*

*''ருத்ரா... ருத்ரா...'' என்று அவள் கூந்தலை வருடியபடி தன்னை மறந்திருந்தான் பெத்தராமன்.*

*பேசும் நிலை வந்த போது அவள், ''உங்களுக்கு ஒரு கெடுதலும் நேராமல் இருக்க வேண்டுமென்று தினம் தினம் நான் ஆண்டவனை வேண்டுவேன்'' என்றாள்.*

*''எனக்கு என்ன கெடுதல் நேரிடும்?'' என்று சிரித்தான் அவன்.*

*''தளபதி ராமிநாயனியின் கீழே வேலை பார்க்கிறீர்கள் இல்லையா? அவன் மகா பொல்லாதவன்'' என்றாள் அவள்.*

*''உனக்கெப்படித் தெரியும்?''*

*''கேள்விப் பட்டிருக்கிறேன். அத்தோடு... என்னிடமே ஒரு முறை அவன் வம்பு செய்திருக்கிறான்...''*

*''உன்னிடமா?''*

*''ஆமாம். இரண்டு மாதம் முன்பு பாலாற்றங்கரையில் நாம் முகாமிட்டிருந்த போது தனியாய்க் குளித்துக்*

கொண்டிருந்தேன். திடீரென்று ராமிநாயனி வந்து என்னைக் கட்டிப் பிடித்தான். திமிறினேன். என் சேலையைப் பறித்தான். நிர்வாணமாக்கி விட்டான். நல்ல காலம் யாரோ வருகிற சத்தம் கேட்டதும் போய் விட்டான். பிறகும் இரண்டு மூன்று முறை வம்புக்கு வந்தான். ராணியாரிடம் சொல்லி விடுவேன் என்று எச்சரித்தேன். அதன் பிறகுதான் கொஞ்சம் அடங்கியிருக்கிறான்...''

பெத்தராமனின் முகத்தில் கவலை படர்ந்தது. ''தளபதி ரொம்பப் பொல்லாதவன் என்பது உண்மைதான். கூடுமானவரை அவன் கண்களில் படாமல் இரு'' என்றவன், ''இது மார்கழி மாதம். நல்ல காரியங்களுக்கு உகந்ததல்ல. தை பிறக்கட்டும். அரசரிடமும் ராணியிடமும் உத்தரவு பெற்று உன்னை மணந்து கொள்கிறேன்'' என்று வாக்களித்தான்.

பத்து நாட்களில் அச்சுதராயனின் பரிவாரம் தலைநகரை நோக்கித் திரும்பியது. காஞ்சிபுரத்துக்குப் பத்துக் கல் தொலைவில் ஒரு சிற்றூரில் அவர்கள் தங்கியிருந்த போது, அந்த ஊர் ஜனங்கள் ஒரு விண்ணப்பம் செய்து கொண்டார்கள்.

''இங்கெல்லாம் நல்ல விளைச்சல் காணக்கூடிய பூமியாக இருந்தும், போதுமான தண்ணீர் இல்லாததால் கஷ்டப்படுகிறோம். அரசரின் விஜயத்துக்கு ஞாபகார்த்தமாக ஒரு குளம் வெட்டிக் கொடுத்தால் உபயோகமாகவும் உபகாரமாகவும் இருக்கும்'' என்பதே அவர்கள் கோரிக்கை.

அச்சுதராயனும் அவ்வண்ணமே செய்யுமாறு தளபதிக்கு ஆணையிட்டார். ராமிநாயனியின் தலைமையில் படை வீரர்கள் குளம் வெட்டத் தொடங்கினார்கள்.

அது வெட்டி முடிக்கப்படும் வரை அரசரும் அங்கே தங்கியிருக்கச் சம்மதித்தார்.

நூற்றுக்கணக்கான பேர் வேலை செய்ததால், சாதாரண மாகப் பதினைந்து நாளில் குளம் வெட்டி முடிக்கப்பட்டு விடும். ஆனால் இந்த முறை அப்படி நேரவில்லை. காரணம், கிழக்குப் புறம் கட்டிய கரை நிற்காமல், சரிந்து சரிந்து விழுந்து கொண்டிருந்ததுதான். எவ்வளவு மண் அடைத்தும், எத்தனை முட்டுக் கொடுத்தும் அந்தக் கரை நிற்கவில்லை.

அரசருக்குத் தகவல் சென்றது. மந்திரிகளுடன் ஆலோசனை செய்தார் அவர்.

பூசாரிகளை வரவழைத்து, வேள்வி நடத்தி, அவர்கள் சொல்கிறபடி செய்வதென்று முடிவாயிற்று. ஊருக்கு வெளியே இருந்த தோப்பில் அதை நடத்த ராமிநாயனி நியமிக்கப்பட்டான். அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்து பல பூசாரிகளும், ஒரு தலைமைப் பூசாரியும் தீ வளர்த்து யாகம் செய்து, குறி கேட்டார்கள்.

தலைமைப் பூசாரி, தனக்குக் கிடைத்த குறியை ராமி நாயனியிடம் தனியே சொன்னான். அப்போது தளபதி யும் பெத்தராமனும் மட்டுமே அங்கே இருந்தார்கள். கரை சரிந்து விழாதிருக்க என்னென்ன பலி கொடுக்க வேண் டும் என்பதைத் தலைமைப் பூசாரி தெரிவித்ததும் எல் லோருக்கும் உரிய வெகுமதிகளைக் கொடுத்து அனுப்பி விட்டான் தளபதி.

பின்னர் அரசரிடம் சென்று தகவலைத் தெரிவித்த போது, ''என்னென்ன பலி கொடுக்க வேண்டுமென்று சொன் னார்களோ அதன்படியே செய்'' என்று அச்சுதராயன் அனுமதி தந்தார்.

''இருபது ஆடுகள், முப்பத்தெட்டு கோழிகள், மூன்று குதிரை, ஐந்து எருது பலி தரப்பட வேண்டும்'' என்றான் தளபதி.

''செய்யுங்கள் என்றேனே?''

''இன்னொன்றும் முக்கியம். சமூகத்தில் சொல்லத் தயக்கமாயிருக்கிறது...''

''எதுவானாலும் சொல்லுங்கள்.''

''நரபலியும் கொடுக்க வேண்டுமாம்.''

''அப்படியா?'' அச்சுதராயன் மோவாயைத் தடவிக் கொண்டார். ''சரி, அதுவும் நடக்கட்டும்.''

''பதினேழு வயதில் ஒரு கன்னிப் பெண் - ராஜாங்கப் பரிவாரத்தில் இருப்பவளாக இருக்க வேண்டும். முதுகில் கறுப்பு மச்சம் உள்ளவளைத் தேடிக் கண்டுபிடித்துப் பலி கொடுக்கும்படி பூசாரி சொன்னார்.''

''நல்லது. ராணியாரின் பரிவாரத்தில் அந்த மாதிரிப் பெண் இருக்கிறாளா என்று பார்க்கச் சொல்கிறேன்'' என்றார் மன்னர்.

அருகில் கேட்டுக் கொண்டிருந்த பெத்தராமனுக்கு அதிர்ச்சியான அதிர்ச்சி!

தலைமைப் பூசாரி ஆடுகளையும் எருதுகளையும் குதிரைகளையும் கோழிகளையும்தான் பலி கொடுக்க வேண்டும் என்று சொன்னார். நரபலி வேண்டும் என்று சொல்லவே இல்லை. பின்னே ஏன் இவன் அதைச் சேர்த்துச் சொல்லுகிறான்? அதுவும் பதினேழு வயதில் கன்னிப் பெண்! முதுகில் கறுப்பு மச்சத்துடன்!

அவன் நரம்புகள் சில்லிட்டன.

தன் விருப்பத்துக்கு இணங்காத ருத்ரம்மாவைத் தீர்த்துக் கட்டத்தான் இப்படித் திட்டமிட்டிருக்கிறான் தளபதி! அவன் சொன்னால் சொன்னதுதான். மறுத்துப் பேச எவருக்கும் தைரியம் கிடையாது. தலைமைப் பூசாரி அப்படிச் சொல்லவில்லை என்று எப்படி நிரூபிப்பது? எல்லோரும் திசைக்கொருவராகப் பிரிந்து நெடுந்தூரம் சென்று விட்டார்களே! அரசரிடம், தளபதியின் வார்த்தைக்கு எதிராகத் தன் வார்த்தை ஒரு நாளும் எடுபடாதே!

அவசர அவசரமாக ருத்ரம்மாவைத் தனியே வரவழைத்து, அவளுக்கு நேரிட்டுள்ள ஆபத்தைச் சொன்னான். அவளுக்குப் பயம் நடுக்கியதே தவிர வழி எதுவும் தோன்றவில்லை.

ஒரே ஒரு சந்தேகம் இருந்தது அவனுக்கு. அதை நீக்கிக் கொள்ள, அவளுடைய ரவிக்கையை அகற்றச் சொல்லிப் பார்த்தான். முதுகில் அழகாக, துவரம் பருப்பு அளவுக்கு ஒரு கறுப்பு மச்சம் இருந்தது! அன்று அவள் குளிக்கும் போது பலாத்காரம் செய்கையில் இந்த மச்சத்தைட் பார்த்து வைத்திருக்கிறான் தளபதி! ருத்ரம்மாவை குறிப்பாக பலி வாங்க அந்த அடையாளம் உதவுகிறது!

''இரண்டு பேரும் இன்று ராத்திரியே ஓடி விடுவோம். அது ஒன்றுதான் நமக்கு வழி'' என்றான் பெத்தராமன்.

''அரசரின் படை பலத்துக்கும் ஆள்கட்டுக்கும் முன்னே நாம் எங்கே ஒளிய முடியும்?'' என்று தேம்பினாள் அவள். ஆனால் அவளுக்கும் வேறு வழி தெரியவில்லை.

அரசி ஒவ்வொரு பணிப்பெண்ணாக வரவழைத்து அங்க அடையாளங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

கூடுமானவரை அவள் கண்ணிலேயே படாமல் நாள் முழு வதும் ஓட்டி விட்டு, இருட்டியதும் நழுவினாள், ருத்ரம்மா. சிவன் கோவிலின் பின்னே குதிரையுடன் காத்திருந்தான் பெத்தராமன். உடனே அவளை ஏற்றிக் கொண்டு பறந்தான்.

ஆனால் ஊர் எல்லையைக் கூடத் தாண்டவில்லை. பதினைந்து இருபது குதிரை வீரர்கள் அவனை வழி மறித்தார்கள். இப்படி ருத்ரம்மா செய்யக் கூடுமென்று எதிர்பார்த்து, தளபதி ராமிநாயனி முன்னெச்சரிக்கையுடன் கண்காணித்திருந்தான்!

பெத்தராமன் ஓர் இடத்திலும் ருத்ரம்மா வேறோ ரிடத்திலும் அடைக்கப்பட்டார்கள். பெத்தராமனின் நகங்கள் பிய்க்கப்பட்டன. ஈயத்தைக் காய்ச்சிக் காதில் ஊற்றினார்கள். அவன் கையையும் காலையும் கட்டிப் போட்டு ஈ எறும்பு கடிக்கும்படி செய்தார்கள். பச்சைத் தோலினால் அவன் உடம்பு முழுதும் தைத்து, தோல் உலர உலர அவன் உடம்பு பிய்த்துக் கொள்ளுமாறு செய்தார்கள்.

ஐந்து நாள் இவ்வளவையும் பொறுத்துக் கொண்ட வன், ஆறாம் நாள் எப்படியோ அந்தக் கடும் காவலி லிருந்து தப்பினான். ருத்ரம்மா இருக்குமிடத்தைத் தேடி ஓடினான். ஆனால் காலம் கடந்து விட்டது.

மற்ற எல்லாப் பலிகளும் கொடுக்கப்பட்டாயிற்று. ருத்ரம்மா ஒருத்திதான் பாக்கி இருந்தாள். மஞ்சள் நீராட்டப் பட்டு, மஞ்சள் வஸ்திரம் தரித்து, மஞ்சள் மாலை அணிந்து, பலி பீடத்தில் நின்றிருந்தாள்.

''ருத்ரா!'' என்று கதறிக் கொண்டு அவன் பாயவும், ருத்ரம்மாவின் சிரம் ஒரே வெட்டில் வெட்டப்பட்டு கீழே உருளவும் சரியாயிருந்தது.

''அடேய் பாவி!'' என்று தளபதியின் மீது பாய்ந்தான் பெத்தராமன். அவனுடைய உடைவாளையே எடுத்து அவனைக் குத்தினான். ராமிநாயனி உயிரற்றுக் கீழே சாய்ந்த மறு வினாடி, மற்ற வீரர்கள் பெத்தராமனைச் சூழ்ந்து கொண்டு அவனைக் கண்ட துண்டமாக வெட்டிப் போட்டார்கள்.

தலைமைப் பூசாரி ஒரு நரபலி கூடக் கேட்கவில்லை. ஆனால் மூன்று பலிகள் கிடைத்து விட்டன. அதன் விளைவுதானோ என்னவோ, குளத்தின் கரை பிறகு சரிய வில்லை. அரசர்களுடைய வாழ்வில் இதெல்லாம் சர்வ சாதாரணமான சம்பவங்கள். ஒரு நல்ல தளபதியை இழந்து விட்டோமே என்று சிறிது வருத்தப்பட்டதைத் தவிர வேறெதுவும் அச்சுதராயன் நினைக்கவில்லை. திக் விஜயம் தொடர்ந்தது...

**ம**ழையும் மின்னலும் வெளியே தாண்டவமாட, நவநீதன் தன் கட்டிலில் ஆடாமல் அசையாமல் உட்கார்ந் திருந்த வண்ணம் இவ்வளவையும் கேட்டுக் கொண்டிருந் தான். அந்த உருவம் தொடர்ந்தது.

''பல நூறு ஆண்டுகள் ஓடிவிட்டன. பற்பல ஜன்மங்கள் கடந்து விட்டன. ஆனால் இந்தப் பகைமை மட்டும் தொடர்ந்து கொண்டே வருகிறது...''

நவநீதன் திக்கித் திணறி, ''நான்... நான்... அப்படி யானால்...'' என்றான்.

அவன் எதிரே அமர்ந்து கதை சொல்லிக் கொண் டிருந்த உருவம் மெல்ல நகைத்தது. ''இன்னும்கூடப் புரியவில்லையா? நீதான் அந்தப் பெத்தராமன். நான்தான் உன் காதலி ருத்ரம்மா.''

அவனுக்கு மூச்சு அடைத்தது.

அது சிரித்தபடியே சொல்லியது; ''தளபதி ராமிநாயனி தான் உன் மானேஜர் தியாகராஜ். ஒவ்வொரு பிறவியிலும் நாம் ஏதாவது ஒரு இடத்தில் சந்தித்துக் கொண்டு வரு கிறோம். சில சமயம் எனக்கு மனிதப் பிறவி கிடைக்கும். சில சமயம் பேயாக இருப்பேன். இந்த ஜன்மத்தில் இப்படிச் சந்தித்திருக்கிறோம். ஆனால் ஒவ்வொரு தடவை யும் நீ ராமிநாயனியைக் கொலை செய்து பழி வாங்கிக் கொண்டுதான் வந்திருக்கிறாய். இந்தத் தடவையும் அப்படிச் செய்யப் போகிறாய்.''

## 30

நவநீதனால் எதையும் நம்ப முடியவில்லை. அவனுக்குத் தலை கிறுகிறுத்தது. புலன்கள் இருண்டன. ஐந்நூறு வருடங்களுக்கு முன்பு நான் பெத்தராமனாக இருந்தவனா! மானேஜர் தியாகராஜ் என்னைக் கொலை செய்த தளபதியா! இந்த உருவமில்லாத அருவம் என் காதலி ருத்ரம்மாவா! ஜன்ம ஜன்மமாக ராமி நாயனியை நான் பழிதீர்த்து வந்திருக்கிறேனா! 'அபத்தம்! அபத்தம்!' என்று அவனுக்குள் கடகடவென்று எண்ணங் கள் ஓடின.

பயத்தை அடக்கிக் கொண்டு, ''என்ன ஆதாரம் நீ சொல்வதற்கெல்லாம்?'' என்று உரத்த குரலில் அதனிடம் கேட்டான்.

அது பதில் சொல்லவில்லை. அதன் வாயின் ஓரங்களில் ஓர் இளிப்பு மட்டுமே புலப்பட்டது. பிறகு கரும் பலகையில் ஈரம் உலர்வது போல், அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்த உருவம் சிறிது சிறிதாக

மறைந்து, கடைசியில் முழுதும் இல்லாமற் போய் விட்டது.

இரைந்து அவன் பேசியதால் வெளியறையில் படுத் திருந்த அவன் மனைவி சரளா திடுக்கிட்டு எழுந்தாள். ஏற்கனவே அவன் தூக்கமில்லாமல் ஏதேதோ புலம்பு வதை அவள் கவனித்துக் கலவரமடைந்திருந்ததால் இப் போது இன்னும் கவலை அதிகம் ஏற்பட்டது.

''என்னங்க, கூப்பிட்டீங்களா என்னை?'' என்று வினவியபடி உள்ளே வந்தாள்.

நவநீதன் கண்களைக் கசக்கிக் கொண்டான். நிலைப் படியருகே நிற்கும் தம் மனைவியைப் பார்த்தவுடன் அவனுக்குத் தான் பழையபடி ஆகிவிட்ட மாதிரி ஓர் உணர்வு ஏற்பட்டது. 'இப்படி வா' என்று அவளைத் தன்னருகே அழைத்தான்.

அவன் கோபமாகக் கூப்பிடுகிறானா, அல்லது வழக்கமான பிரியத்துடனா என்பதைத் தெரிந்து கொள்ள முடியாமல் சரளா தயங்கித் தயங்கி வந்தாள். 'இப்படிப் படுத்துக் கொள்' என்று கட்டிலில் நகர்ந்து கொண்டான் நவநீதன். இரண்டு நிமிடத்துக்கு முன் இதே இடத்தில் ஒரு பேய் உட்கார்ந்திருந்தது என்பதை எண்ணிப் பார்க்கை யில் அவனுக்கு உடம்பு நடுங்கியது. அவள் படுத்துக் கொண்டதும் இறுக்கி அணைத்துக் கொண்டான். தன் குடும்பம், தன் மனைவி, தன் குழந்தை என்கிற பாச மெல்லாம் அவனுக்குள் பொங்கிப் பிரவகிப்பது போலிருந் தது. என்னென்னவோ பைத்தியக்காரத்தனமான மனப் பிரமைகளின் விளைவாக, விபரீதமாக ஏதாவது செய்து,

இதையெல்லாம் இழந்து விடுவோமோ என்று தன்னுள் பயந்தான்.

அவனுக்குள் குமுறிக் கொண்டிருக்கும் போராட்டங் களை அறியாதவளாக அவள் அவனுடைய நடுங்கும் முதுகை மெல்லத் தடவிக் கொண்டேயிருந்தாள். கொஞ்சம் கொஞ்சமாக அவனும் நிதானமடைந்து தூங்கிப் போனான்.

கண் விழித்த போது சுள்ளென்று வெய்யில் வீசிக் கொண்டிருந்தது ஜன்னல் வழியே. கையில் சுடச் சுட காபியும் இதழில் குளிரக் குளிரப் புன்னகையுமாக உள்ளே வந்த சரளா, அவன் கழுத்தை அணைத்துக் கொண்டு, கொஞ்சலாகக் காபியைக் கொடுத்தாள். படுத்தபடியே அவன் உறிஞ்சிக் கொண்டிருக்கையில், ''ராத்திரியெல்லாம் என்னவோ போலிருந்தீர்களே? இன்றைக்கு லீவு போட்டு விட்டு வீட்டிலேயே இருங்களேன்'' என்றாள்.

பளீரென்ற பகல் வெளிச்சத்தினாலும் இதமாக உள்ளே இறங்கிய காபியினாலும் அவனுக்குத் தெம்பு ஏற்பட்டிருந்தது. ஆதாரமில்லாமல் ஏதோவொன்றுக்குப் பயந்து கொண்டு வீட்டில் ஒளிந்து கொள்வது கோழைத் தனமாகவும் அவனுக்குத் தோன்றியது. ''இல்லை இல்லை! இன்று நான் கட்டாயம் ஆபீஸ் போயாக வேண்டும்'' என்று சொன்னவன் உற்சாகமாகப் போர்வையை உதறிக் கொண்டு எழுந்தான். உற்சாகமாகவே ஷேவ் செய்து, குளித்து சுவாமி படத்தின் முன்னால் கும்பிடு போட்டு, வலுக்கட் டாயமான உல்லாசத்துடன் அலுவலகத்தை அடைந்தான்.

ஆனால் எந்த நிமிடம் தன் நாற்காலியில் உட்கார்ந் தானோ அந்த நிமிடமே தன்னுள் நேற்றைய பீதி பரவுவதை உணர்ந்தான். மேஜைக்கெதிரே விசிட்டர்களுக்கான

நாற்காலியொன்று காலியாக இருந்தது. இப்போது அங்கே மசமசவென்று யாரோ உட்கார்ந்திருப்பது போலத் தோன்றி யது. பயத்துடன் கண்ணைத் துடைத்துக் கொண்டு மறுபடி பார்த்தான். அதே உருவம்! அதே சிரிப்பு!

''இன்னும் கொஞ்ச நேரத்தில் உன் ஜன்மப் பகை வனைப் பார்க்கப் போகிறாய்! ராமிநாயனியை!'' என்று அது சொல்வது அவன் காதில் விழுந்தது. உடனே அச்சத் துடன் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டான் அவன். ஆனால் வேறு யாரும் அதைக் கவனித்ததாகத் தெரிய வில்லை. அவரவர் அவரவர் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

''போ! போ! போய் விடு! இங்கே வராதே! என் முன்னால் நிற்காதே! போய் விடு!'' என்று சத்தத்தை அடக்கிக் கொண்டு கத்தினான் அவன். சூழ்நிலையைப் பற்றிய உணர்வு இருந்ததால், மற்றவருக்குக் கேட்காத வண்ணம் ஜாக்கிரதையாக இருந்தான்.

அது ஒன்றும் சொல்லவில்லை. பேசாமல் அவனையே பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தது. அவன் தன் மேஜை மீதுள்ள பைல்களில் கவனம் செலுத்தப் பார்த்தான். முடிய வில்லை. அது அவனுடைய ஒவ்வோர் அசைவையும் கூர்ந்து நோக்கியவாறிருந்தது.

சில நிமிடங்களில் பியூன் வந்து, ''மானேஜர் உங்களை வரச் சொன்னார் சார்'' என்றான்.

அவனுக்குக் குப்பென்று வியர்த்தது. இன்று பூரா அவர் முகத்தில் விழிக்காமலிருக்க வேண்டுமென்று நினைத்திருந்தானே! அது முடியாதா?

''நான் என்ன சொன்னேன்? உன்னால் தவிர்க்க முடியாது நவநீதன், தவிர்க்க முடியாது!'' என்று அது கொக்கரிப்பது கேட்டது.

மெதுவே எழுந்து மானேஜரின் அறையை நோக்கி நடந்தான். கூட யாரும் வராதிருந்த போதிலும், பக்கத்தி லேயே காலடியோசை மட்டும் கேட்டுக் கொண்டிருந் தது. அவன் தோள்மீது யாரோ கையைப் போட்டுக் கொண்டு கூடவே நடந்து வருகிற மாதிரி இருந்தது.

''வா நவநீதன்'' என்று இனிமையாக வரவேற்ற மானேஜர் தியாகராஜை ஏறிட்டுப் பார்க்கவே அவன் நடுங்கினான்.

'அவனை நன்றாகப் பார்த்துக் கொள்! தெரிய வில்லை! ராமிநாயனி! உன் பகைவன்! ஜன்ம விரோதி!' என்று அந்தக் குரல் அவனுக்கு வெகு சமீபத்தில் கேட்டது. நிமிர்ந்து நோக்கினான். பழக்கமான மானேஜரின் முகத் துக்குப் பதில், அவன் முன்பின் பார்த்திராத விசித்திர மான முகமொன்று தெரிகிறாற் போல் இருந்தது. உற்றுப் பார்த்த போது, அது இந்தக் காலத்ததாக இல்லாமல், சரித்திரக் கதைகளுக்கான படத்தைப் பார்க்கிற மாதிரி தோன்றியது.

''என்ன அப்படிப் பார்க்கிறே?'' என்றார் தியாகராஜ்.

''வந்து... ஒண்ணுமில்லை...'' என்று அவன் மிடறு விழுங்கினான்.

''ஒரு சொந்த வேலை. அதற்காகத்தான் கூப்பிட்டேன்'' என்றார் தியாகராஜ். தன் ப்ரீஃப்கேஸைத் திறந்து ஒரு புத்த கத்தை எடுத்தார். அட்டையிலிருந்து அது ஒரு பாக்கெட்

புக் — ஆங்கில நாவல் என்று தெரிந்தது. சேஸ் எழுதியது என்பதையும் கவனித்தான்.

''என்ன விஷயம் தெரியுமா?'' என்று சிரித்தபடி புத்தகத்தைக் காட்டினார். பின்புறம் அட்டையும் இல்லை. பல பக்கங்களும் இல்லை.

''தெரியாத்தனமாய் இதைப் படிக்க ஆரம்பித்து விட்டேன். தயவு பண்ணி நீ என்ன பண்ணுகிறாய் என்றால், இதை ஒரு காகிதத்தில் குறித்துக் கொள்'' என்றார் தியாகராஜ். பிறகு தானே தன் டெஸ்க் நோட்டிலிருந்து ஒரு தாளைக் கிழித்து, புத்தகத்தின் பெயரை எழுதித் தந்தார். ''காஷியரிடம் சஸ்பென்ஸில் பணம் வாங்கிக் கொண்டு மூர் மார்க்கெட்டுக்குப் போ. பழைய புத்தகக் கடையில் கட்டாயம் கிடைக்கும். ஒரு புத்தகம் வாங்கி வந்துவிடு. என்ன, பியூனை அனுப்பினால் தெரியவில்லை என்று வந்து விடுவான். அதனால்தான் உன்னை அனுப்புகிறேன். உனக்கு ஒன்றும் சிரமமில்லையே?''

''ஊம்?'' நவநீதன் தன் குழப்பத்திலிருந்து விடுபட்டான். ''நோ ப்ராப்ளம் சார். வாங்கி வருகிறேன்'' என்று கூறி அவர் முகத்தைப் பார்த்தான். இப்போது எவ்வித வித்தியாசமும் தெரியாமல் தியாகராஜின் முகம் தியாகராஜின் முகமாகவே தோற்றமளித்தது.

காஷியரிடம் பணம் வாங்கிக் கொண்டு, பஸ் பிடித்து, சென்டிரலில் இறங்கி மூர் மார்க்கெட்டை நோக்கி நடந்தான். அப்போதுதான் ஞாபகம் வந்தது — 'அது' கொஞ்ச நேரமாகத் தன்னை விட்டு வைத்திருந்தது என்பது. ஆறுதலுடன் பெருமூச்சு விட்டான். நேற்றிலிருந்து நடப்பது

எல்லாமே பிரமையாக இருந்துவிடக் கூடாதா என்று அவன் உள்ளம் வேண்டிக் கொண்டது.

சேஸ் நாவலாகையால் விசாரித்த முதல் கடையிலேயே அவன் தேடியது கிடைத்து விட்டது. பேரம் பண்ணிப் புத்தகத்தை வாங்கிக் கொண்டான். நீண்ட கருங்கல் தாழ் வாரத்தில் நடக்கையில் இன்னும் கூட 'அதைக்' காணோம் என்று மகிழ்ந்து கொண்டான். அப்படி மகிழ்ந்த அதே வினாடி —

''பார்த்தாயா கடைசியில்? எல்லாம் விதிப்படியே நடக்கிறது! இல்லாவிட்டால் இந்த இடத்துக்கு உன்னை அனுப்புவானா ராமிநாயனி?'' என்று அவன் முதுகின் பின்னேயிருந்து குரல் கேட்டது. அதன் குரல்!

அவன் திகிலுடன் மௌனமாக நடந்தான்.

''இப்படி வலப் பக்கம் திரும்பு. அங்கேதான் உனக்கு வேண்டிய கடை இருக்கிறது!'' என்றது அது.

'மாட்டேன், நீ சொல்கிறபடி செய்ய மாட்டேன்!' என்று சொன்ன போதிலும் அவன் அதன் ஆணையின் படியே வலப்பக்கம் திரும்பினான்.

''அதோ பார் கடை!'' என்று கூறியது அது.

அவன் அந்தக் கடையின் முன்னே போய் நின்றான். கத்தி, அரிவாள், உளி, சுத்தி, கத்தரிக்கோல் முதலிய ஆயு தங்கள் விற்கப்படுகிற கடை அது.

''வாங்க சார்! என்ன வேணும்?'' என்றார் கடைக் காரர்.

''நல்ல கூரான பெரிய கத்தி!'' என்று நவநீதன் தன்னையும் அறியாமல் சொன்னான்.

''இது போதுமா? அல்லது இது தேவலையா?'' என்று கடைக்காரர் பலவகைக் கத்திகளை எடுத்துப் பரப்பினார்.

'பாண்ட் பாக்கெட்டுக்குள் வைத்துக் கொள்ளக் கூடியதாக எடு' என்று 'அது' சொல்லியது. 'நல்ல கூரா யிருக்க வேண்டும். பார்த்து எடு.'

அவன் ஒரு நல்ல கத்தியை வாங்கிக் கொண்டான். அழகிய கறுப்புப் பிடி போட்ட உறுதியான கத்தி. பணம் கொடுத்து விட்டு வெளியே வந்தான். பாண்ட் பாக்கெட் டுக்குள் விறைத்துக் கொண்டு நின்றது கத்தி.

'அவ்வளவுதான். இனிமேல், தனிமையான ஒரு சந்தர்ப்பம் கிடைக்க வேண்டும். பிறகு ஒரே குத்து!' என்று சிரித்தது 'அது'.

கனவில் நடப்பவனைப் போல அவன் வாய் பேசா மல் ஆபீசை அடைந்தான். மானேஜரிடம் புத்தகத்தைக் கொடுத்தான். ''ரொம்பத் தாங்க்ஸ்! இன்று ராத்திரி இதைப் படித்து முடித்து விட்டு நன்றாகத் தூங்குவேன்!'' என்றார் தியாகராஜ்.

அவன் திரும்பினான்.

''பை த பை! இந்தா!'' என்று அவனைக் கூப்பிட் டார் அவர்.

அவன் அவர் கையிலிருப்பதைப் பார்த்துத் திடுக் கிட்டான்.

சிவப்பு ரோஜா!

''பாங்க் ஜகன்னாதன் வந்திருந்தார். அவர் வீட்டுத் தோட்டத்தில் நிறையப் பூத்திருக்கிறதாம். எனக்கு ரோஜா

என்றால் ரொம்பப் பிடிக்குமென்று தெரிந்து ஒரு கூடை அனுப்பினார். இரண்டு வைத்துக் கொண்டு மற்றதை இப்பத்தான் வீட்டுக்கு அனுப்பினேன்.''

அவர் நீட்டிய ரோஜா மலரை யந்திரம் போல் பெற்றுக் கொண்டான். தன் இருக்கையை நோக்கி நடந்தான்.

'ரோஜா பார்த்தாயா?' என்றது 'அது'. 'ஏன் அவன் உனக்கு ரோஜா கொடுக்க வேண்டும்? புரிகிறதா? பழைய கதை — உனக்கும் எனக்கும் காதல் உதித்த கதை — அது உனக்கு ஞாபகம் வரவேண்டுமென்று விதி விளையாடு கிறது!'

அவன் மௌனமாகத் தன் மேஜையடியில் உட் கார்ந்தான். வாடிக்கையான வேலை எதுவும் கவனிக்க முடியவில்லை. பாண்ட் பாக்கெட்டில் உறுத்திய கத்தி அவனைத் திரும்பத் திரும்ப ஒரே நினைவில் சுழல வைத்தது. மேஜை மீதிருந்த அந்தச் சிவப்பு ரோஜா, நேற்று இரவு கேட்ட கதைகளையெல்லாம் கவனப்படுத் தியது. வெறியுடன் எல்லாவற்றையும் தூக்கியெறிந்து விட்டு எங்காவது ஓடிப் போய்விட வேண்டும் போல் அவன் மனம் பரபரத்தது. சாயந்தரம் வரை பல்லைக் கடித்துக் கொண்டு பொழுதை ஓட்டினான்.

இந்த மனநிலையுடன் வீட்டுக்குப் போனால் சரளாவை மறுபடி பயமுறுத்துவதாக இருக்கும் என்று எண்ணி னான். ஆகவே வேறெங்காவது போகலாம் என நினைத் தான். ஆட்டோ பிடித்து மவுண்ட் ரோடுக்குப் போனான். ஒரு தியேட்டரின் வாசலில் நின்றான். ஏதோ நகைச்சுவைப் படம் நடந்து கொண்டிருக்கிறது என்று பேனர்களிலிருந்து கண்டு கொண்டான்.

உள்ளே நுழைந்த போது படம் ஆரம்பித்துச் சில நிமிடங்கள் ஆகியிருந்தன. கூட்டமே இல்லை. தனியான தோர் சீட்டில் போய் உட்கார்ந்து கொண்டான். பிறகுதான் தன் முட்டாள்தனத்தை நொந்து கொண்டான். காலியா யிருந்த அடுத்த நாற்காலியில் யாரோ வந்து உட்காருவது போலிருந்தது. 'யாரோ' அல்ல. அதுதான் என்று அவனுக்கு உறுதியாகப் புலப்பட்டது.

'பாண்ட்டில் கத்தி பத்திரமாக இருக்கிறது இல் லையா?' என்று கேட்டது அது.

தொட்டுப் பார்த்துக் கொண்டான். கத்தி இருந்தது. அதை ஆபீசிலேயே வைத்து விட்டு வராமல் போனோமே என்று வருந்தினான். ஆனால் தான் விரும்பியிருந்தாலும் அதை எறிந்திருக்க முடியாது என்று புலப்பட்டது. வெல்ல முடியாத விதியொன்று தன்னை ஆட்டி அலைக்கழிக்கிற தென்பதை எண்ணிய போது, அவனுக்குச் சோர்வு ஏற் பட்டது. இனி அதன் வழியே நம்மை விட்டுவிட வேண் டியதுதான் என்று தற்கொலையான மனோபாவம் உண் டாயிற்று.

அதன் பிறகு அவனால் படம் பார்க்க முடிய வில்லை. அரைத் தூக்கமாக நேரத்தை ஓட்டினான். படம் விட்டது. வெளியே வந்தான். குறுக்குத் தெருக்கள் வழி யாக மனம் போனபடி நடந்தான். எங்கே போகிறோம் என்பது அவனுக்கே தெரியவில்லை.

முந்தின நாள் மழை காரணமாக, தெரு விளக்குகள் பழுதுபட்டிருந்தன. சாலையில் நடமாட்டத்தைக் காணோம். இருட்டுப் போர்த்தியிருந்தது வீடுகளை.

ஒரு காரின் ஹெட்லைட் வெளிச்சம் அவன் முன்னே பரவியது. பின்னால் வந்து கொண்டிருக்கும் அந்த வண்டிக்காக அவன் சாலையோரம் ஒதுங்கினான். ஆனால் கார் அவனைத் தாண்டிச் செல்லாமல் அவனை ஒட்டி நின்றது.

''ஹலோ, நவநீதன்!'' என்று தியாகராஜ் காருக்குள்ளிருந்து கூப்பிட்டார்.

அந்தக் குரலைக் கேட்டதுமே தலைதெறிக்க ஓடி விட வேண்டும் போலிருந்தது அவனுக்கு. ஆனால் இரும்புக் குண்டு கட்டினாற் போல கால்கள் அங்கேயே நிலைத்து நின்றன.

முன்பக்கத்துக் கதவைத் திறந்து, ''ஏறிக்கொள். உன் வீட்டில் ட்ராப் பண்ணி விடுகிறேன்'' என்றார்.

''வேண்டாம்'' என்று சொல்ல நினைத்தான். தொண்டை அடைத்துக் கொண்டது. தன்னையறியாமல் ஏறிக் கொண்டான்.

''என்ன, பிக்சருக்குப் போய் விட்டு வருகிறாயா? என்ன படம்?'' என்றார் தியாகராஜ்.

அவன் ஏதோ பதிலுக்கு முணுமுணுத்தான்.

''உடம்பு சரியில்லையா உனக்கு? பின்னே ஏன் இவ்வளவு தூரம் வருகிறாய்?'' என்றார்.

அவனுக்கு அவர் பேச்சில் கவனம் செல்லவில்லை. பின்னாலிருந்து தன் தோளை 'அது' மெல்லத் தட்டுவதை உணர்ந்தான்.

'உனக்குக் கஷ்டம் இல்லாமல் அவனாகவே வந்து உன் வலையில் விழுந்து விட்டான் பார்!' என்றது அது.

மேலும் மேலும் இருட்டான, மேலும் மேலும் தனிமையான சாலைகள் நீண்டு கொண்டே இருந்தன.

அது தொடர்ந்தது. 'அருமையான சந்தர்ப்பம்! எடு கத்தியை வெளியே! கழுத்தின் பின்னால் ஒரே குத்து! யாருக்கும் தெரியாமல், எந்தவித சாட்சியமும் இல்லாமல் நீ நழுவி விடலாம்! கத்தியை எடுத்துத் தயாராக வைத்துக் கொள்!'

கத்தியைப் பாண்ட் பாக்கெட்டுக்குள்ளிருந்து எடுத்தான். அவன் கழுத்தின் பின்புறம் நீட்டிக் கொண்டான்.

'வண்டியை நிறுத்தச் சொல்லு! நிறுத்தியதும் ஒரே குத்து!' என்றது அது.

''வண்டியை நிறுத்துங்கள் சார்'' என்றான்.

தியாகராஜ் வியப்புடன், ''இங்கேயா உன் வீடு?'' என்றபடி காரை நிறுத்தினார்.

'சரியான நேரம்! ஊம்! ஆகட்டும்!' என்றது அது. 'ஒரே குத்து!'

அவன் கத்தியின் பிடியை இறுக்கமாகப் பிடித்தான். பிடித்த அந்தக் கணமே அவனுக்குள் ஒரு மின்வெட்டு பளீரடித்தது.

## 31

கத்தியின் பிடியில் இறுக்கமாகக் கை வைத்த அந்தக் கணமே நவநீதனுக்குள் என்னவோ நிகழ்ந்தது. உள்ளே இருதயத்தில் ஏற்பட்ட மாறுதலா, அல்லது தேகத்துக்கு ஏதேனும் நிகழ்ந்திருக்கிறதா என்று அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால், அன்று புது மானேஜர் தியாகராஜ் புது மானேஜராக வந்த அந்த

முதல் நாளன்றிலிருந்து தன் மனத்தில் இருந்து வந்த கொலை வெறி திடீரென்று அகன்று விட்ட மாதிரி இருந்தது. தான் பழைய நவநீதனாக, மார்க்கெட்டுக்கும் ஆபீசுக்கும் மின்சார ரயிலுக்கும் பஸ்ஸுக்கும் போய் வருகிற சராசரி மாம் பலத்து மனிதனாக மாறி விட்டது அவனுக்குத் தெரிந்தது.

தியாகராஜ் காரை நிறுத்தி விட்டு, ''என்ன யோசனை, நவநீதன்? இங்கே தானே இறங்க வேண்டுமென்றாய்? அல்லது வேறு எங்காவது இறங்கிக் கொள்ளணுமா?'' என்று கேட்டார்.

அவருடைய கழுத்தின் பின்னே பிடித்திருந்த கத்தியை அவருக்குத் தெரியாமலே அகற்றிக் கொண்டான் அவன். மாபெரும் கொலை பாதகத்திலிருந்து தப்பி விட்ட நிம்மதி அவன் தொண்டையைத் தழுதழுக்கச் செய்தது.

''ஆமாம் சார். இங்கேதான் இறங்கிக் கொள்ள வேண்டும். ரொம்பத் தாங்க்ஸ் சார்'' என்று மனப்பூர்வ மாக சொல்லி விட்டுக் காரிலிருந்து இறங்கிக் கொண்டான்.

''குட் நைட்'' என்று கூறி விட்டுத் தியாகராஜ் போய் விட்டார்.

இறங்கிக் கொண்ட இடத்துக்கும் அவனுடைய வீட்டுக்கும் நீண்ட தூரம் இருந்தது. ஆனால் நடையின் சிரமம் கொஞ்சம் கூடத் தெரியாத வண்ணம் அவன் மனம் லேசாகவும் உல்லாசமாகவும் ஆகியிருந்தது. நடந்த தெல்லாம் கனவா உண்மையா என்று யோசித்தபடியே மீண்டும் மீண்டும் கடவுளுக்கு நன்றி செலுத்திக் கொண்டு வீட்டை அடைந்தான்.

கவலையே வடிவாக அவனுக்குக் காத்திருந்தாள் சரளா. அவள் தோளில் குழந்தை தூங்கிக் கொண்டிருந்தது.

இவர்களையெல்லாம் எப்படி நட்டாற்றில் விடவிருந் தோம் என்பதை நினைக்கையிலேயே அவன் இதயம் வெடித்து விடும் போல இருந்தது. உணர்ச்சிகளை அடக்க மாட்டாதவனாக, ''சரளா... சரள்...'' என்று மனைவியை அணைத்துக் கொண்டு விம்மினான்.

''என்ன... என்னது? என்ன நேர்ந்தது?'' என்று அவள் பதைத்தாள்.

''ஒன்றுமில்லை... ஒன்றுமில்லை...'' என்று அவன் சிரித்தான். பல நாட்களாக மறந்தே போய் விட்ட சிரிப்பு!

சாப்பாட்டையும் சமையலறை வேலைகளையும் முடித்துக் கொண்டு சரளா படுக்க வந்து தூங்கியும் போய் விட்டாள். நவநீதனுக்குத் தூக்கம் வரவில்லை. எந்த அதி சயத்தினால், தான் சிக்கிக் கொள்ளவிருந்த அபாயம் வில கியது. என்பதை யோசித்த வண்ணம் விழித்துக் கொண் டிருந்தான். மணி ஒன்றோ ஒன்றரையோ இருக்கும். சுற்றுப்புறம் முற்றும் நிசப்தமாகி விட்ட சமயம், அவன் அறைக்குள் மட்டும் ஏதோ சலனம் கேட்டது. ஜீரோ வாட் விளக்கு படக் படக்கென்று அணைந்து அணைந்து துடிக்க, சாத்தியிருந்த ஜன்னல் மெல்லத் திறந்து கொள்ள, அந்தப் புகையுருவம் அவனை நோக்கி, அவன் படுத் திருந்த கட்டிலை நோக்கி வருகிற மாதிரி இருந்தது.

நவநீதனுக்குப் படபடப்பு ஏற்பட்டதே தவிர, பீதி ஏற்படவில்லை. மனத்தில் தைரியமும் தெளிவும் நிறைந் திருந்தன.

தூங்கிக் கொண்டிருந்த மனைவிக்குக் கேட்காதபடி, தாழ்ந்த குரலில், ''போ! போய் விடு!'' என்றான்.

அது போகவில்லை. இன்னும் இன்னும் நெருங்கி வந்து கட்டிலின் முனையில் உட்கார்ந்து கொண்டது.

அவன் பல்லைக் கடித்துக் கொண்டு கடகடவென்று அதனுடன் பேசினான். ''இதோ பார், என்னைக் கொலைகாரனாக்க நீ செய்யும் முயற்சிக்கு நான் ஒரு நாளும் இடம் கொடுக்கப் போவதில்லை. ஐந்நூறு வருடத்துக்கு முன்னால் எனக்கும் தளபதி ராமிநாயனிக்கும் கொடும் பகை இருந்தது உண்மையாக இருக்கலாம். அதற்குப் பின் பல ஜன்மங்களில் நான் அவனைப் பழிவாங்கியும் வந்திருக்கலாம். ஆனால் அப்போதெல்லாம் நான் முரடனாக, படிப்பற்ற பாமரனாக, பண்பாடு தெரியாத அறிவாளியாக, நாயாக, பூனையாக, ஓநாயாக, பன்றியாகக் கூட ஜன்மமெடுத்திருக்கக் கூடும். அப்போதெல்லாம் நான் கொலைகாரனாக, பழிவாங்குபவனாக இருந்திருக்கக் கூடும். இந்தப் பிறவியில் நான் அப்படி அல்ல. எனக்குப் படிப்பும் பகுத்தறிவும் இருக்கிறது. குடும்பத்துக் கடமைகளை நிறைவேற்ற வேண்டிய கடமையுணர்வு இருக்கிறது. மனித நாகரிகங்களை மதிக்கும் பண்பு இருக்கிறது. இந்த ஜன்மத்தில் நான் காரணமில்லாமல் ஒரு கொலை செய்ய மாட்டேன். மாட்டவே மாட்டேன். உன் எண்ணம் பலிக்காது. போய் விடு போ, போ. போ.''

ஆனால் அவன் சொல்வதை அது காதில் போட்டுக் கொண்ட மாதிரியே தெரியவில்லை. விகாரமானதோர் இளிப்பு அதன் முகமெங்கும் முளைத்திருந்தது. சிறிது சிறிதாக அவனை நோக்கி முன்னேறுகிற மாதிரி இருந்தது.

அவனுக்குச் சட்டென்று ஞாபகம் வந்தது. அந்தக் கத்தி! 'அதைக் கையில் பிடித்துக் கொள்!' என்று ஏதோ

ஓர் உள்ளுணர்வு அவனுக்குள் குரல் கொடுத்தது. பக்கத்துக் கப்போர்டில் மறைத்து வைத்திருந்த அதை எடுத்தான். உறுதியாகக் கையில் பற்றினான். அந்த கணமே தடதட வென்று இடி போல ஒரு பெரும் சத்தம் கேட்டது. மேஜையும் நாற்காலியும் ஆங்காரமாகத் தள்ளப்பட்டன. தலைக்கு மேலே மின்சார விசிறி ராட்சத வேகத்தில் சுழன்றது. ஜீரோ வாட் பல்பு கண்ணைக் கூச வைக்கும் ஆயிரம் வாட்டாகப் பளீரடித்தது. ஜன்னல் கதவுகள் மடேர் மடேரென்று சாத்திக் கொண்ட வேகத்தில் கண்ணாடிகள் நொறுங்கிச் சிதறின. அந்த அமர்க்களத்தில் பதறியெழுந்த சரளாவும் குழந்தையும் பயந்து போய் ஓவென்று அலறி னர். படுத்திருந்த கட்டில் அலை போல மேலும் கீழுமாக ஆடியது.

எல்லாம் ஒரே ஒரு நிமிடம்தான். ஜன்னல் கதவு கடைசி முறையாக ஒரு மடேலுடன் திறந்து மூடிக் கொண்ட போது, அது வெளியே பாய்ந்து ஓடுவதைக் கண்டான் அவன். இனி அது வரவே வராது என்று உணர்ந்த அதே வினாடி வெள்ளமாய் வியர்வை பெருகியது அவன் மேனியெங்கும்.

அறையின் பயங்கர அலங்கோலத்தையும் அவன் கையில் கத்தியையும் பார்த்து, சரளாவுக்குத் தலைசுற்றி மயக்கம் வந்தது. ''ஐயையோ! என்னங்க இது?'' என்று அவன் மணிக்கட்டைப் பற்றினாள். அவன் கையிலிருந்த கத்தி படுக்கை மீது விழுந்தது.

அப்போதுதான் அவன் கவனித்தான்.

அதன் கறுப்புப் பிடியில், வெள்ளை எழுத்தில், கத்தியைத் தயாரித்த கம்பெனியின் பெயர் இருந்தது —

''வேல்முருகன் அண்ட் கோ'' என்று! அதுமட்டுமல்ல. எழுத்துக்குப் பக்கத்தில் ஒரு வேலின் கூரிய முனையும் சின்னஞ்சிறு சித்திரமாக இருந்தது.

அவனுக்கு நெட்டுயிர்த்தது. இப்படியும் ஒரு தெய்வச் செயலா! தாயத்துப் போல இதைக் கையில் வைத்திருந்த போது எப்படிப்பட்ட அபாயங்கள் எத்தனை வேகமாக மறைந்தன!

கவிழ்ந்திருந்த மேஜை நாற்காலிகளை நிமிர்த்தி அறையைச் சுத்தம் செய்தபடியே, சிரித்துக் கொண்டு, நடந்ததையெல்லாம் மனைவிக்கு விளக்கலானான்.

மறுநாள் அலுவலகத்துக்குப் போன போது அவனுக்கு இன்னோர் ஆச்சரியமும் காத்திருந்தது. மானேஜர் தியாக ராஜ் அவனைக் கூப்பிட்டனுப்பினார். ''உனக்கு ஒரு வருத்த மான செய்தி, நவநீதன். என்னை அகமதாபாத் தலைமை அலுவலகத்துக்கு மாற்றி இருக்கிறார்கள். நாளையே நான் புறப்படுகிறேன்'' என்று தெரிவித்தார்.

ஒரு நல்ல மனிதரைப் பிரிகிறோமே என்ற வருத்தம் ஏற்பட்ட போதிலும், இனி அந்த 'ஜன்மாந்தரப் பகைமை' பற்றி கணம் கூட நினைக்க இடமில்லாத வண்ணம் கடவுள் செயல் இருக்கிறது என்பதை அவன் புரிந்து கொண்டான்.

அடுத்த நாள் தியாகராஜ் விடைபெற்றுச் சென்றார் — நவநீதனின் வாழ்க்கையிலிருந்தே.

நரீஷ் சொல்லி முடித்த போது சூரியன் உச்சிக்கு வந்து விட்டான். மந்திரமும் பூஜையும் தூப தீபமும் நிறைந்த தூய்மையான சூழ்நிலையில், ஆஞ்சநேயருக்கும் ராக

வேந்திர சுவாமிகளுக்கும் இடையிலிருந்த அகலமான மேடையில் நாங்கள் சப்பணமிட்டு உட்கார்ந்து கொண்டோம்.

''ராஜா, நான் சொல்லுகிற சுலோகத்தைத் திருப்பி மெதுவே சொல்லு'' என்றான் நரீஷ்.

''சொல்றேன்'' என்றேன். அவன், மெல்ல,

**பூஜ்யாய ராகவேந்த்ராய, சத்யதர்ம ரதாய ச ।**
**பஜதாம் கல்ப விருட்சாய நமதாம் காமதேனவே ॥**

என்ற பிரசித்தமான சுலோகத்தைச் சொல்ல நான் திருப்பிச் சொன்னேன்.

''கண்ணை மூடிக்கொண்டு மனதுக்குள் சுவாமிகளைத் தியானித்து, உன் கஷ்டத்தை அவரிடம் சொல்லு'' என்றான் நரீஷ்.

நான் என் கண்களை மூடிக் கொண்டேன். ஆனால் மனம் அலை பாய்ந்தது. விட்டு விட்டு வந்த ஊரும் குடும்பமும் என் பிள்ளையும் பிரச்னைகளும் மோதிக் கொண்டு கொந்தளித்தன. பத்து நிமிடம் அங்கே உட்கார்ந்திருந்தோம். என் மனத்தில் ஓரளவு அமைதி ஏற்பட்டிருந்தது.

''போகலாம் வா'' என்று என்னை போஜன சாலைக்கு அழைத்துச் சென்றான். விரதமிருப்பவர்கள் அணி அணியாக ஈர வேட்டியுடன் கோவிலைப் பிரதட்சணம் செய்து கொண்டிருந்தார்கள். அவ்வளவாக வெளிச்சமில்லாத நீண்ட கூடத்தில் நான்கு வரிசையாக ஜனங்கள் உட்கார்ந்திருந்தார்கள். வாழையிலை போடப்பட்டிருந்தது. உட்கார்ந்தோம். சுடச் சுடச் சாதமும் பருப்பு சாம்பாரும் பரிமாறப்

பட்டன. போதும் போதும் என்கிற மட்டும் அன்ன தானம் செய்தார்கள். ஒரு பெரியவர் வாயிலருகே நின்று சிறிய தோத்திரமொன்று சொன்னார். ''கோவிந்தா! கோவிந்தா!' என்ற கோஷத்துக்குப் பிறகு எல்லோரும் சாப்பிட ஆரம்பித்தோம்.

வெளியே வந்த போது அடுத்தடுத்த பந்திக்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருப்பதைக் கண்டேன்.

''ராஜா, நன்றாய் வேண்டிக் கொண்டாயா? இனி மேல் போகலாம் இல்லையா?'' என்றான் நரீஷ்.

''போகலாம்'' என்றேன். ஊருக்குப் போவதைப் பற்றி நினைக்கும் போது மனத்தில் அலை அலையாய்க் கவலைகளும் அச்சங்களும் உதித்தன. நரீஷ் மறுபடி பிருந்தாவனத்துக்குச் சென்று, சுவாமிகளுக்கு நைவேத்தியம் செய்த கல்கண்டும் உலர்ந்த பேரீச்சம் பழமும் வாங்கி வந்தான். பைக்குள் பத்திரப்படுத்திக் கொண்டேன். பஸ் ஸ்டாண்டை அடைந்தோம். காலையில் பார்த்தது போலவே இப்போதும் கூட்டம் நெருக்கியடித்தது. ஆனால் நரீஷ் பலசாலி — முரடனும்கூட என்று புரிந்து கொண்டேன். வந்து நின்ற பஸ்ஸுக்குள் தாவி ஏறி, முண்டியடித்து உள்ளே புகுந்து தனக்கும் இடம் பிடித்து எனக்கும் பிடித்தான்.

ரெய்ச்சூருக்குப் பயணமானோம். கொஞ்சம் கொஞ்சமாக நான் என்னுள் மூழ்கிப் போனேன். நரீஷ் கேட்ட கேள்விகளுக்குச் சரிவரப் பதில் சொல்லவில்லை.

ரெய்ச்சூரை அடைந்து ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றோம். அவன் பம்பாய்க்கும் நான் சென்னைக்கும் பிரிந்து செல்வதாக இருந்தது. எனக்கு இதயம் ஒரு சுமையாகக் கனத்தது.

''நரீஷ், எனக்காக ஒரு உபகாரம் செய்வாயா?'' என்றேன்.

''என்ன சொல்லு'' என்றான்.

''என்னோடு சென்னைக்கு வா. என் வீட்டுக்கு வா. இரண்டு நாள் இருந்து விட்டுப் பிறகு பம்பாய் போகலாம்'' என்றேன்.

அவன் என் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். அதில் தெரிந்த கவலைகளும் பீதிகளும் அவனைக் கலக்கியிருக்க வேண்டும். ''என்ன ராஜா, ஏன் திடீரென்று என்னவோ போலாகி விட்டாய்? எதற்கு என்னைக் கூப்பிடுகிறாய்?'' என்றான்.

''நரீஷ், என் கஷ்டத்தை ராகவேந்திர சுவாமிகளைத் தவிர மற்றவர்களிடம் சொல்லக் கூடாது என்று ஆரம்பத்திலிருந்து தடுத்து வருகிறாய். இப்போது அதை அவரிடம் சொல்லியாகி விட்டது. இனி உன்னிடம் சொல்லலாம் இல்லையா?'' என்றேன்.

''வேண்டாமென்று பார்த்தேன். சரி, சொல்லு'' என்றான் நரீஷ். ''ஆனால் நான் எதற்கு உன்னுடன் வர வேண்டும் என்கிறாய்?''

''நீ பக்கத்தில் இருந்தால் எனக்குத் தெம்பாக இருக்கிறது. ப்ளீஸ், மறுக்காமல் வா'' என்றேன். சம்மதித்தான்.

நரீஷ் ஒரு ரயில்வே உத்தியோகஸ்தனாகையால் சுலபமாய் எங்கள் இரண்டு பேருக்கும் மெயிலில் இடம் பிடித்து விட்டான். நானும் அவனும் எதிரெதிர் பெர்த்தில் படுத்துக் கொண்டிருந்தோம்.

''நரீஷ், நீயும் நானும் பால்ய சினேகிதர்களென்று பெயரே தவிர என் குடும்பத்தைப் பற்றி உனக்குத் தெரியாதில்லையா?'' என்றேன்.

ஆமென்று ஒப்புக் கொண்டான். ''சொல்கிறேன், கேள்'' என்றேன்.

## என் சொந்தக் கஷ்டம்

எனக்குக் கல்யாணமாகி ஐந்து வருடங்கள் வரை குழந்தைகள் இல்லை. ஊரிலுள்ள தெய்வங்களையெல்லாம் வேண்டிக் கொண்டு, சென்னையிலுள்ள டாக்டர்களையெல்லாம் கேட்டுக் கொண்டு ஒரு பிள்ளைக்காகத் தவமிருந்தோம்.

கடைசியில் குழந்தை பிறந்தது. ஒன்றல்ல—இரண்டு. ஆமாம். ஐந்து நிமிட வித்தியாசத்தில் ஒன்றன் பின் ஒன்றாக இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள் என் மனைவி ஜகதா.

இரண்டும் ஆண் குழந்தைகள். ஒருவனுக்கு ராமு என்றும் மற்றவனுக்குச் சீனு என்றும் பெயர் வைத்தோம். அச்சாக ஒரே மாதிரி இருந்த இருவரையும் எங்களாலேயே கூடச் சில சமயம் அடையாளம் கண்டுபிடிக்க முடியாது. இருவரும் தங்கமான பையன்கள். ஒருவன் மீது மற்றவனுக்கு உயிர். இருவரும் படிப்பில் சுட்டி. இரண்டு பேரும் ஒரே மார்க்கே வாங்குவார்கள். ஒன்றாகவே படித்து, ஒன்றாகவே ஹைஸ்கூல் படிப்பை முடித்து ஒன்றாகவே கல்லூரியில் சேர்ந்தார்கள். இரண்டு பேரும் பி.எஸ்ஸி. கெமிஸ்ட்ரி மெயின். ஒருவருக்கொருவர் மிக உதவியாக, அனுசரணையாகப் பாடம் படிப்பார்கள்.

இரண்டு பேரும் ஒருவரையொருவர் விட்டுப் பிரியாமல் இருந்ததால், கல்லூரியில் எல்லோரும் டெல்லிக்கு உல்லாசப் பயணம் புறப்பட்ட போது இவர்களும் சேர்ந்தே போனார்கள். நான்கூட, 'யாராவது ஒருத்தன் இருங்களேன்' என்று சொல்லிப் பார்த்தேன். கேட்கவில்லை.

திரும்பி வருகையில்தான் — போன மாதம் நேர்ந்த அந்தப் பயங்கர ரயில் விபத்தில் அவர்கள் சிக்கினார்கள். அவர்கள் பிரயாணம் செய்த எக்ஸ்பிரஸின் ஏழாவது பெட்டி சுக்கு நூறாக நசுங்கியது. ராமு ஐந்து நிமிடம் உயிரோடு இருந்து விட்டு இறந்து விட்டான். அந்த ஐந்து நிமிடமும், "சீனு... நீ... இதோ இந்த இடுக்கு வழியாகத் தப்பிவிடு..." என்று திக்கித் திணறிச் சொல்லி, தன் சகோதரனுக்காக ஒரு ஜன்னலைத் திறந்து கொடுத்து, அந்தப் பிரயத்தனத்திலேயே உயிரைத் தியாகம் செய்து விட்டான். நானும் ஜகதாவும் அழுது துடித்த கதையெல்லாம் உனக்கு இப்போது தேவையில்லை.

சீனு பலமான காயங்களோடு உயிர் பிழைத்து வந்திருக்கிறான். அவனுடைய வலது கை முற்றிலும் நசுங்கி விட்டது. டாக்டர்கள் அதை ஆம்ப்யுடேட் பண்ணுவதா வேண்டாமா என்பதை ஒரு வாரத்தில் முடிவு செய்வோம் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். எனக்குத் தாளவில்லை. இங்கே மந்திராலயத்துக்குப் புறப்பட்டு விட்டேன். ஜகதா என்னைவிடத் தைரியசாலி. எந்தத் துன்பத்தையும் தாங்கிக் கொள்ளக் கூடியவள். "நீங்கள் போய் விட்டு வாருங்கள். அதற்குள் இங்கே தெய்வ சித்தம் எப்படியோ அதன்படி ஆகட்டும்" என்றாள்.

நரேஷ்! ஒவ்வொரு வினாடியும் நான் துடித்துக் கொண்டிருப்பது ஏனென்று உனக்கு விளங்கியதா?

**நா**ன் சொல்லி முடித்ததும், நரீஷ் எதிர் பெர்த்தி லிருந்தபடியே என் கைகளை ஆறுதலாகத் தட்டிக் கொடுத் தான். 'கவலைப்படாதே. எல்லாம் நல்லபடியே ஆகும்' என்று தேறுதல் சொன்னான்.

சென்டிரலில் மறுநாள் காலை இறங்கியதும் நேரே வீட்டுக்குப் போகாமல் ஆஸ்பத்திரிக்குத்தான் சென்றோம். சீனு இருந்த வார்டுக்கு ஓட்டமும் நடையுமாகப் பறந்தேன்.

சீனுவுக்குக் கை இருக்குமா? அல்லது வெட்டி யிருப்பார்களா? என் மனம் துடித்தது.

## 32

''**ப**தற்றப்படாதே, ராஜா. நிதானமாய்ப் போ. ஏன் இப்படி ஓடுகிறாய்? கடவுள் கிருபை யால் எல்லாம் நல்லபடி ஆகும். மெதுவாய்ப் போ'' என்று சொல்லிக் கொண்டே என் பின்னால் வந்து கொண்டிருந்தான் நரீஷ்.

ஆனால் என்னால் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. எந்த அறையில் என் மகனின் படுக்கை இருந்தது என்பதைக்கூட மறந்தவனாக ஆஸ்பத்திரி பூராவும் பைத்தியம் பிடித்தவன் போல் ஓடினேன். இரண்டு மூன்று நாட்களாக மந்திராலயத்தில் பெற்றிருந்த மன அமைதி முற்றிலுமாக மறைந்து விட்டது. ''சீனு... சீனு... சீனு...'' என்று புலம்பிக் கொண்டே அலைந்தேன்.

நரீஷ்தான் நிதானத்துடன் நர்ஸ்களையும் டாக்டர் களையும் விசாரித்து வார்டைக் கண்டுபிடித்தான். என்னை யும் கையைப் பிடித்துக் கொண்டு மெதுவே அழைத்துச் சென்றான்.

வார்டுக்கு வெளியே நின்றிருந்த என் மனைவியைப் பார்த்ததுமே எனக்கு விளங்கி விட்டது, பயந்ததே நடந்து விட்டது என்று. என்னைக் கண்டதும் ஜகதா ஓடிவந்து என்னைக் கட்டிக் கொண்டு சத்தமில்லாமல் விம்மியதும் மிச்சமிருந்த சந்தேகமும் போய் விட்டது.

''நம்ம குழந்தை பிழைத்து விட்டான்... ஆனால் கையை... கையை...'' அவளுக்குப் பேச்சுத் திணறியது.

அவளை விலக்கிக் கொண்டு, என் கண்களையும் துடைத்துக் கொண்டு, மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு வார்டுக்குள் நுழைந்தேன். கழுத்து வரை போர்த்துக் கொண்டு சீனு படுத்திருந்தான். நல்ல பிரக்ஞையுடன் இருந்தான். என்னைப் பார்த்ததும் மெல்லிய புன்னகை வெளிப்பட்டது. தைரியசாலியான பையன்—எப்படிப் பட்ட கஷ்டத்தை மனோதிடத்துடன் தாங்கிக் கொண் டிருக்கிறான்! அவனை மகனாகப் பெற்றதுகுறித்து என் உள்ளத்தில் பெருமை ஏற்பட்டது.

பக்கத்தில் போய் உட்கார்ந்தேன். ஒன்றும் பேசத் தோன்றவில்லை. அவன் முகத்தை வருடிக் கொடுத் தேன். குனிந்து நெற்றியில் முத்தமிட்டேன்.

''பார்க்க வேண்டாமா?'' என்று மெல்லச் சிரித்த வண்ணமே கேட்டான் சீனு.

பக்கத்தில் நின்றிருந்த அவன் அம்மா, ''வேண்டாம்டா சீனு, வேண்டாம், அவருக்குத் தாங்காது'' என்றாள்.

''எப்படியும் ஒரு நாள் அவர் பார்க்க வேண் டியவர்தானே?'' என்றவன் தன் இடது கையால் போர் வையை விலக்கினான்.

வலது கை—கட்டிளங் காளையான அவனுடைய வலது கை — துண்டிக்கப்பட்டு, தோளுக்குச் சற்று கீழே மொக்கையாகக் கட்டுப் போடப்பட்டிருந்தது.

''சீனு!'' என்று அவன் மார்பு மீது விழுந்து நான் போட்ட சத்தத்தில் ஒரு நர்ஸ் ஓடிவந்து 'உஷ்! இப்படி யெல்லாம் இங்கே கூச்சல் போடக் கூடாது!' என்று அதட்டினாள். நரீஷ் என் தோளைத் தட்டி நிதானப் படுத்தினான். சீனு தன் இடது கையால் என் மணிக் கட்டைப் பற்றிக் கொண்டு புன்னகை செய்தான்.

நான் துயரத்தை அடக்க முடியாமல் வாயைக் கைக் குட்டையால் பொத்திக் கொண்டு வெளியே வந்தேன். வெராந்தாவின் கைப்பிடிச் சுவரில் உட்கார்ந்து விசித்து விசித்து அழுதேன்.

''நரீஷ், மந்திராலயத்துக்கு வந்து அவ்வளவு வேண்டிக் கொண்டேனே! அத்தனை பிரார்த்தனைகள் செய்தேனே! கடைசியில் இப்படி ஆகிவிட்டது பார்த்தாயா?'' என்று புலம்பினேன்.

''ராஜா, அசடு மாதிரி பேசாதே. ஒரு விஷயம் சொல் கிறேன், கேள். என் மாமா பிள்ளை ஒருத்தன் பி.ஏ. பரீட்சையின் போது விழுந்து விழுந்து படித்தான். ராப் பகல் பாராமல் கண் விழித்தான். பரீட்சை எழுதினான். செகண்ட் கிளாசில் பாஸ் செய்தான். 'இவ்வளவு படித்துக் கடைசியில் செகண்ட் கிளாஸ்தானா!' என்று அவன் புலம்பிய போது அவன் அப்பா என்ன சொன்னார் தெரி யுமா? 'பைத்தியக்காரா! அவ்வளவு படித்ததால்தான் செகண்ட் கிளாஸாவது கிடைத்தது. இல்லாவிட்டால் மூன்றாம் கிளாஸ் கிடைத்திருக்கும். அல்லது பெயிலேகூட ஆகி

யிருக்கலாம்' என்றார். அதே வார்த்தைதான் உனக்கும். மந்திராலயத்தில் பிரார்த்தனை செய்ததால்தான் இத்தோடு ஆபத்து நீங்கியது என்று நினைத்துக் கொள். இல்லாவிட்டால் இன்னும் என்ன விபரீதம் நேர்ந்திருக்குமோ!'' என்றான்.

சிறிது சிறிதாக என் மனத்தைத் தேற்றிக் கொண்டேன். இரண்டு நாளில் டிஸ்சார்ஜ் செய்து வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள்.

''நரீஷ், என்னுடன் கொஞ்ச நாள் தங்கி விட்டுப் போ. நீ இருந்தால் மனசுக்குத் தெம்பாயிருக்கிறது'' என்று நண்பனைக் கேட்டுக் கொண்டேன். ஜகதாவும் அதை ஆமோதித்தாள்.

''நானே சொல்ல வந்தேன். சென்னையிலும் சுற்றுப்புறத்திலும் சில்லறை சில்லறையாகப் பல வேலைகள் இருக்கிறது. ஒரு மாதம் தங்கப் போகிறேன்'' என்றான் நரீஷ்.

அவ்வளவு துன்பத்துக்கு நடுவில் அது ஒரு பெரும் அதிர்ஷ்டமாக எனக்குத் தோன்றியது. என் வீடும் கொஞ்சம் வசதியாக இருந்ததால் மாடியில் ஓர் அறை அவனுக்காக ஒதுக்கிக் கொடுத்தேன். நரீஷ் தினம் காலை பதினோரு மணி சுமாருக்குப் புறப்பட்டுப் போய், மூன்று மணிக்கெல்லாம் திரும்பி விடுவான்.

சீனு எழுந்து நடமாட ஆரம்பித்தான். ஒற்றைக் கையால் தன் தேவைகளைச் சமாளித்துக் கொள்ளப் பழகிக் கொண்டான். படிப்பை மட்டும் தொடரவில்லை. அவனுடைய சிநேகிதர்கள் பல பேர் வருவதும் பேசிக் கொண்டிருப்பது

மாக இருந்தார்கள். அவன் படிப்பதற்கு பத்திரிகைகளும் நாவல்களும் ஏராளமாக வாங்கிப் போட்டேன். நரீஷ் தன் பங்குக்கு நிறையத் தோத்திரப் புத்தகங்கள் வாங்கி வந்தான். பக்திப் பாடல்கள் கொண்ட கேசட்டுகளும் ரெக்கார்டு களும் கொண்டு வந்தான். மாலை வேளையில் சீனுவின் அறையில் நாங்கள் எல்லோரும் சேர்ந்து உட்கார்ந்து அரட்டை அடித்து அவனுக்கு உற்சாகமூட்டினோம். ராமு இறந்து போன மகத்தான துக்கம் எங்கள் மனத்தில் நிரம்பி யிருந்த போதிலும் சீனுவின் எதிரே அதைக் காட்டிக் கொள்ளாமல் எச்சரிக்கையாக இருந்தோம்.

பத்து நாள் சென்றது.

திடீரென்று சீனுவிடம் ஒரு மாறுதல் தெரியத் தொடங்கியது. முன் போல அவன் சுரத்தாக இல்லை. கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லாமல் எங்கோ ஞாபக மாக இருந்தான். திடுதிப்பென்று அவன் அறைக்குள் நுழைந்தால், தன் மொக்கைக் கையைப் பார்த்தவாறே அவன் மௌனமாக உட்கார்ந்திருப்பது தெரிந்தது. நண்பர் கள் வந்தால் அதிகம் பேச~ில்லை. ஆகவே அவர்கள் வருவதைக் குறைத்துக் கொண்டார்கள். 'இதைச் செய்து கொடு அம்மா, அதைப் பண்ணிக் கொடு அம்மா' என்று விரும்பிக் கேட்டுச் சாப்பிட்டு வந்தவன், ஒரு முறைக்கு நாலு முறை வற்புறுத்தினால்தான் சாப்பிட்டான்.

''நரீஷ், கவனித்தாயா?'' என்றேன் நண்பனிடம்.

''ஆமாம். ஏதோ ஒரு மாறுதல் ஏற்பட்டிருக்கிறது'' என்று அவனும் சொன்னான். ஆனால், என்ன மாறுதல், ஏன் ஏற்பட்டது என்று எங்களுக்கு விளங்கவில்லை.

அன்று அவனுக்குப் பிறந்த நாள். கோவிலுக்குப் போய் அர்ச்சனை செய்து விட்டு வரலாம் என்று நானும் என் மனைவியும் புறப்பட்டோம். சீனுவைக் கூப்பிட்ட தற்கு, தனக்குக் களைப்பாக இருக்கிறது என்று சொல்லி விட்டான். நரீஷ் தன் உறவினருக்குச் சஷ்டியப்த பூர்த்தி என்று மாம்பலம் போயிருந்தான். வீட்டைப் பார்த்துக் கொள்ளும்படி சீனுவிடம் சொல்லி விட்டு நாங்கள் புறப் பட்டோம்.

ஆனால், அன்று கிருத்திகையும் சேர்ந்து வந்திருந்த தால் கோவிலில் ஏகப்பட்ட கூட்டமாயிருந்தது. அர்ச்ச னைக்குச் சீட்டு வாங்க அரை மணி ஆகி விட்டது. அர்ச்சனை முடிந்து வீடு திரும்ப மேலும் ஒரு மணி நேரம் ஆகும் போலிருந்தது. எனக்கு மனசுக்குள் இனம் புரியாத கல வரம் மூண்டது. இருப்பு கொள்ளவில்லை. ''நீ இருந்து அர்ச்சனையை முடித்துக் கொண்டு வா. நான் முன்னாடி போகிறேன்'' என்று மனைவியிடம் சொல்லி விட்டு, ஓட்டமும் நடையுமாக வீட்டை அடைந்தேன்.

என்னவோ தோன்றியது - நேரே சீனுவின் அறையை அடைந்து மடாலென்று கதவைத் திறந்தேன். ஏதோ பெரிய விபரீதம் நிகழ்ந்திருக்குமென்று எனக்குள் தோன்றி யதே காரணம். ஆனால், அப்படி எதுவும் நிகழவில்லை. சீனு தன் கட்டிலில் உட்கார்ந்திருந்தான். ஆனால், கதவு திறந்தவுடனே சட்டென்று தன் இடது கையை அவன் மறைத்துக் கொண்டாற் போல் இருந்தது.

''என்ன அது, கையில்?'' என்றேன்.

''ஒன்றுமில்லை'' என்றான்.

''காட்டு'' என்றேன்.

''அதுதான் ஒன்றுமில்லை என்றேனே?'' என்றான் மறுபடியும்.

அவனை நெருங்கி, வலுக்கட்டாயமாக உள்ளங் கையைப் பிரித்தேன்.

பத்துப் பதினைந்து தூக்க மாத்திரைகள் இருந்தன! தினம் ஒன்று சாப்பிடும்படி டாக்டர் கொடுத்திருந்தவை!

''சீனு! என்ன இது? எதற்காக இந்த மாத்திரைகள்?'' என்றேன்.

அவன் திருதிருவென்று விழித்தான். உள்ளங்கையை வெறித்துப் பார்த்து, ''தெரியவில்லையே?'' என்றான் சொப்பனத்தில் பேசுகிற மாதிரி.

அவ்வளவு மாத்திரைகளையும் பறித்து ஜன்னலுக்கு வெளியே வீசியெறிந்தேன். சீனு என்னைக் கண் கொட் டாமல் பார்த்துக் கொண்டிருந்தான். தடுக்கவுமில்லை, பேசவுமில்லை.

என் மனைவி திரும்பிய போது அவளிடம் இதைப் பற்றி நான் சொல்லவில்லை. இரவு நரீஷ் வந்ததும் அவ னிடம் மட்டும் சொன்னேன்.

''சரி, இனிமேல் அவனைத் தனியே விட வேண்டாம். பகலெல்லாம் நீங்கள் இருங்கள். இரவு நான் அவன் அறையில் படுத்துக் கொள்கிறேன்'' என்றான். அப்படியே செய்யத் தொடங்கினோம்.

ஒரு வாரம் பொறுத்து ஒரு நாள் காலை நரீஷ் எழுந் ததுமே என்னிடம் வந்தான். அவன் கையில் நீளமான,

கெட்டியான மணிக் கயிறு இருந்தது. ''ராஜா, இதை நீ கொண்டு வந்தாயா?'' என்றான்.

''இல்லையே? எங்கே இருந்தது?''

''சீனுவின் கட்டிலுக்குக் கீழே இருந்தது. எப்படியோ நமக்குத் தெரியாமல் வாங்கி வைத்திருக்கிறான்'' என்று நரீஷ் சொன்னதும் எனக்கு நரம்புகள் சில்லிட்டன.

''நரீஷ்... நீ... நீ... என்ன சொல்லுகிறாய்?'' என்றேன்.

''மெதுவாய்ப் பேசு. அன்று தூக்க மாத்திரை. இன்று தூக்குக் கயிறு. அவன் மனத்தில் தற்கொலை எண்ணம் உருவாகிக் கொண்டிருக்கிறது!'' என்றான்.

''நரீஷ்!''

''கத்தாதே. உணர்ச்சி வசப்படாமலிரு. இந்த எண்ணத்துக்கு ஆரம்பம் என்ன என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். முளையிலேயே அதை முறியடித்துவிட வேண்டும். பிறகு ஆபத்தில்லை. நீ மனசைக் குழப்பிக் கொள்ளாதே. நான் வழி கண்டுபிடிக்கிறேன்'' என்று நரீஷ் எனக்கு உறுதி கூறினான்.

இதற்குப் பிறகு முன்னைவிட இரட்டிப்புக் கவனத்துடன் சீனுவைக் கண்காணித்து வந்தோம். நாளுக்கு நாள் அவனுடைய உற்சாகம் குறைந்து, தன்னுள் தானே ஆழ்ந்தவனாகி விட்டான். சாப்பாடு, தூக்கம் முதலியன சரியாய் இல்லாததால் உடம்பும் மெலிய ஆரம்பித்தது.

மேலும் ஒரு வாரம் சென்றது. சீனு, நான், நரீஷ் மூன்று பேரும் ஹாலில் டி.வி. பார்த்துக் கொண்டிருந்தோம். இரவு எட்டு மணி இருக்கும். சீனுவின் அம்மா

ஒரு சினேகிதிக்கு உடம்பு சரியில்லை என்று பார்க்கப் போயிருந்தாள்.

டி.வி.யில் ஒரு நாடகம் நடந்து கொண்டிருந்தது. அது அண்ணன் தம்பி பற்றிய நாடகம் என்பதைக் கூடக் கவனிக்காமல் நாங்கள் சீனுவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தோம். அவன் கண்களில் கண்ணீர் பொங்கி, கன்னத்தில் வழிவதைக் கண்டேன். சட்டென்று அவனை அணைத்துக் கொண்டு, ''சீனு! என்ன இது குழந்தை மாதிரி? எதற்கு அழுகிறாய்?'' என்றேன். நரீஷ் அவனுக்கு மறு பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான்.

''தினம் தினம் நான் தூங்குகிற போது ராமு வருகிறானப்பா'' என்றான் சீனு.

எனக்குப் பெரும் அதிர்ச்சி. ஆனால் நரீஷ் அதை எதிர்பார்த்தவன் போல, ''வரட்டுமே? அவன் உன்மீது பிரியம் வைத்திருக்கும் சகோதரன் அல்லவா?'' என்றான்.

''ராமு தினம் என்னைக் கூப்பிடுகிறான்... தன்னோடு வந்து விடும்படி தினம் தினம் அழைக்கிறான்...'' என்று சீனு சொன்னதும் என்னால் தாள முடியவில்லை. ''சீனு!'' என்று கட்டிக் கொண்டேன். ''அதனால்தான் எங்களை விட்டுப் போய்விட முயற்சி பண்ணுகிறாயா? வேண்டாம்டா கண்ணா. போகாதே!'' என்றேன்.

''போகக் கூடாதென்றுதான் முயற்சி பண்ணுகிறேன். ஆனால் நாளுக்கு நாள் ராமுவின் வற்புறுத்தல் அதிகமாகிக் கொண்டிருக்கிறதே அப்பா!''

''சரி, சரி. அலட்டிக் கொள்ளாதே'' என்று சீனுவை அணைத்துக் கொண்டு அவன் படுக்கைக்கு அழைத்துச்

சென்றான் நரீஷ். கொஞ்ச நேரம் பக்கத்திலேயே இருந்து அவன் தூங்கிய பிறகு வெளியே வந்தான்.

''நரீஷ்... இதை எப்படிச் சமாளிப்பது?'' என்று பதறினேன்.

''ஒரு நல்ல மீடியம் கிடைத்தால் ராமுவுடன் பேசலாம்'' என்றான் நரீஷ்.

''மீடியமா?''

''ஆமாம். மீடியம்'' என்று திருப்பிச் சொன்னவன், மேலே சுழன்று கொண்டிருந்த மின்சார விசிறியை நிறுத்தினான்.

''இப்போது விசிறியின் பிளேடுகள் — சிறகுகள் — உனக்கு நன்றாய்த் தெரிகிறது இல்லையா?'' என்றான்.

நான் எதுவும் புரியாமல், ''ஆமாம். மூன்று சிறகு தெரிகிறது'' என்றேன்.

ஸ்விட்சைப் போட்டு ஆன் செய்து, ஒன்றாம் எண்ணில் நிறுத்தினான். ''இப்போது மூன்றும் தனித் தனியே தெரிகிறதா?'' என்றான்.

''கொஞ்சம் கலந்து தெரிகிறது'' என்றேன்.

இரண்டு, மூன்று, நாலு, ஐந்தில் ரெகுலேட்டரைத் தள்ளினான். விசிறி மிக வேகமாகச் சுழல ஆரம்பித்தது. ''இப்போது?''

''தனித்தனியே தெரியவில்லை. ஒரே மொத்தை யாகத்தான் தெரிகிறது'' என்றேன்.

''காரணம், உன் கண்ணின் சக்தியும் விசிறியின் வேகமும் ஒன்றாயில்லை. அதாவது இரண்டும் ஒரே

வேவ் லெங்க்த்தில் இல்லை. ஆகவே தனித்தனியே தெரிய வில்லை. பெரும்பாலோருக்கு அப்படித்தான். ஆனால் வேறு சிலருக்குக் கண்ணின் சக்தி, விசிறியின் எத்தனை வேகத்தையும் சமாளித்து, தனித்தனியே சிறகுகளைக் காண முடியும்.''

''எதற்கு இதையெல்லாம் சொல்கிறாய்?'' என்றேன்.

''சூட்சுமமான பல சக்திகள் இப்படித்தான். சராசரி மனிதராகிய நமக்குப் புலப்படாத சில உருவங்கள், சில தோற்றங்கள், வேறு சிலருக்குப் புலப்படும். அவர்கள் அந்தத் தோற்றத்தோடு பேசக் கூடியவர்களாக இருப்பார்கள். நான் சிலரை அழைத்து வருகிறேன். அவர்களில் யாருக் கேனும் அந்தச் சூட்சும அறிவு இருந்தால், இறந்து போன ராமுவுடன் நாம் பேச முடியும். பேசி அவன் நோக்கத்தை அறிய முடியும்'' என்றான் நரீஷ்.

## 33

''கோஸ்ட் என்றா சொல்கிறாய்?'' என்றேன் நரீஷிடம்.

''ஒருவகையில் கோஸ்ட்தான். ஆனால் அப்படிப் பச்சையாகச் சொல்லவில்லை. மீடியம் என் பார்கள். ஆவி என்று சொல்வதுண்டு. இறந்தவர்களுடன் நேருக்கு நேர் பேசுவதன் மூலம் பல பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ளலாம்... அதுதான் நமக்கு ஒரே வழி'' என்றான் நரீஷ்.

நான் வாயடைத்துப் போனேன். துங்கபத்திரா நதிக் கரையில், ராகவேந்திர சுவாமிகளின் திருத்தலத்தில் நரீஷ் அடுக்கடுக்காகச் சொன்ன கதைகள் எனக்கு நினைவு வந்தன. நமக்குச் சம்பந்தமில்லை என்னும் போது எவ்வளவு

ஆர்வமாக, ஆசையாக அதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தேன்! அதே கோஸ்ட்கள், பிசாசுகள், ஆவிகள், மீடியம்கள் என் வாழ்க்கையில் விளையாடுகின்றன என்னும் போது என் மனம் என்ன பதைப்புப் பதைக்கின்றது!

என் மௌனத்தைக் கண்ட நரீஷ், ''ஏன், உனக்கு நம்பிக்கை ஏற்பட மாட்டேன் என்கிறதா?'' என்று கேட்டான்.

''நம்பிக்கை இல்லாமல் இல்லை. அந்தக் கோர பரிசோதனைகளை நாமும் செய்ய வேண்டுமா என்று தயக்கமாயிருக்கிறது'' என்றேன்.

''சரி, விட்டுவிடு'' என்றான் அவன் கோபத்துடன். ''ஆனால், நான் அப்பட்டமாகச் சொல்லுகிறேனென்று வருத்தப்படாதே. விரைவிலேயே ராமுவைப் பறி கொடுத்த மாதிரி சீனுவையும் பறி கொடுக்க நேரிடும். இஷ்டம்தானா?''

''நரீஷ்!''

''பதற்றப்படாதே. இறந்து போன ராமுவுடன் பேசி, சீனுவுக்குத் தீங்கு நேராதபடி பார்த்துக் கொள்ளலாம். நம்பிக்கையுடன் இரு'' என்றான் அவன்.

இரண்டு நாள் மனத்தைக் குழப்பிக் கொண்டு ஒன்றும் செய்யாமல் இருந்தேன். மூன்றாம் நாள் ஓர் உறவினர் வீட்டுக்குத் துக்கம் விசாரிக்கப் போக வேண்டியிருந்தது. அவர்களுடைய ஒரே மகன் — பள்ளி மாணவன் — முப்பது தோழர்களுடன் வடக்கே உல்லாசப் பிரயாணமாகச் சென்றவன் — கங்கையில் மூழ்கி இறந்து விட்டான். அந்தப் பெற்றோர் அழுத அழுகையும் புலம்பிய புலம்பலும்

என்னை ஓர் உலுக்கு உலுக்கின. இன்னொரு முறை இதே போன்ற துக்கத்தைத் தாங்கிக் கொள்ள என்னால் முடியாது. முடியவே முடியாது என்று உறுதியாகப் புரிந்து விட்டது.

வீடு திரும்பியதும் நரீஷிடம், ''சரி, நீ என்ன செய்ய வேண்டும் என்று நினைக்கிறாயோ அப்படியே செய்'' என்று அனுமதி தந்தேன்.

''உனக்குத் தெரிந்த உறவினர்கள், சினேகிதர்கள், ஏழெட்டுப் பேரை அழைத்து வா. ஆண்களும் இருக்கலாம், பெண்களும் இருக்கலாம். ஐந்து பேரை நான் பார்த்துத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறேன்'' என்றான் நரீஷ்.

மறுநாளே பலரிடம் சொல்லி அழைத்து வந்தேன். நரீஷ் என்ன பரீட்சை பண்ணினானென்று எனக்குப் புரியவில்லை. கையில் விசித்திரமான தாயத்துக் கட்டிக் கொண்டிருப்பவன் அவன். ஆவிகள், பேய்கள் பற்றி நிறையப் படித்திருப்பவன். நேரில் கண்டிருப்பவன். அவனுக்குள் என்னென்ன சக்தி இருக்கிறதோ எனக்கு எப்படித் தெரியும்? அவர்களின் கண்களை உற்றுப் பார்த்தான். ''நீங்கள் இருங்கள்'' என்று சிலரை ஏற்றுக் கொண்டான். ''நீங்கள் வேண்டாம்'' என்று சிலரை ஒதுக்கி விட்டான்.

கடைசியில் ஐந்து பேர் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

''ஞாயிற்றுக்கிழமை காலை தயவு பண்ணி இங்கே வந்து விடுங்கள்'' என்று விடை கொடுத்து அனுப்பினான்.

என் மனைவி ஜகதாவிடம் நான் சுருக்கமாகச் சொன்னேன். முதலில் சிறிது கலவரப்பட்டு, பிறகு சமாதானமானாள். சீனுவிடம் எதுவும் சொல்லவில்லை.

ஞாயிற்றுக்கிழமை காலை அவன் தன் சிநேகிதனொரு வனைப் பார்க்கப் பல்லாவரம் போகப் போகிறேன் என்றான். போய் வா என்று அனுமதி கொடுத்தேன்.

காலை ஒன்பது மணிக்கு மாடியறையில் டைனிங் டேபிளைக் கொண்டு போய்ப் போட்டான் நரீஷ். அதைச் சுற்றிலும் ஐந்து நாற்காலிகளை வைத்தான். எங்கள் இருவருக்கும் அறையின் மூலையில் இரண்டு நாற்காலி களைப் போட்டான். ஜன்னல் கதவுகளைச் சாத்தினான். பக்கத்திலிருந்த வேப்ப மரத்திலிருந்து மெல்லிய காற்று வந்து கொண்டிருந்தது. தெருவின் ஓசைகள் மாடியை எட்டவில்லை.

என் உள்ளத்தில் ஒரு வினோதமான படபடப்பு உண்டாகியிருந்தது. அவன் மௌனமாகக் காரியங்கள் செய்யச் செய்ய அந்தப் படபடப்பு அதிகரித்தது. ஒவ் வொருவராக அழைக்கப்பட்டிருந்தவர்கள் வந்தார்கள். அவர்களுக்கும் இது புதிய அனுபவம். நரீஷ் என்ன செய்யப் போகிறான், என்ன நடக்கப் போகிறது என் பதைப் பற்றி அவர்களுக்கும் திட்டவட்டமான ஐடியா இருக்கவில்லை. என்னைக் கேட்டார்கள். எல்லாம் அவன் பொறுப்பு என்று சொல்லி விட்டேன்.

ஐந்து பேரையும் கூட்டி வைத்துக் கொண்டு நரீஷ் பேசினான். ''ஆவிகளுடன் பேசுவது என்பது எல்லாரா லும் முடிகிற காரியமல்ல. அதற்கு ஒரு தனியான சக்தி — தனியான தன்மை — இருக்க வேண்டும். அது உங்கள் ஒவ்வொருவரிடத்திலும் இருக்கிறது. நீங்கள் கூட்டாகச் சேரும் போது நிச்சயமாய் பலன் கிடைக்கும்.''

பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கு வாத்தியார் சொல்வது போல அவன் பேசியது அவர்கள் முகத்தில் இளமுறுவலைத் தோற்றுவித்தது.

முந்தின தினமே அவன் மெழுகு வாங்கி வைத்திருந்தான். துண்டு துண்டாக வெட்டி, ஒவ்வொரு காலின் கீழும் அவைகளை அடைத்தான். அதாவது, நாற்காலிகள் பூமியை நேரடியாகத் தொடாமல் இன்ஸுலேஷன் போட்ட மாதிரி இருந்தது.

பிறகு அவர்களை, ''இப்படி வாருங்கள்'' என்று வெராந்தாவின் வெய்யிலுக்கு அழைத்தான். அண்ணாந்து சூரியனைப் பார்த்தவாறு நிற்கும்படி சொன்னான். ''நான் சொல்வதைச் சொல்லுங்கள்'' என்று கூறி, ''இங்கே எந்த நோக்கத்துடன் வந்திருக்கிறோமோ அந்த நோக்கம்தான் எங்களுக்குப் பெரிது. எங்களுடைய சொந்தக் கவலைகளையும் சொந்தப் பிரச்னைகளையும் இங்கே வெளியிலேயே விட்டு விடுகிறோம்'' என்று சொல்லச் செய்தான்.

அறைக்குள் சென்று, மேஜையைச் சுற்றி அவர்கள் உட்கார்ந்து கொண்டார்கள். அறைக் கதவைச் சாத்தியதும் உள்ளே முழு இருட்டு பரவியது. ஆனாலும் பகல் வேளையாகையால் லேசான வெளிச்சம் தெரியாமலில்லை. அறையின் மூலையில் போடப்பட்டிருந்த இரண்டு நாற்காலிகளில் ஒன்றில் என்னை உட்காரச் சொல்லி, மற்றதில் தான் உட்கார்ந்தான்.

''இப்போது நாம் செய்யப் போவது கேலியோ விளையாட்டோ அல்ல. இதுவரை நீங்கள் அறிந்திராத, உணர்ந்திராத ஒரு புதிய அனுபவம் உங்களுக்கு ஏற்படப் போகி

றது. அப்படி ஏற்பட வேண்டும் என்ற ஆசையும் ஏற்படும் என்ற நம்பிக்கையும் உங்கள் மனத்தில் உதிக்க வேண்டும். ஒரு வினாடி கடவுளிடம் அதற்காக வேண்டிக் கொள்ளுங்கள்'' என்றான் நரீஷ்.

அந்த வினாடி முடிந்ததும் அவர்கள் கைகளை மேஜை மீது வைத்துக் கொள்ளச் சொன்னான். விரல்களைப் பிரித்த மாதிரி, உள்ளங்கைகள் மேஜையில் நன்கு படும்படி பரத்தி வைத்துக் கொண்டார்கள்.

''நான் இப்போது ஒரு பாட்டுப் பாடுகிறேன். ஒவ்வோர் அடியையும் நீங்கள் திருப்பிப் பாடுங்கள்'' என்றான்.

இருட்டாக இருந்த போதிலும் நான் அவர்கள் முகத்தைக் கவனிக்க முயன்றேன். இது என்ன சிறு பிள்ளை விளையாட்டு என்று அவர்கள் சிரிப்பார்கள் என்று நினைத்தேன். அப்படி எதுவுமில்லை. நரீஷ் எத்தனை சீரியஸாக இருந்தானோ அதே அளவு, அதற்கு மேலாகக் கூட அவர்கள் சீரியஸாக இருந்தார்கள்.

''நீங்கள் பாடி முடித்த சிறிது நேரத்தில் இந்த மேஜை லேசாக ஆடும். உங்கள் கைக்கு அது தெரியும். அப்படி ஆடினால் ஆவி பிரசன்னமாகியிருக்கிறது என்று அர்த்தம்'' என்றான் நரீஷ்.

யாரும் எதுவும் பேசவில்லை. அந்தச் சூழ்நிலையே என்னவோ போலிருந்தது.

'பாட்டு' என்று சொன்னானே தவிர, அது வெறும் நர்ஸரி ரைம் போலத்தான் இருந்தது.

**ஆவி நண்பனே, ஆவி நண்பனே,**
**அருகில் வா. அருகில் வா.**
**நீ இங்கே வந்திருக்கையில்**
**எங்களுடன் பேசு.**
**நீ இங்கே வந்திருக்கையில்**

**நம் உள்ளங்கள் கலக்கட்டும்.**
**உன் ஆவியுலகத்தைப் பற்றி**
**எங்களுக்குச் சொல்லு.**
**ஆவி நண்பனே, ஆவி நண்பனே**
**அருகில் வா, அருகில் வா.**
**எங்கள் இதயத்தை நெருங்கி வா.**
**எங்கள் ஆன்மாவின்**
**ரகசியங்களை**
**அருகில் இருந்து படி.**
**உன்னுடைய நல்ல உள்ளம்**
**எங்கள் உள்ளங்களை ஆளட்டும்.**

*ஒவ்வோர் அடியாக நரீஷ் சொல்லச் சொல்ல, அவர்கள் கோரஸாக அதைப் பாடி முடித்தார்கள்.*

*பின்னர் ஆழ்ந்த மௌனம்.*

*ஒரு நிமிடம், இரண்டு நிமிடம், மூன்று நிமிடமாயிற்று.*

*இது வீண் முயற்சியாக முடியுமோ என்று நான் எண்ணத் தொடங்கிய வேளையில் —*

*யாரோ 'ஆ!' என்று ஒரு மெல்லிய வியப்புக் கூச்சலை வெளிப்படுத்தினார்கள். பென்ஸிலால் மேஜையில் தாளம் போடுவது போல டகடகடகவென்று மேஜை தரையில் மெல்ல ஆடுவது துல்லியமாகக் கேட்டது.*

*அதே சமயம், மேஜையில் எனக்கு நேர் எதிரே உட்கார்ந்திருந்த பெண்ணின் பின்னால் மசமசவென்று ஓர் உருவம் புலப்படுவதைக் கண்டேன். கதவைத் திறந்து கொண்டு அது நுழைந்ததாகவோ ஜன்னல் வழியே பிரவேசித்ததாகவோ தெரியவில்லை. அவளுடைய நாற்காலியின் அடியிலிருந்து குபுக்கென்று எழுந்து நின்ற மாதிரி இருந்தது. நமக்குத் தெரியாமல் தண்ணீருக்கு அடி*

யில் முழுகியிருந்தவன் திடீரென்று மேலே தலையை நீட்டினால் எப்படி இருக்குமோ அது போல.

இப்போதும் யாரும் எதுவும் பேசவில்லை. அந்த மசமசத்த உருவம் சிறிது சிறிதாக அடங்கி, அந்தப் பெண்ணுக்குள் புகுந்து கொண்ட மாதிரி தோன்றியது. அவள் தலையைச் சுற்றி ஒரு மங்கலான வெளிச்ச வட்டம் தெரிந்ததே தவிர வேறெதுவும் புலப்படக் காணோம்.

நான் மட்டுமல்ல. அறையிலிருந்த எல்லோருமே அந்த அதிசய உருவத்தைப் பார்த்தார்கள். என்னைப் போலவே எல்லோரும் பிரமிப்பினால் பேச்சிழந்து போனார்கள்.

நிசப்தத்தை முதலில் கலைத்தவன் நரீஷ்தான். ''ராமு! ராமுதானே நீ?'' என்றான் நிதானமாக, அழுத்தமான, பதட்டமில்லாத குரலில்.

''ஆமாம். நான் ராமுதான்'' என்று பதில் வந்ததுமே —

நான் குபீரென்று என் நாற்காலியிலிருந்து துள்ளி எழுந்தேன். சட்டென என்னை அழுத்தி உட்கார்த்தினான் நரீஷ். என் தொண்டையிலிருந்து கிளம்பவிருந்த கூச்சலையும் வாயைப் பொத்தியதன் மூலம் அடக்கி விட்டான்.

எந்தவித இடைஞ்சலும் ஏற்படக் கூடாதென்ற அவனுடைய எண்ணத்தைப் புரிந்து கொண்டேன். என்னைக் கட்டுப்படுத்திக் கொண்டேன். ஆனாலும், 'ஆமாம் — நான் ராமுதான்' என்ற பதில் என்னை அயர வைத்து விட்டது. ஏனெனில், அது என் ராமுவின் குரலேதான்! இறந்து போன என் அருமை மகனின் குரலேதான். ஆனால் ஒரு பெண்ணுக்குள்ளிருந்து — அவள் கண்டத்திலிருந்து — அந்தக் குரல் வெளிப்பட்டது. அந்த அதிர்ச்சியைத்தான் என்னால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

''ராமு, சௌக்கியமாக இருக்கிறாயா?'' என்றான் நரீஷ்.

''இருக்கிறேன்'' என்று பதில் வந்தது.

''உன்னுடைய உலகம் எப்படி இருக்கிறது?''

''ஆனந்தமாக இருக்கிறது. இங்கே எந்தக் கஷ்டமும் இல்லை. எந்தப் பிரச்னையும் இல்லை.''

''ரொம்ப சந்தோஷம், ராமு. ஆனாலும் உனக்கு ஏதோ மனக்குறை இருப்பது போல் தோன்றுகிறதே?''

''உண்மை.''

''என்ன குறை?''

''என் தம்பி சீனுவை விட்டுப் பிரிந்திருக்கிறேன் என்ற குறை.''

''அதற்கு என்ன செய்ய முடியும்? கடவுள் உன்னைச் சீக்கிரம் அழைத்துக் கொண்டு விட்டார். அவனைப் பிற்பாடுதான் அழைத்துக் கொள்வார்.''

மௌனம்.

''ராமு, நீ அடிக்கடி சீனுவைப் பார்க்கிறாயா?''

''எப்போதும் பார்க்கிறேன்.''

''அடிக்கடி அவனை உன் உலகத்துக்குக் கூப்பிடு கிறாயா?''

''எப்போதும் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறேன்?''

''அது தப்பில்லையா ராமு?''

மௌனம்.

''உன் அப்பா உன்னை விட்டுப் பிரிந்ததில் எத்தனை துக்கமாய் இருக்கிறார் என்று உனக்குத் தெரியுமில்லையா?''

மௌனம்.

''நீ சீனுவையும் உன்னுடன் அழைத்துக் கொண்டு விட்டால் உன் அப்பாவின் துக்கம் எத்தனை அதிகமாகும் என்று உனக்குத் தெரியவில்லையா?''

''என்னால் அவனைப் பிரிந்திருக்க முடியவில்லை'' என்று பதில் வந்தது.

''அமைதியாக, பொறுமையாக, யோசித்துப் பார், என்ன?''

மீண்டும் ஒரு பிடிவாதமான மௌனம் நிலவியது.

''உன் சகோதரன் மீது உனக்கு உண்மையான பாசம் இருக்குமானால் நீ செய்ய வேண்டியது என்ன தெரியுமா?''

மௌனம்.

''அவனை உன்னிடம் அழைத்துக் கொள்வதல்ல. இந்த உலகத்திலேயே அவன் பயனுள்ள வாழ்க்கை வாழ்வதற்கு அவனுக்கு நீ உதவி செய்வதுதான் உன் பாசத்துக்கு அடையாளம். அன்புக்கு அடையாளம். இனிமேல் அவனை உன்னிடம் கூப்பிடாதே, ராமு. என்ன?''

நீண்ட நேரம் நிசப்தம் நிலவியது. ஒவ்வொருவராக இருக்கை கொள்ளாமல் தவிக்க ஆரம்பித்தார்கள். நான் ஒருவன்தான் என்ன பதில் கிடைக்கப் போகிறதோ என்று ஆவலுடன் காத்திருந்தேன். என் வாழ்க்கையும், என் மனைவியின் வாழ்க்கையும், என் மகனின் வாழ்க்கையும் அந்தப் பதிலைப் பொறுத்துத்தான் இருக்கிறது என்று தீவிரமாக நம்பியதால் மூச்சைப் பிடித்துக் கொண்டு பார்த்தவாறிருந்தேன்.

திடுப்பென்று மேசை மறுபடியும் கடகடவென்று ஆடியது. எந்தப் பெண்ணிடமிருந்து நரீஷின் கேள்விகளுக்குப் பதில்கள் வந்து கொண்டிருந்ததோ அவள் நாற்காலியில் சற்றே சாய்ந்த மாதிரி இருந்தது. அதே வினாடி அவளுக்குள்ளிருந்து ஒரு ஒளி வெளியேறி ஜன்னல் வழியே பாய்ந்து ஓடினாற் போல் இருந்தது.

இரண்டு நிமிடம் கழித்து நரீஷ் . எழுந்தான். ஜன்னலையும் வாசல் கதவையும் திறந்தான். அந்தப்

பெண்ணைப் பார்த்தேன். முகத்தில் முத்து முத்தாக வியர்த்திருந்தது. ஜுரத்திலிருந்து எழுந்தவள் போலிருந்தாள்.

''என்ன நேர்ந்தது எனக்கு?'' என்றாள் கண்களைக் கசக்கிக் கொண்டு.

''உனக்குத் தெரியாதா?'' என்றேன்.

''மேஜைமீது கை வைத்திருந்ததுதான் தெரியும். பிறகு கண்களை இருட்டிக் கொண்டு மயக்கமாய் வந்தது.''

நரீஷ் அமைதியுடன், ''உனக்கு மிகவும் நன்றி. எந்த ஆவியுடன் நாங்கள் பேச விரும்பினோமோ அது உன் மூலம் பேசி விட்டது'' என்றான்.

வெளியேயிருந்த வேப்ப மரம் குளிர்ந்த காற்றை அனுப்பியது. வெய்யில் பளீரென்று வீசி, நடந்ததெல்லாம் கனவோ என்ற பிரமையை ஏற்படுத்தியது. மாடியின் கீழே ஜகதா ஆவலுடன் நின்றிருந்தாள். என் முகத்தை நோக்கி 'என்ன ஆயிற்று?' என்று கண்களால் வினவினாள். எனக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. என்ன விடை கிடைத்தது என்று எனக்கே தெரியாத போது அவளுக்கு என்ன சொல்ல முடியும்?

வந்திருந்தவர்களுக்குக் குளிர் பானம் கொடுத்து, நன்றி கூறி அனுப்பி வைத்தோம்.

''ராமுவுடன் பேசினேன், ஜகதா'' என்றேன்.

''நிஜமாகவா?'' என்றாள் நம்ப முடியாத குரலில். ''என்ன சொன்னான்?''

''அதைப் பற்றி நாம் விவாதிப்பது தேவையில்லை'' என்றான் நரீஷ். ''நாம் கேட்டுக் கொண்டு விட்டோம். நடப்பது நடக்கட்டும்.''

அதன்பின் ஒரு வாரம் ஓடியது. வீட்டில் எந்த மாறுதலும் தெரியவில்லை. சீனு தன் பாட்டுக்கு தன் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தான். ஏதோ

நேரப் போகிறது என்ற அச்சமும் ஸஸ்பென்ஸும் என்னுள் வளரத் தொடங்கின.

நரீஷுக்குச் சென்னையில் வேலைகள் முடிந்து விட்டன. ஊருக்குக் கிளம்பும் தினமும் வந்தது. வாசலில் ஆட்டோ வந்து நின்றது. நாங்கள் அனைவரும் வழியனுப்பி வைத்தோம்.

''சீனு, என் ஹோல்டாலை மேஜை மேல் வைத்து விட்டேன். எடுத்து வா'' என்றான் நரீஷ்.

தன்னை மறந்துதான் அப்படிச் சொன்னான். ஒரு கையில்லாத பிள்ளையிடம் அப்படிச் சொல்லி விட்டோமே என்று அவன் நாக்கைக் கடித்துக் கொண்ட அதே கணம், இப்படி இங்கிதமில்லாமல் பேசி விட்டானே என்று நானும் ஜகதாவும் மனத்துக்குள் புழுங்கிய அதே கணம்

அந்த அதிசயம் நிகழ்ந்தது.

உள்ளே போன சீனு, அந்தக் கனமான ஹோல்டாலை இரண்டு கைகளாலும் தூக்கி எடுத்து வந்தான்!

அதாவது, வலது கை பிடித்திருந்தால் ஹோல்டால் எப்படி நிற்குமோ அதே போன்று சாயாமல் நேராய் இருந்தது! சீனுவின் மொக்கைக் கை மொக்கைக் கையாகவே இருந்த போதிலும், எங்கள் கண்ணுக்குத் தெரியாத இன்னொரு கை அங்கே ஹோல்டாலைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருந்தது.

எங்களுடைய பிரமித்த விழிகளைப் பார்த்தபின்தான் அவனுக்கும் அந்த உண்மை உறைத்தது போலும். சில நிமிடங்களுக்கு அவனிடமிருந்து பேச்சு வரவில்லை. ''அப்பா... வந்து... யாரோ இங்கே... இந்தண்டைப் பக்கத்தில்... எனக்காகப் பிடித்துக் கொண்டிருக்கிற மாதிரி இருக்கிறது'' என்றான்.

ஆட்டோவில் உட்கார்ந்து விட்ட நரீஷ் இறங்கி வந்தான். ''யாரோ இல்லை, சீனு. அவன் ராமு. உன் அருமைச் சகோதரன். எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி உன் வாழ்வைச் செம்மைப்படுத்த முன்வந்திருக்கிறான். இனி அவன் கரம் உனக்குக் கரமாக விளங்கும். எல்லாம் ஆண்டவன் அருள்'' என்று கூறி விட்டுக் கண்களைத் துடைத்துக் கொண்டு ஆட்டோவில் ஏறிப் புறப்பட்டு விட்டான்.

அன்று முழுதுமல்ல, மறுநாள் முழுதுமல்ல, அந்த வாரம் முழுதும் அந்த அதிசயத்தைப் பார்த்துப் பார்த்துப் பிரமித்தோம். கொஞ்சம் கொஞ்சமாகத்தான் பிரமிப்பு நீங்கியது. உலகத்தாருக்கு — ஏன், எங்கள் யாருக்குமே — ராமுவின் கை கண்ணுக்குப் புலப்படவில்லை. ஆனால் அது எப்போதும் சீனுவிடம் இருக்கிறது. அவனுக்காகப் புத்தகத்தில் பக்கத்தைப் புரட்டிக் கொடுக்கிறது. மேஜையை நகர்த்துகிறது. படம் மாட்ட ஆணி அடிக்கிறது. தண்ணீர் பம்ப் அடிக்கிறது. அம்மாவுக்கு உதவியாகச் சமையலறையில் பாத்திரங்களை அடுப்பிலிருந்து ஏற்றி இறக்குகிறது.

சீனுவுக்குள் ராமு வாழத் தொடங்கி விட்டான்.

நான் யாருக்கு நன்றி சொல்லட்டும்? திரும்பத் திரும்ப அந்தத் துங்கபத்ரா தெய்வத்தின் நினைவே வருகிறது. திரும்பத் திரும்ப அந்த ஒரு சுலோகமே என் நாவில் வளைய வருகிறது.

'பூஜ்யரும், சத்தியத்தையும் தர்மத்தையும் காப்பவரும், கல்பக விருட்சத்தைப் போன்றவருமான ராகவேந்திர சுவாமிகளைத் தொழுகிறேன். தெய்வப் பசுவான காமதேனுவை நிகர்த்தவருக்கு என் நமஸ்காரங்கள்.'

— நிறைந்தது —